# கொலை மறுத்தல்
# வைராக்கிய சதகம்
# வைராக்கிய தீபம்
# அவிரோத உந்தியார்







ஆசிரியர்
தவத்திரு. சாந்தலிங்க அடிகளார்
உரையாசிரியர்
திருப்போரூர் தவத்திரு. சிதம்பர சுவாமிகள்

உ

குருவே துணை

# வைராக்கிய தீபம்

ஆசிரியர்

**தவத்திரு. சாந்தலிங்க அடிகளார்**

உரையாசிரியர்

**போரூர் தவத்திரு. சிதம்பரசுவாமிகள்**

மேற்கோள் – பாடல்கள் குறிப்புரை

பேராசிரியர் வே. செல்லாத்தாள்

த.சா.அ.க.அ. தமிழ்க்கல்லூரி, பேரூர்.

தவத்திரு. சாந்தலிங்க அடிகளார் திருமடம்

பேரூர், கோவை – 641 010.

# நூல் விவரக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | வைராக்கிய தீபம் |
| ஆசிரியர் | : | தவத்திரு. சாந்தலிங்க அடிகளார் |
| உரையாசிரியர் | : | திருப்போரூர் தவத்திரு. சிதம்பர சுவாமிகள் |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு ஆண்டு | : | 2009 |
| பக்கங்கள் | : | 144 |
| தாள் | : | 18.6 மேப்ளித்தோ |
| நூல் அளவு | : | டெம்மி 1/8 |
| எழுத்து | : | 12 பாயிண்ட் |
| கட்டமைப்பு | : | செக்சன் பைண்டிங் |
| பதிப்பாசிரியர் | : | தவத்திரு. மருதாசல அடிகளார் |
| வெளியீடு | : | சாந்தலிங்க அடிகளார் சத்வித்யா சன்மார்க்க சங்க அறக்கட்டளை, பேரூராதீனம், பேரூர், கோவை - 641 010. தொலைபேசி : 0422 - 2607995 |
| விலை | : | ரூ. 100 |
| அச்சிட்டோர் | : | வேம் அச்சகம், 17, அம்பிகா நகர், துடியலூர், கோவை - 641 034. போன் : 0422 -2642164 |

உ

சிவமயம்

## பதிப்புரை

தவத்திரு. **மருதாசல அடிகளார்**
இளைய பட்டம், பேரூராதீனம்
பேரூர்.

தவத்திரு. சாந்தலிங்க அடிகளார் பேரூராதீனத்தின் குருமுதல்வர் பதினேழாம் நூற்றாண்டில் தலைசிறந்த வீரசைவ ஞானியாக விளங்கிய சிறப்புக்குரியவர். சமயங்களுக்கு இடையே பகைமை பாராட்டாத பண்பாளர். இவரது வரலாற்றைப் புலவர் புராணத்துள் வண்ணச்சரபம் தவத்திரு. தண்டபாணி அடிகளார் பாடியுள்ளார்.

தவத்திரு. சாந்தலிங்க அடிகளார் மக்கள் மெய்யறிவு பெற்று உய்யும் வண்ணம் நான்கு அருள் நூல்களை அருளியுள்ளார். அவை கொலைமறுத்தல், வைராக்கியசதகம், வைராக்கியதீபம், அவிரோத உந்தியார் எனபன. இந்நூல்களுக்கு அவர் காலத்திலேயே திருப்போரூர் தவத்திரு. சிதம்பரஅடிகளாரால் ஒப்பற்ற உயர்ந்த உரைகள் செய்யப்பட்டன.

இந்நான்கு நூல்களும் உரையுடன் இத்திருமடத்தில் தவத்திரு. மாணிக்க அடிகளார் தலைவராய் இருந்த பொழுது தனித்தனியாகவும் ஒரே தொகுப்பாகவும் 1966-ல் வெளியிடப்பட்டன. அதற்குப் பின்னர் காலம்தோறும் பல்வேறு பதிப்புக்கள் வெளிவந்தன.

தவத்திரு. சாந்தலிங்க அடிகளார் நூல்கள் வேதாந்த மடங்களிலும் கற்பிக்கப்பெறும் சிறப்புக்குரியன. இக்காலத்துக்குப் பெரிதும் தேவையான சமய நல்லிணக்கத்துக்கு அடிகளார் அப்போதே வழிகாட்டியவர். அவரது அவிரோத நெறி எக்காலத்துக்கும் ஏற்றது. ஆதலின், இந்நூல்கள் பரவலாக எல்லோராலும் கற்கப்பெறுகின்றன. இந்நிலையில் முன்னைய பதிப்புக்கள் முற்றும் செலவாகிவிட்டன. ஆதலின் மீண்டும் இந்நூல்களைத் திருமடத்தின் வாயிலாகப் பதிப்பித்து வெளியிடுகின்றோம். அம்முறையில் வைராக்கியதீபமும் இப்போது வெளிவருகிறது.

இந்நூலினை உணர்ந்த மகான் வண்ணச்சரபம் தண்டபாணி அடிகளார் " பெற்றதனைக் கீழாக்கிப் பெறாததனை மேலாக்கும், குற்றமுயிரின் குணம் என்றோர் பாசுரத்திற் சொற்றனன் அவ்வாறு பல சொற்கள் உலகந்தனை விற்றளித் திட்டாலும் விலை மேவா" என்று போற்றிப் பாராட்டி உள்ளார். இத்தகைய உயர்ந்த ஞான நூலை தவத்திரு. சாந்தலிங்கப் பெருமான் திருக்குட நன்னீராட்டு நடைபெறும் இச்சமயத்தில் (8-3-2009) வெளியிட திருவருள் கூட்டிவைத்துள்ளது.

இந்நூலைச் சிறந்த முறையில் அச்சிட்டுக் கொடுத்த துடியலூர் 'வேம்' அச்சகத்தாருக்கும், அணிந்துரை நல்கிய நம் கல்லூரியின் மேனாள் முதல்வர் முனைவர் ர. வையாபுரி ஐயா அவர்களுக்கும் நெறிப்படுத்திய கல்லூரி முதல்வர் ம. மனோன்மணி அவர்களுக்கும் இந்நூற்பதிப்பில் மேற்கோள் பாடல்களுக்கு சிற்றுரை எழுதியதோடு உடனிருந்து மெய்ப்புகளைத் திருத்தி உதவிய முனைவர். வே. செல்லாத்தாள் அவர்களுக்கும், முனைவர். கா. நாகராசு அவர்களுக்கும் நம் பாராட்டும் வாழ்த்தும் உரியன.

அன்பர்கள் இந்நூலைக் கற்றுணர்ந்து பயன்பெறுக என்று அருள்மிகு சாந்தலிங்கப் பெருமானை வேண்டி வாழ்த்துகிறோம்.

அன்புள்ள

தவத்திரு. மருதாசல அடிகளார்

பேரூர்.
8-3-2009

உ

சிவமயம்

# அணிந்துரை

முனைவர். ர. வையாபுரி அவர்கள்
மேனாள் முதல்வர்
த.சா.அ.க.அ. தமிழ்க்கல்லூரி, பேரூர்

அருள்மிகு சாந்தலிங்க அடிகளார் அருளிய நூல்கள் நான்கனுள் இரண்டு நூல்கள் வைராக்கிய என்னும் அடையடுத்த பெயருடையனவாக விளங்குகின்றன.

வைராக்கிய தீபம் என்னும் இந்நூல் பெயர் வைராக்கியமாகிய தீபம் என விரியும். வைராக்கிய தீபம் என உருவகிக்கப்பட்டுள்ளது. இத்தீபம் ஆன்மாவின் உணர்வாகிய கண்ணுக்கு ஒளிதந்து உதவும். அவ்வொளியினால் யான், எனது என்னும் பாச இருள் நீங்கும். எல்லாமாக விளங்கும் பிரமப்பொருள் தெளிவாகக் காட்சிப்படும். இதுவே இந்நூலின் பயன்.

வைராக்கியம் - ராகம் - வி+ராகம் = விராகம் - வைராக்கியம் எனவரும். பாசப் பொருள்களின் மேல் பற்றுச் செய்யாமல் அவற்றினின்று நீங்கும் தன்மை வைராக்கியம் எனப்படும். உலக வழக்கில் கொள்கைப்பிடிப்பு என்னும் பொருளில் இச்சொல் வழங்கப்படுகிறது.

ராகம் - ஆசை. இது ஆன்மாவின் இச்சாசத்தியைக் குறிப்பது. இதனைத் தூண்டுகின்ற தத்துவமும் ராகம் எனப்படும். ஆன்மாவின் இச்சாசத்தியை அதனுடைய கன்ம அனுபவத்திற்கேற்ப இறைவனுடைய திரோதான சத்தி தூண்டிச் செலுத்தும் பொழுது பாசப்பொருள்களின் மேல் ஆசை நிகழும். இது பாச ராகம் எனப்படும். இது புத்தி குணபாவங்களுள் ஒன்று. படிப்படியாகப் பாசப்பொருள்களின்மேல் பற்று நீங்கினால் அது பாசவைராக்கியம் எனப்படும். இப்பாச வைராக்கியமே இந்நூலின் திரண்ட கருத்து.

இங்ஙனம் பாசவைராக்கியம் அடைந்த ஆன்மாவின் இச்சா சத்தியை இறைவனுடைய திருவருள் சத்தி செலுத்தும் பொழுது அவ்வான்மாவுக்குச் சிவத்தின் மேல் ஆசை நிகழும். இது சிவராகம் எனப்படும். இச்சிவராகம் ஆன்மா தன் முயற்சியால் அடையக்கூடியதன்று. இறைவனுடைய திருவருளாலே அடையக் கூடியது. பாசங்கள் இவை எனவும் அவற்றின்மேல் நிகழும் பற்றினை

விடுதல் வேண்டும் எனவும் விடுவதற்கு வழி இது எனவும் நூலறிவாலும் குரு உபதேசத்தாலும் உணர்ந்து ஆன்மா அந்நிலை தனக்குக் கைவருதல் வேண்டும் என இறைவனிடம் பத்தி செய்து முறையிடுதல் வேண்டும். அதற்கும் வைராக்கியம் வேண்டும்.

ஆதலின் ஈசுர பத்தியை உணர்த்தும் நூலும் வைராக்கிய சதகம் வைராக்கியபத்தி சதகம் என வழங்கப்படுவதாயிற்று. வைராக்கியமும் பத்தியும் ஒன்றை ஒன்று சார்ந்தே உள்ளன.

வைராக்கிய தீபம் என்னும் நூலில் திருக்குறள் அதிகாரப் பெயர் அதிகாரம் இடம் பெற்றிருக்கும் இயல்களின் பெயர் போன்றவற்றால் அறியப்படும் குறிப்பு இன்னது என விளக்கப்பட்டிருக்கின்றது.

பற்றின்வகை, யோகத்தின்வகை, ஞானத்தின்வகை ஆகியவை நன்கு விளக்கப்பட்டுள்ளன. உண்மையான ஆபத்சந்நியாசம் என்பது இத்தகையது என்பது விளக்கப்பட்டுள்ளது.

குரு எவ்வாறு இருத்தல் வேண்டும்? 1. கயிலாயபரம் பரையைச் சார்ந்தவராக இருத்தல் வேண்டும். 2. உயிர்களிடத்து அருளுடைமை முதலிய நான்கு குணங்களும் ஒருக்கொண்டு வந்தாற்போல் இருத்தல் வேண்டும். 3. எப்பொழுதும் வேதாந்த மகாவாக்கியங்களை ஓதிக்கொண்டிருத்தல் வேண்டும். 4. செங்குவளை மலர்மாலை அணிந்திருத்தல் வேண்டும். 5. தம்மை நாடிவருபவர்களுக்குத் தமது திருவடிகளைப் புகலிடமாக அளித்தல் வேண்டும். 6. திரு நோக்கு முதலிய தீக்கை செய்பவராக இருத்தல் வேண்டும்.

இந்நூல் குருவினுடைய புகழைப்பழிப்பதுபோல் புகழ்ந்திருப்பது மிகவும் சுவையான பகுதி. குரு 1. மிகவும் கொடியவர். 2 ஈசுரபத்தியில்லாதவர். 3 பெரிய குடும்பி. 4. மடமை மிக உடையவர் என்று பழிப்பதுபோல் புகழ்புலப்படுத்தியிருக்கும் மிகவும் சுவையானது.

குருவினை அடைந்த மாணாக்கர் எவ்வாறு நடந்து கொள்ளுதல் வேண்டும் என்பது இந்நூலில் நன்கு விளக்கப்பட்டுள்ளது. இவர் கூறிய இலக்கணத்துக்கேற்ப இவருக்கு குமாரதேவர் மாணாக்கராக அமைந்தார் என்பது இவர் வரலாற்றில் அறியப்படும் மிக வியப்பான செய்தியாகும்.

துறவிகள் பிச்சை ஏற்கும் முறை, உணவு உண்ணும்முறை, ஊரவரிடத்து நடந்து கொள்ள வேண்டிய முறை எனத் துறவு நெறிக்குரிய செய்திகள் மிகப் பல இந்நூலில் கூறப்பட்டுள்ளன.

இந்நூல் இவ்வளவு சிறப்புடையது என்றால் இதற்குத் தவத்திரு. சிதம்பர சுவாமிகளின் உரையோ மிக மிகச்சிறப்புடையது.

நூறுபாடல்களால் அமைந்த இந்நூலுக்கு எழுதப்பட்டுள்ள உரையில் இருபத்தெட்டுக்கும் மேற்பட்ட நூல்களிலிருந்து எழுபத்து மூன்றுக்கும் மேற்பட்ட பாடல்கள் மேற்கோளாகக்கொடுக்கப்பட்டுள்ளன.

தவத்திரு. சாந்தலிங்க அடிகளார் திருமடத்தினர் இந்நூல்களைத் தனித்தனியாகவும், ஒன்று சேர்த்தும், ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தும் பலபதிப்புகள் பலமுறை வெளியிட்டுள்ளனர்.

இப்பொழுது வரும் இப்பதிப்பில் மேற்கோள் பாடல்களுக்கும் எளிமையும் சுருக்கமும் உடைய பொருள் எழுதிச் சேர்த்துள்ளனர். அவ்வகையில் இப்பதிப்பு மிகவும் சிறப்புடையதாக விளங்குகின்றது.

இங்ஙனம் உரை எழுதிய பேராசிரியர் பயில்பவர்களின் பாராட்டுக்கு உரியவராவார்.

முப்பொருளின் உண்மையினை உணர்ந்து கொள்ள விரும்புபவர் ஞான நெறியால் நிற்க விரும்புபவர்; பொதுவாகத் தத்துவ ஞான இலக்கியங்களைச் சுவைக்க விரும்புபவர் அனைவரும் இந்நூலினால் பெரும்பயன் பெறுவர் என்பது உறுதி.

இந்நூல்களை அவ்வப்பொழுது வெளியிட்டுத் தத்துவஞான உலகுக்கு உதவி செய்துவரும் கயிலை முனிவர் தவத்திரு. சாந்தலிங்க இராமசாமி அடிகளார் அவர்களுக்குத் தத்துவஞான உலகம் என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளது.



## பொருளடக்கம்

உ

திருச்சிற்றம்பலம்

# வைராக்கிய தீபம்

## மூலமும் உரையும்

## - பாயிரம்

### பிள்ளையார் வணக்கம்

ஆரணமுகம்புகழ் வாரணந்துதிசெய்
காரணசுகபரி - பூரணம் வருமே

ஆரணமுகம் புகழ் வாரணம் துதிசெய்
காரண சுகபரி பூரணம் வருமே

### சுப்பிரமணியர் வணக்கம்

போரூரிறைவன் - சீரூர்தாளை
ஏரூர்தரநினை - நேரூர் நெஞ்சே

போரூர் இறைவன் சீரூர் தாளை
ஏரூர் தரநினை நேரூர் நெஞ்சே

### நூலாசிரியர் வணக்கம்

ஆய்ந்தவின்பம் வாய்ந்துளம் நிறையச்
சாந்தையன் பதம் - யாந்தொழுவோமே

ஆய்ந்த இன்பம் வாய்ந்து உளம் நிறையச்
சாந்தஐயன் பதம்யாம் தொழுவோமே.

### குருவணக்கம்

தாயினு மிரங்கியென்ற னைவந் தாண்டருள்
தூயவன் சரணமே சுமக்க வென்றலை
வாய்துதி செயக்கர மலர்க டூய்த்தொழ
நேயமோ டநுதினம் நினைக நெஞ்சமே

தாயினும் இரங்கி என்தனை வந்து ஆண்டருள்
தூயவன் சரணமே சுமக்க என்தலை
வாய்துதி செயக் கரமலர்கள் தூய்த்தொழ
நேயமோடு அநுதினம் நினைக நெஞ்சமே.

## கடவுள் வணக்கம்

திருவளர் கமலத் தயன்செயிப் புவிமுன்
　　றிகழ்தரு முலகெலாந் தன்பான்
மருவுசிற் சத்தி யெனுங் கிரணத்தால்
　　வந்தெழு கானனீ ராக
விருமையா மதிமாய்த் தறிஞராங் காந்தத்
　　திடையருட் சுட *ருமிழ்ந் திலங்கு
மொருசிவா தித்தன் றனைநம திருள்போ
　　யொழியநா டொறுமிறைஞ் சிடுவாம். 1

*திருவளர் கமலத்து அயன் செய்இப்புவி முன்*
　　*திகழ்தரும் உலகெலாம் தன்பால்*
*மருவுசிற் சத்தி எனும் கிரணத்தால்*
　　*வந்துஎழு கானல் நீராக*
*இருமையாம் மதிமாய்த்து அறிஞராம் காந்தத்து*
　　*இடைஅருள் சுடர் உமிழ்ந்து இலங்கும்*
*ஒருசிவா தித்தன் தனை நமது இருள்போய்*
　　*ஒழிய நாள்தொறும் இறைஞ் சிடுவாம்*

---

உமிழ்ந்து - பிறவினைப் பொருளில் வந்தது

---

*எ-து : அழகு வளரா நின்ற தாமரை மலரின்கண் எழுந்து அருளி இருக்கின்ற பிரமனாலே சிருட்டிக்கப்பட்ட இந்தப் பிருதிவி தத்துவ முதலாக நாதத்துவம் ஈறாக விளங்கா நின்ற பிரபஞ்சம் எல்லாம் தன்கட் பொருந்திய சிற்சத்தியாகிய கிரணத்தினாலே வந்து தோன்றின கானல்சலமாக, அறிஞர்களது துவித புத்தியாகிய சந்திரன் ஒளியை மறைத்து அவர்களாகிய காந்தக்கற்களிடத்துக் கிருபையாகிய அக்கினியைத் தோன்றச் செய்து, விளங்கா நின்ற ஒப்பற்ற சிவசூரியனை நமது அஞ்ஞானமாகிய இருள்போய் நீங்கும்படி எக்காலமும் வணங்குவாம். என்றவாறு.*

*சூரியனை விட்டு நீங்காத கிரணமும், அக்கிரணத்தை விட்டு நீங்காது பொய்யாய்த் தோன்றுகின்ற கானல்சலமும் அச்சூரியனது மிகுந்த பிரகாசத்தினாலே சந்திரப்பிரகாசம் மறைதலும் காந்தக்கல்லினிடத்து அக்கினி தோன்றுதலும் அவனது சன்னிதியில் இயல்பாய் உண்டாவதுபோல் சிவனைவிட்டு நீங்காத அபின்னாசத்தியும் அச்சத்தியை விட்டு நீங்காது பொய்யாய்த் தோன்றுகின்ற பின்னாசத்தியும் அச்சிவனது ஞானத்தினாலே அறிஞரது துவிதபுத்தி மறைதலும் அவரிடத்து அருள் தோன்றுதலும் இவனது சன்னிதியில் இயல்பாய் உண்டாம் என்பதும் சீவனும் ஈசுவரனும் பின்னா சத்தியிலிருத்தலினாலும் அப்பின்னாசத்தி பொய்யாத்தோன்றுதலினாலும்*

அப்பின்னா சத்தி சிவனது பிரகாசம் ஆதலினாலும் இச்சிவனாகிய சத்திமானை விட அச்சத்திகள் வேறு அல்லாமையாலும் பொருளொன்றென்பதும் கண்டு கொள்க. சூரியனைக் கண்டபோர்க்குப் பூதவிருள் நீங்குதல்போல் சிவனை எக்காலமும் வணங்குவோர்க்கு அஞ்ஞானம் நீங்குமாதலின் நமது இருள் போயொழிய நாடொறும் இறைஞ்சிடுவாம் என்றார்.

துன்னியா ணவப்பாம் பெமதறி வெனுமோர்
சுடர்கெழு பூரண மதியை
முன்னமே தீண்டிற் றொளிவெளிப் படலான்
மோசன காலமெய் தியதாற்
தன்னிடத் தீசன் முதற்புவி முடிவெண்
டருநுரை யாதிவந் தொடுங்கப்
பின்னைய பினையாந் திரைகள்வீ சிடுமோர்
பிரமவே லையிலினிப் படிவாம் 2

துன்னி ஆணவப் பாம்பு எமது அறிவெனும் ஓர்
சுடர்கெழு பூரணமதியை
முன்னமே தீண்டிற்று ஒளிவெளிப் படலாள்
மோசன காலம் எய்தியதால்
தன்னிடத்து ஈசன் முதல்புவிமுடிவு எண்
நுரை ஆதிவந்து ஒடுங்கப்
பின்னைய பினையாம் திரைகள் வீசிடும் ஓர்
பிரமவேலையில் இனிப் படிவாம்.

எ-து : ஆணவமாகிய பாம்பு செறிந்து எமது அறிவாகிய ஒப்பற்ற ஞானப்பிரகாசம் பொருந்திய பரிபூரண சந்திரனை அநாதியே மறைத்தது. இப்போது ஞானப்பிரகாசம் விளங்குதலின் விடுதலைக்காலம் வந்து பொருந்தியது ஆகையால் தனது இடத்து நாததத்துவ முதலும் பிருதிவிதத்துவம் ஈறுமாக எண்ணப்பட்ட நுரை திவலை குமிழிகள் தோன்றி ஒடுங்கும்படி பின்னாசத்தி அபின்னா சத்திகளாகிய இரண்டலைகளை வீசா நின்ற ஒப்பற்ற பிரமசாகரத்திலே இனி மூழ்குவாம். என்றவாறு,

உயிரினது இச்சா ஞானக்கிரியையாகிய சந்திரனை அநாதியிலே மறைத்த ஆணவமாகிய பாம்பு, இப்போது விடுதலையாக ஞானப்பிரகாசம் விளங்குதலின் இனிப்பிரமத்தை அடையலாம் என்பது துணிந்து பிரம வேலையில் இனிப் படிவாம் என்றார். பின்னாசத்தியால் அநேகமாகக் காண்குதல் அபின்னாசத்தியால் ஏகமாகக் காண்குதல். இங்ஙனம் ஏகாமாகக் காண்குதலும் ஒரசைவாகலின் இச்சத்தியையும் அலையாகக் கூறினாரென்க. நுரை திவலை குமிழிகளென்றது தத்துவங்களையும், நானாவாகிய தேகங்களையும், அண்டங்களையும்

எனக்கொள்க.

## அருளிறை வணக்கம்

எப்பொருள் களுமா யொப்புயர் வின்றி
யிருந்ததன் னுருவிறை குறையா
தப்படி யிருக்க வாலியா நீரி
னருளிறை யாயெமக் கேம
வைப்பென வன்னை யெனப்பிதா வெனக்கண்
மணியெனத் தவப்பய னெனவுட்
செப்புயி ரெனவந் தாண்டகா ளத்தி
தேசிகன் றிருவடி பணிவாம். 3

எப்பொருள்களும் ஆய் ஒப்பு உயர்வு இன்றி
இருந்த தன் உருவிறை குறையாது
அப்படி இருக்க ஆலியா நீரின்
அருள்இறையாய் எமக்கு ஏம
வைப்புஎன அன்னை எனப் பிதா எனக் கண்
மணிஎனத் தவப்பயன் என உள்
செப்பு உயிர்என வந்து ஆண்ட காளத்தி
தேசிகன் திருவடி பணிவாம்.

எ-து : எவ்வேறு வகைப்பட்டபொருள்களெல்லாம் தானாய்ச் சமானாதிகம் இன்றியிருந்த தனது சொரூபத்திலே சிறிது மாத்திரமாயினும் குறைவுபடாமல் இருந்தபடியே இருக்க, நீர் ஆலங்கட்டியாய்த் தடித்ததுபோற் பூரணமாகிய தான் தடித்துக் கிருபா மூர்த்தியாகி எம்போல்வார்க்கு இன்பம் பொருந்திய *நிட்சேபம் போலவும், தாய்போலவும், தந்தைபோலவும், கண்ணின்மணி போலவும், தபோபலம் போலவும், உடலுக்குள் உயிர்போலவும், வந்து ஆட்கொண்டருளிய காளத்திதேவனென்னு நாமத்தையுடைய ஆசாரியனது அழகிய பாதங்களை வணங்குவாம். என்றவாறு,

---

நிட்சேபம் - புதையல்

---

நிட்சேபத்தை நினைக்குந்தோறும் மனப்பூரிப்பு வருதல்போல் ஆசாரியனை நினைக்குந்தோறும் மனப்பூரிப்பு வருதலின் வைப்பென்றும், தாய் அமுதூட்டி உடம்பை வளர்த்தல்போல் உபதேச மொழிகளை அனுக்கிரகித்து அறிவை வளர்த்தலின் அன்னையென்றும் தந்தை தவிர்காரியத்தில் செல்லுதலைத் தடுத்துச் செய்காரியத்திற் செலுத்துதல்

போல் அசாத்திரப்பிரபஞ்சத்தின் வழி செல்லாது தடுத்துச் சாத்திரப் பிரபஞ்சத்தின் வழி செலுத்துதலிற் பிதாவென்றும் கண்மணியானது நன்று இது தீதுஇது என்று அறிவித்தல்போற் பந்தம் துன்பம் என்றும் மோட்சம் இன்பம் என்றும் அறிவித்தலிற் கண்மணி என்றும், தவப்பயன் எங்கே இருந்தாலும், அங்கே வந்து உதவி இன்பத்தைக் கொடுத்தல் போல் எங்கேயிருந்தாலும் தமது பூரண சொரூபத்தை விளக்கி இன்பத்தைக் கொடுத்தலின் தவப்பயனென்றும், உடலுக்குள் உயிர் அந்த உடலை அபிமானித்து அதன்கண் வரும் துன்பத்தைத் துடைத்தல் போல் உயிருக்கு உயிராயிருந்து அவ்வுயிருக்குத் துன்பந் தருகிற மும்மலங்களைத் துடைத்தலின் உடலுள் செப்புயிரென்றும் கூறினாரெனக் கொள்க.

அருந்திய காலத் தற்பமாப் பிற்பே
ரௌடத முடலினின் றுடலை
*வருந்தல்செய் பிணியெல் லாமகற் றுதலின்
வஞ்சனே னெஞ்சின்மாற் றரிதா
யிருந்தவெப் பற்றும் பிற்றைநாள் களின்விட்
டேகவன் றேகடைக் கணித்தல்
புரிந்தநங் குரவ னருளிருந்தமை யெப்பொழுது
முண்ணி னைந்துவாழ்த் திடுவாம். 4

அருந்திய காலத்து அற்பமாய் பின்பேர்
ஔடதம் உடலில் நின்று உடலை
வருந்தல்செய் பிணிஎல்லாம் அகற்று தலின்
வஞ்சனே நெஞ்சில் மாற்றம் அரிதாய்
இருந்தஎப் பற்றும் பிற்றைநாள் களில் விட்டு
ஏக அன்றே கடைக் கணித்தல்
புரிந்தநங் குரவன் அருள் இருந்தமை எப்பொழுதும்
உள் நினைந்து வாழ்த் திடுவாம்.

---

வருத்தல் - தொடைநோக்கி மெலிந்தது

---

எ-து : ஒரு வியாதிக்குக் கொடுக்கப்பட்ட பெரிய மருந்தை உட்கொண்ட காலத்தில் அம்மருந்து முன்னர் வியாதியைச் சிறிதாக நீக்கிப் பின்னர்த் தனது சாரம் உடலிலே நின்றூறி அந்தவுடலை வருத்துதல் செய்கிற வியாதிகளையெல்லாம் ஒருங்கே நீக்குதல்போல், வஞ்சகனாகிய எனது மனத்தின்கண் நீங்குதற்கு அரிதாயிருந்துள்ள எவ்வகைப்பட்ட பற்றுக்களும் பின்பு சில நாள்களிலே விட்டு நீங்கத் திருவடியை அடைந்த

அன்றே. கிருபாநோக்கஞ் செய்த நமது ஆசாரியனது கிருபை இருந்த தன்மையை எக்காலத்தும் மனத்தினாலே நினைத்து வாக்கினாலே தோத்திரம் பண்ணுவாம் என்றவாறு.

வைத்தியன் கொடுத்த மருந்தை ஒருவன் உட்கொண்ட காலத்தில் அம்மருந்து முன்பு சிறிது வியாதியைப் போக்கி அவன் சொன்ன பத்தியபாகப்படியே நிற்க அஃது உடலிலே நின்று ஊறிப்பின்புமற்றை வியாதிகளையெல்லாம் ஒருங்கே நீக்குதல்போல், ஆசாரியர் கிருபா நோக்கம் வைத்த காலத்தில் அக்கிருபா நோக்கம் முன்பு சில பற்றுக்களை நீக்கி அவர் அருளிச் செய்த நன்மார்க்கத்தின்படியே நிற்க அக்கிருபை மனத்தின்கண் மாறாது நின்று மற்றைப் பற்றுக்களையும் போக்கிற்றென்பது கண்டு கொள்க.

## வேதாகமச் சிறப்பு

அரையன்வா யுரைகள் வரைதரு முடங்க
லதுவரக் காணின்மற் றவனா
டரையின்வாழ் பவருண் ணடுங்கியோர்ந் ததன்வாய்ச்
சாற்றிய முறைசெய்வா ரென்றாற்
கரையில்பே ரின்பந் தரவெமக் கிறைசொல்
கட்டுரை யென்னினவே றென்னை
யுரையுள வேதா கமமவ னெனக்கண்
டுரைத்தவா புரிகுவ தல்லால் 5

*அரையன்வாய் உரைகள் வரைதிரு முடங்கல்*
*அதுவரக் காணின் மற்று அவனான்*
*தரையின்வாழ் பவர் உள்நடுங்கி ஓர்ந்து அதன்வாய்ச்*
*சாற்றிய முறைசெய்வார் என்றால்*
*கரையில் பேரின்பம் தரஎமக்கு இறைசொல்*
*கட்டுரை என்னில் வேறு என்னை*
*உரையுள வேதாகமம் அவன் எனக்கண்டு*
*உரைத்தவா புரிகுவது அல்லால்.*

*எ.து : இராசாவினது வாய்மொழிகள் எழுதப்பட்ட திருமுகமானது வரக்கண்டபோது அந்த இராசாவினால் ஆளப்பட்ட பூமியின் கண் வாழா நின்றோர் மன நடுக்குற்று அந்தத் திருமுகவாசகத்தை எல்லாம் விசாரித்து*

அதன்கண் சொன்னபிரகாரமே செய்து முடிப்பாரானால், மட்டில்லாத பேரானந்தத்தைத் தருதற்பொருட்டு எமக்கு இறைவனால் கூறப்பட்ட உறுதிமொழிகளானால் வேறேயும் வார்த்தைகள் என்னையுள்ளன. வேதாகமங்கள் அவ்விறைவன் எனவே கண்டு அவற்றின் கண்ணே சொல்லப்பட்ட முறையே செய்து முடிப்பதல்லாமல் எ.று.

இராசாவினது திருமுகத்திற் சொன்னபடியே செய்தோர்க்கு இன்பமும் அதற்கு மாறுபாடாகச் செய்தோர்க்குத் துன்பமும் இம்மைக்கண் வருதல்போல், இறைவனது வேதாகமங்களிலே சொன்னபடியே செய்தோர்க்கு வீட்டின்பமும் அதற்கு மாறுபாடாகச் செய்தோர்க்குப் பிறவித்துன்பமும் மறுமைக்கண் வருமென்பது கண்டுகொள்க. இராசாவைக் காணாதவிடத்தும் அவன் வாய்மொழி வரைந்த திருமுகத்தை அவனெனக் காண்குதல்போல், இறைவனைக் காணாதவிடத்தும் அவன் வாய்மொழிகளாகிய வேதாகமங்களை அவ்விறைவன் எனக்காணல் வேண்டும் என்று வேதாகமம் அவனெனக் கண்டென்றார்.

## முதனூல்

**கற்பழ மாகப் புரிதலிற் பெரிதென்**
**கருத்தினைத் திருத்திவந் தாண்ட**
**சிற்பர னருளாற் சொற்பொரு ளறியா**
**தேனும்வே தாகம வழியீண்**
**டுற்பவ மாதித் துயரைமுற் றவத்தா**
**னுணர்ந்தவர் துறவெனும் வாளா**
**லிற்பொருந் துதலை முதலவா வறுத்தோ**
**ரின்பவீ டுறல்சொலற் கியைந்தேன் 6**

*கற்பழ மாகப் புரிதலில் பெரிது என்*
*கருத்தினைத் திருத்தி வந்து ஆண்ட*
*சிற்பரன் அருளால் சொற்பொருள் அறியா*
*தேனும் வேதாகம வழி ஈண்டு*
*உற்பவம் ஆதித் துயரை முன்தவத்தால்*
*உணர்ந்தவர் துறவுஎனும் வாளால்*
*இற்பொருந்துதலை முதல்அவா அறுத்தோர்*
*இன்பவீடு உறல் சொலற்கு இயைந்தேன்.*

எ.து. : கல்லைக் கனியாகச் செய்ததுபோல் மிகவும் எனது மனத்தினைச் செப்பஞ்செய்து வலியவந்து ஆட்கொண்டருளிய ஞானசாரியனது கிருபையினாலே சொல்லியல்பு பொருள் இயல்புகளை அறியாத யானும் வேதாகமங்களிற் கூறப்பட்ட மார்க்கத்தின்படியே இந்நூலின்கண் உற்பத்தி திதி லயங்களினால் வருந்துன்பங்களை முற்பிறவிகளிலே செய்யப்பட்ட நிட்காமிய தவத்தினாலே இப்பிறவியிலே அறிந்தோர்கள் துறவாகிய வாளினாலே இல்வாழ்க்கையைப் பொருந்துதல் முதலிய அவாக்களைச் சேதித்து ஒப்பற்ற ஆனந்த மோட்சத்தை அடைதலைச் சொல்லுதற்குச் சம்மதித்தேன். எ.று :

சொற் பொருளிலக்கணந் தெரியாதிருந்தாலும் குருவினது கிருபையினாலே எல்லாம் விளங்கும் ஆகலின் சிற்பரன் அருளால் என்றும், இந்நூலைக் கற்பித்துச் சொல்லாமல் வேதாகமத்தில் சொன்ன மார்க்கத்தின் படியே சொல்லுகையினால் வேதாகமவழியென்றும் , முற்சனனங்களிலே தவம் புரிந்தவர்க்கல்லாது பிறவி துன்பமென்று தோன்றாது ஆகையால் உற்பவ மாதித்துயரை முற்றவத்தால் உணர்ந்தவர் என்றும் , முன் பெரியோர்கள் வீடடைந்த மார்க்கத்தின்படியே இனிமேல் அடைவாரும் செல்லவேண்டுதலின் அவரது நடையை இவர்களுக்கு அறிவிக்கவேண்டி முன்தவத்தால் உணர்ந்தவர் இன்ப வீடு உறல் சொலற்கு இயைந்தேன் என்றும் கூறினார்.

## அவையடக்கம்

துணையில்பே ராசைக் கடலுளோர் கரையாந்
   துறவுவந் துறவுவந் ததற்கோர்
புணையெனப் பெரியோர் வகுத்தநூல் களின்முற்
   போதமி லேனுமீ துரைத்த
லுணையமெய் வருந்த வயனெடு மாலன்
   றுயர்ந்துதாழ்ந் தோடியுங் காணா
இணையிலி நடித்தல் செயமருங் கலகை
   இனமசைந் திடுதலி னன்றே. 7

துணைஇல் பேராசைக் கடல்உளோர் கரையாம்
   துறவுவந்து உறவு வந்து அதற்கு ஓர்
புணைஎனப் பெரியோர் வகுத்தநூல்களின்முன்
   போதம் இலேனும் ஈதுரைத்தல்

*உள்நைய மெய்வருந்த அயன் நெடுமால் அன்(று)*
*உயர்ந்து தாழ்ந்து ஓடியும் காணா*
*இணையிலி நடித்தல் செய மருங்கு அலகை*
*இனம் அசைந்திடு தலின் நன்றே.*

*எ.து. : உவமை சொல்லக்கூடாத பெரிய ஆசையாகிய கடலின்கண் ஆழ்ந்து உளோர்க்கு அதற்குக் கரையாகிய துறவு வந்து பொருந்தும்படி விருப்பம் உற்று அக்கடலை நீந்துதற்கு ஒரு தெப்பமாகப் பெரியோர்கள் வகுத்துச் சொல்லிய நூல்களின் முன்னர், அறிவிலாத யானும் இந்நூலைச் சொல்லுதல், உள்ளம் நைய உடலம் வருந்த நான்முகனும், திருமாலும், அக்காலத்தில் அன்ன ரூபமாய் ஆகாசத்திலே பறந்து உயர்ந்தோடியும் , பன்றி ரூபமாய்ப் பூமியைக்கீண்டு தாழ்ந்தோடியும், காணாத ஒப்பற்ற சிவன் நடனம் பண்ணுதல் செய்ய அவனது பக்கங்களில் நின்று பேய்க்கணங்கள் கூத்தாடுதல்போலும். எ.று. :*

*ஆசையாகிய கடலுக்குக் கரை துறவு என்பதும், அக்கடலை நீந்தி இக்கரையில் ஏறுதற்குத் தெப்பம் பெரியோர் வாக்கியம் என்பதும் காண்க. பேய்க்கணங்கள் கூத்தாடுதல் சிவன் அனுஞ்ஞை கொண்டாகையாலும் அவனுக்குத் திருவுளப் பாங்காகையாலும் மாறுபாடு ஆகாமை போல், இந்நூல் சொல்லியது பெரியோர் அனுஞ்ஞை கொண்டாகையாலும், அவர்க்குத் திருவுளப் பாங்காகையாலும் இது மாறுபாடாகாது எனக்கொள்க. அன்று, ஏ இரண்டும் அசை நிலைகள்.*

## நூற்பெயர்

**கயல்விழி மனைவி யனைமுத லியவாங்**
**கட்டது தனையென தெனவு**
**மியல்பதா மசுத்த மாதியா ருடற்கட்**
**டிதனையா னெனவும்வைத் தெணுமோர்**
**மயலதா மிருளைத் துறவெனு மொளியான்**
**மாற்றிநெஞ் சகத்தினை விளக்கஞ்**
**செயலினிந் நூற்குப் பெயர்வயி ராக**
**தீபமென் றுரைத்திடப் படுமால்** 8

*கயல்விழி மனைவி அனை முதலியவாம்*
*கட்டது தனை எனது எனவும்*
*இயல்பதாம் அசுத்தம் ஆதி உடல்கட்டு*
*இதனை யான் எனவும் வைத்து எண்ணும் ஓர்*
*அயலதாம் இருளைத் துறவு எனும் ஒளியான்*

மாற்றி நெஞ்சகத்தினை விளக்கம்
செயல்இனி இந்நூற்குப் பெயர் வயிராக்ய
தீபம் என்று உரைத்திடப் படும்ஆல்.

எ.து. : பெண்டிர் தாய் முதலிய போக பந்தத்தினை என்னது எனவும் அசுத்த துக்கா நித்தியங்களே சகசமாயுள்ள தேகபந்தத்தினை யான்எனவும், மனத்தின்கண் வைத்துக் கருதும் ஒப்பற்ற மயக்கமாகிய இருளைத் துறவாகிய ஒளியினாலே நீக்கி மனமாகிய வீட்டினை விளக்கம் செய்தலினால் இந்தச் சாத்திரத்திற்குப் பெயர் வைராக்கிய தீபம் என்று சொல்லப்படும். எ.று :

போகதேகங்களாகிய இருவகைப் பற்றையும் என்னதுயான் என்று கருதவைக்கும் மயக்கமாகிய இருளைத் துறவாகிய ஒளியினாலே மாற்றி மனமாகிய வீட்டினை விளக்கஞ்செய்தலின், இந்நூற்குக் காரணப் பெயராக வைராக்கியதீபமென்று சொல்லப்பட்டது எனக்கொள்க.

## நூலாசிரியர் பெயர்

உருட்கறங் கூசன் மனமொடுங் கிடவென்
னுணர்வுநேத் திரக்கியா னெனதா
மிருட்கெடுத் தெலாமாம் பொருட்டிகழ்த்திடு
ரெழில்வயி ராகதீ பத்தை
மருட்கொடும் பாசக் குழிக்கண்யாம் வீழா
வகையரு ளினன்மறை முடிவின்
றெருட்கமை வீர சைவனெஞ்
சாந்தலிங்கதே சிகன்றெருட் சுடரே. 9

உருள்கறங்கு ஊசல் மனம்ஒடுங் கிடஎன்
உணர்வு நேத்திரக்கு யான்எனதாம்
இருள்கெடுத்து எலாமாம் பொருட்டு இகழ்த்திடும்
ஓர் எழில் வயிராக தீபத்தை
மருள்கொடும் பாசக் குழிக்கண்யாம் வீழா
வகை அருளினன் மறை முடிவின்
தெருள்அமை வீரசைவன் எம்
சாந்தலிங்க தேசிகன் தெருட் சுடரே.

எ.து : தேருருளும் காற்றாடியும், ஊசலும்போல் உழல்கின்ற மனது ஒடுங்கும்படி எனது உணர்வாகிய கண்ணுக்கு யான் என்னும் அகங்காரமும், எனது என்னும் மமகாரமும் ஆகிய மயக்க இருளைக்

கெடுத்துச் சக சீவ பர மூன்றும் தானாய் விளங்காநின்ற பரமசிவனாகிய பொருளை விளக்காநின்ற ஒப்பற்ற வைராக்கியதீபத்தை, யாங்கள் மருட்சியினாலே கொடிய பாசமாகிய குழியினுள்ளே வீழாமல் உய்யும்படிக்குத் தந்தருளினான், வேதமுடிவாகிய தத்துவஞானத்துக்கு அமைந்த வீரசைவ மாகேசுவரனாகிய எம்முடைய சாந்தலிங்க தேசிகன் என்னும் ஞான சூரியன். எ.று.

வயிராக தீபம் என்னும் நூற்பெயர்க்கு இயைய உணர்வை நேத்திரமாகவும்; *அகங்கார மமகார மயக்கத்தை இருளாகவும், பாசத்தைக் குழியாகவும், பரமசிவத்தைப் பொருளாகவும், நூலாசிரியரை ஞான சூரியன் ஆகவும் சொல்லல் ஆயிற்று, சூரியன் தனது ஒளியைத் தீபத்தின் இடத்திலே வைத்து விளக்கம் செய்கின்றான் என்பது நூல் வழக்கம், ஆதலால், இந்த ஞான சூரியன் வைராக தீபத்தைத் தந்தான் என்பதற்குப் பொருத்தம் உடைமையறிக. நேத்திரத்துக்கு எனற்பாலது நேத்திரக்கு என விகாரம் ஆயிற்று.

---

*அகங்காரமமகார - யானென்பது எனதென்பது.

---

பாயிரம் முற்றிற்று.



## நூல்

தோன்றிநின் றழியப் படுங்கொடும் பிறப்பிற்
றுன்பமே யன்றியெட் டுணையு
மூன்றிநெஞ் சகத்தோர்ந் திடிற்பிறி திலையா
லுண்டுபோற் றிரித்துயிர்க் கெல்லாந்
தான்றிகழ்த் திடுமோர் வகற்றிரு ளிருளும்
தவிர்ந்துமற் றதுமுள படியே
யான்றவீ டுறமுற் பவந்தவம் புரிந்தோ
ரகத்தினுட் டெரிதரு மன்றே

*தோன்றி நின்று அழியப்படும் கொடும் பிறப்பில்*
*துன்பமே அன்றி எள்துணையும்*
*ஊன்றி நெஞ்சகத்து ஓர்ந்திடில் பிறிதிலையால்*
*உண்டு போல் திரித்து உயிர்க்கு எல்லாம்*
*தான்திகழ்த்திடும் ஓர் அகத்திருள் இருளும்*
*தவிர்ந்து மற்றதும் உளபடியே*
*யான்ற வீடுற முற்பவம்தவம் புரிந்தோர்*
*அகத்தினுள் தெரிதரு மன்றே.*

*எ.து. : உற்பத்தி திதிலயங்களை உடைய கொடிய பிறப்பின் கண்ணே துன்பமே அல்லாமல், எள்ளின் அளவாயினும் மனத்தின்கண் அறிவை ஊன்றி விசாரணை பண்ணும் இடத்துச் சுகமே இல்லை. அங்ஙனம் சுகம் இல்லாது இருந்தும் உண்டு போல் மாறுபடுத்தி உயிர்களுக்கு எல்லாம் விளக்கும் விசாரணையை மாற்றுகின்ற அஞ்ஞான இருள். அந்த இருளும் நீங்கி அப்பிறப்புத் துன்பம் என்பதும் உள்ள முறையே மாட்சிமைப்பட்ட மோட்சத்தை அடைதற்கு முன் சனனங்களிலே தவம் பண்ணின பெரியோர்களது மனத்தின்கண்ணே தோன்றும். எ.று. :*

*அஞ்ஞான இருள் நீங்கினோர்க்குப் பிறப்புத் துன்பமாகத் தோன்றுதலின் அவ் இருள் உடையோர்க்கு அத்துன்பத்தை இன்பமாக மாறுபடுத்தி விளக்குகின்றது எனக்கொள்க.*

உடலிதுற் பவத்தோ ரைம்பெருந் துயர்மாய்ந்
துறுகணத் துயரினெண் மடங்கா
லிடையுள திதிக்கட் டுயரமூப் பறிவோங்
கிளமையிற் பிணியுறா விடத்தும்

விடலரும் பசிநோய் காமநோய் தணிப்பான்
மிகுபொரு ளேடுத றுயரீண்
டடையினு மதனைக் காக்குத றுயர்வேந்
தாயினு மிகுநராற் றுயரே 11

உடல் இது உற்பவத்து ஒர் ஐம் பெருந்துயர் மாய்ந்து
உறுகணத்து உயிரின் எண் மடங்கால்
இடையுள திதிக்கண் துயர் மூப்பு அறிவோங்கு
இளமையில் பிணியுறா இடத்தும்
விடலரும் பசிநோய் காமநோய் தணிப்பான்
மிகுபொருள் தேடுதல் துயர் ஈண்டு
அடையினும் அதனைக் காக்குதல் உயர்வேந்து
ஆயினும் மிகுநரால் துயரே

*எ.து. : இந்த உடலானது மாதாவினது கருப்பத்தின் கண் உற்பவியா நின்ற காலத்தில் ஐந்து பெரிய துன்பங்கள். அது லயமாகின்ற காலத்தில் அவ் உற்பத்தித் துன்பத்துக்கு எட்டுப் பங்கு அதிகம். அவ் உற்பத்திக் காலத்தும் லயகாலத்தும் துன்பமானால் அவற்றிற்கு இடையாய் உள்ள திதி காலத்திலே தான் இன்பம் இல்லையோ எனின், அக்காலத்தும் நரைதிரை மூப்புகளினாலே துன்பம். அம்மூப்பின்றிய பாலபருவத்தின்கண் இன்பம் இல்லையோ எனின், அப்பருவத்திலும் அறியாமையினால் துன்பம். அறிவு உதயமாகிய குமாரப்பருவத்தில் தான் இன்பம் இல்லையோ எனின், அப்பருவத்தின் கண்ணும் வாதபித்த சிலேத்துமங்களின் நானாவியாதிகளினால் துன்பம். அவ்வியாதி இன்றிய இடத்துத்தான் இன்பம் இல்லையோ எனின், விட்டு நீங்காது மாறி மாறி வருகின்றபசி வியாதி காம வியாதிகளினால் துன்பம். அவ்வியாதிகள் வருந்தோறும் அருந்தல் பொருந்தல் ஆகிய மருந்தினைப் புசித்துத் தணித்துக்கொண்டால் தான் இன்பம் இல்லையோ எனின், அம்மருந்தினால் அவ்வியாதியைத் தணித்தல் பொருட்டு அதற்கு ஏதுவாகிய மிகுந்த திரவியந் தேடுதலினால் துன்பம். அத்திரவியம் வந்து பொருந்திய காலத்துத்தான் இன்பம் இல்லையோ எனின் அதனை இராச சோராக்கினிகளினால் சேதம் வராதபடி பாதுகாத்தலினால் துன்பமாம். அதனைப் பாதுகாக்க வல்லமை உடைய இராசாவுக்குத் தான் இன்பம் இல்லையோ எனின், அவனுக்கு மேலாகிய மகாராசாவினால் துன்பம். எ.று :*

*உற்பவத்தில் ஐம்பெருந்துயர் என்றது - கருப்பாசயப்பை உறுத்தலினாலும், அதில் சலம் பூரித்தலினாலும், உதராக்கினி*

சுடுதலினாலும், பிரசூத வாயு முரித்துத் தள்ளுதலினாலும் , யோனித் துவார நெருக்கத்தினாலும், மலை இருத்திக்கொண்டது போலவும், கடலின் கண் வீழ்த்தி மிதித்தல் போலவும், இருப்புக் கடத்தில் அடைத்து நெருப்பால் சுடுதல் போலவும், மலைமேல் நின்றானைத் தலைகீழாகத் தள்ளுதல் போலவும், ஆலையில் இட்ட கரும்பு நெருக்குண்டல் போலவும் வருந்துன்பங்களை லயகாலத்தின் கண் வருந்துன்பங்களைக் கடவுளே அறிய வல்லவன் ஆகையால் உவமை கூறப்படாமையின், அத்துன்பத்தில் எண் மடங்கு என்று ஓர் அளவை கூறினார். அவற்றிற்கு இடையாய் உள்ள திதிகாலத்தின் கண் வரும் பாலகுமாரவிருத்தம் ஆகிய மூவகை இடத்தும் அறியாமையினாலும், வியாதிகளினாலும், பசிநோய், காமநோய்களினாலும், அந்நோய் தணித்தற்கு ஏதுவாகத் திரவியந் தேடுதலினாலும், அதனைப் பாதுகாத்தலினாலும், நரைதிரை மூப்புகளினாலும், துன்பங்கள் உள ஆகையால், உற்பத்தி, திதி, லயம் என்று கூறிய காலத்திரவியங்களிலும் துன்பமே அன்றி இன்பம் இல்லை என்பது கண்டு கொள்க. கருப்பாசய முதல் யோனித் துவாரம் ஈறாகிய ஐந்தும் பஞ்சபூத காரியம் ஆதலின் அவ் ஐந்தினாலும் வருந் துன்பங்கள் என்றுமாம். அறிவோங்கு இளமை எனவே அறிவின்றிய பாலப்பருவம் வருவிக்கப்பட்டது. பசி வியாதி காம வியாதிகள் மற்றை வியாதிகள் போல் மருந்து உண்டால் ஒருங்கே நீங்காது குன்ம வியாதிக்கு உவர் மண்ணீர் குடித்தால் அப்போது அடங்கி நின்று மீண்டுந் தோன்றுதல் போல், அருந்தல் பொருந்தல் ஆகிய மருந்தினைப் புசித்தால் அப்போது அடங்கி நின்று மீண்டும் தோன்றுதலால் விடலரும் என்றும், பசியும், காமமும், உதரவெரியும் குய்யத்தினவும் ஆகலின், நோய் என்றும் கூறினார். உற்பவத்து ஐம்பெருந் துயர் என்றதற்கு உதாரணம்: சிவதரு மோத்திரம்.

என்று என்று எண்ணி இருக்கும் உயிர்
 இடர்ப்பட்டு அழியும் எழில் வரைக்கீழ்
ஒன்றும் ஒருவன் தனைப்போலக்
 கருப்பாசயப்பை உருத்துதலான்
மன்ற உததி மறிந்தாழ்வான்
 வருத்தம் என்ன வருந்தியிடு
நின்ற கருப்பாசய உதக வெள்ளங்
 கொள்ள நிறை அழிந்தே

என்றும்,

(கருப்பை உறுத்தலினாலே மலையின் கீழ் அகப்பட்டவன்

*துயருறுவது போல உயிர் மிகவும் துக்கமுற்று மனமகிழ்ந்து சோரும். கருப்பையிலுள்ள நீராகிய வெள்ளத்தில் கடலிடத்து மரக்கலத்திலிருந்து வீழ்ந்தவன் துயருவது போல துன்பத்தில் அறிவு அழிந்து இருக்கும்.)*

"அங்கி அதனில் தங்கிடும் அயோ மயத்த கும்பத்தில்
தங்கும் ஒருவன் தபனம் போல் தபனம் எய்துந்தாயுதரத்
தங்கி சுடவே அழல் அனைய சூசிய தனால் ஆகத்தைப்
பங்கித்து இடவே படும் இடரின் இருநா குணிதம் பட்டு
அழுங்கும்"

*(தாயின் வயிற்றில் தங்கியிருப்பவன் நெருப்பினில் இருக்கும். இரும்புக்குடத்தினது வெப்பம்போன்ற கருப்பையிலுள்ள உதராக்கினியால் மிகவும் துன்புறுவான். இத்துன்பம் நெருப்பில் காய்ச்சிய ஊசியால் உடம்பைக் குத்தினால் ஏற்படும துன்பம் போன்று எட்டு மடங்கு அதிகமாக இருக்கும்.)*
*என்றும்,*

"கருப்பாசயமே கட்டம் அதாம் அதன் இனத்து இகங்கடுங்காலும்

*உரிக்க மிகவு மோகம் உற முன்னை உணர்வும் அந்நிலையே மரிக்கவாலைக் கரும்பு எனவே யோனி வழியின் வலிதொலைய நெருக்கப்பட்டு நிலைமிசையே தோன்றும் உயிர் உன் நிலையுடனே)
*மற்றும் வருவனவற்றால் காண்க.*
*(கருப்பையிலுள்ள (பிரசூதவாயு) காற்று உயிரை முரித்துத்தள்ள யோனியில் மலை இருக்குவது போன்று நெருக்கப்பட்டு வருத்தமுற்று கருப்பையில் உற்ற வருத்தம் தீர உயிர் நிலத்தின் மீது தோன்றும்.)*

---

*முருக்கியிடவே என்றும் பாடம்.

---

*"மாய்ந்து உறுகணத்துத் துயரின் எண்மடங்கு என்றதற்கு உதாரணம் : குறுந்திரட்டு*

"பரணம் ஆகிய பெண்டிருஞ் சுற்றமும்
பண்டு தன் கையில் தந்த
விரணம் ஆனவை கொண்டிட இவரை
விட்டு இயம்பிடாது இவண் ஏகும்
மரண வேதனை யாவரால் அறியலா
மயங்கி ஐம்புலன் அந்தக்
கரணம் யாவையும் கலங்கிட
வருந்துயர் கடவுளே அறிகிற்பான்"

(பெண்களும் சுற்றத்தினரும் முன்பு தன்கையில் கொடுத்த பகைமையானவற்றைக் கொண்டு இவர்களிடம் சொல்லாமலே செல்வதற்குக் காரணமான மரண வேதனையை யாவராலும் அறியமுடியாது. ஐம்புலன்களும் அந்தக்கரணங்களும் கலங்கும்படியாக வரும் வேதனையை கடவுளே அறிய வல்லவன்.)
என்றும், சிவதருமோத்ரம்

**"தனத்தினை மனைதனைத் தானியம் தனை**
**நினைத்து இனி எவர் அனுபவிப்பர் நீங்குநாள்**
**எனக்கு இவை அன்னியம் ஆகுமோ எனா**
**மனத்துயர் மலியவே மாயும் ஆவியே"**

(உயிர்மாயும் காலம் நெருங்கும் பொழுது மனதானது தனக்கு நெருக்கமாயிருந்த செல்வம், வீடு, தானியம் இவற்றையெல்லாம் இனியார்? அனுபவிப்பர் எனக்கு இனி - இவை தொடர்புடையான் அல்ல என நினைந்து துன்பத்தில் ஆழ்ந்து விடும். அந்நிலையிலேயே உயிர் பிரியும்.)
என்றும், மெய்ஞ்ஞான விளக்கம் :

**"வந்திடு மரணத் துன்பம் மறித்துரை செய்யப்போமோ**
**உந்தி மேலையும் பித்து உணர்வொடு பொறி கலங்கி**
**நந்திடா இருளே மூடி நா உலர்ந்து அலமந்து என்னே**
**இந்த மா இறப்பில் துன்பம் பவத் துன்பத்து எண் மடங்கே"**

(மரணத்துன்பம் மிகவும் வருத்தம் தரக்ககூடியது, இறக்கும்பொழுது நாவானது உலர்ந்து ஐம்பொறிகளும் செயலிழந்து அலமந்து நிற்கும். இவ்விறப்பில் படும் துயரைவிட பிறப்பினால் வரும் துன்பம் எட்டு மடங்காகும்.)
என்றும், திருக்கடைக்காப்பு :

**"புலன் ஐந்தும் பொறி கலங்கி நெறி மயங்கி அறிவு அழிந்திட்டு**
**ஐம்மேல் உந்தி அலமந்த போதாக அஞ்சேல் என்று அருள் செய்வான்**
**அமருங் கோயில்**
**வலம் வந்த மடவார் கள் நடமாட முழவு அதிர மழை என்று அஞ்சிச்**
**சிலமந்தி அலமந்து மரம் ஏறி முகில் பார்க்குந் திருவை ஆறே"**

(ஐம்பொறிகளும் ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை என்னும் தத்தம் புலன்களின் அனுபவ எல்லைக்குட்பட்டு நில்லாது, அறிவினை இழந்து ஆசையில் மூழ்கித் துன்பத்தை எய்தும்பொழுது அஞ்சேல் என்று அருள்செய்வான் திருவையாற்று இறைவன்.)

என்றும்,

*திதிக்கட் துயரம் என்றதற்கு உதாரணம்மெய்ஞ்ஞான விளக்கம்:*

**"நலமிலா மூப்புத் துன்ப நடை தளர்ந்து உரை தழுத்துச்**
**சலம் அதே மிகவும் தோன்றித் தண்டு கண்ணாகிச் சித்தங்**
**கலனமே பிறந்து கண்டார் கார்சித்து அங்கு உமிழும் வண்ணம்**
**மலை எலாஞ் செய்யும் மூப்பின் வருந்துயர் அந்தோ பாராய்"**

*(நலம் இல்லாதது மூப்பு. துன்பம் தருவது. மூப்பினால் நடையில் தளர்வு வரும் . உரையில் குழறல் தோன்றும், வாயில் சலம் அதிகமாக வரும். கையில் உள்ள ஊன்றுகோல் கண்ணாக மாறும். சிந்தனையில் கலக்கம் பிறக்கும். கண்டவர்கள் காரித்துப்பும்படியாக மாறுபாடுகளையெல்லாம் செய்யும்.)*

என்றும்,

**"பிணியினால் வலியும் கேடாம் பிணியினால் அழகும் போகுந்**
**துணிவு எலாம் பிணியால் குன்றுந் தொலைவில் வேதனையைச் செய்யுந்**
**தணிவிலாது உள்ளே நின்று சாலவும் ஒறுக்கும் பொல்லாப்**
**பிணியதே ஒதுக்குந் துன்பம் பேசிடில் பிறிதும் உண்டோ"**

*(நோயினால் வலிமை கெடும். அழகுபோகும். உள்ளத்துணிவும் உடல்துணிவும் குறையும். தீராத துன்பத்தைத்தந்து கொண்டே இருக்கும். உள்ளே இருந்து கொண்டு இடைவிடாது துன்புறுத்தும் பொல்லாத பிணியினை ஒத்த துன்பம், பேசினால் பிறிது இல்லை.)*

*என்றும், மற்றும் வருவனற்றால் காண்க.*

**இளமையிற் பிணியற் றொருகுடை நிழற்கீ**
**ழிருநில முழுவதும் புரக்கும்**
**வளமைபெற் றுடைய மகற்குமெப் பொழுது**
**வருங்கொல்கூற் றெனும்பயத் தானு**
**முளமிகப் பறைநின் றறையுமேற் புவிமீ**
**துடையரோ மற்றைய ரின்பங்**
**களிமிகுத் திருப்பர் தெளிவிலா மையின்மேற்**
**காரியங் கருதுறா நரரே.** 12

*இளமையில் பிணிஅற்று ஒருகுடை நிழல்கீழ்*
*இருநில முழுவதும் புரக்கும்*
*வளமை பெற்றுடைய மகற்கும் எப்பொழுது*
*வரும்கொல் கூற்று எனும் பயத்தானும்*

உளம் மிகப் பறை நின்று அறையும்மேல் புவிமீது
உடையாரோ மற்றையர் இன்பம்
களிமிகுத்து இருப்பர் தெளிவு இலாமையின் மேல்
காரியம் கருதுறா நரரே.

எ.து. : அறிவு உதயம் ஆகிய குமாரப் பருவத்தின் கண் வியாதி இன்றித்திட காத்திரனாய்த் தனது ஒரு வெண் கொற்றக்குடை நிழல் கண்ணே பெருமை பொருந்திய இராச்சியபாரத்தை எல்லாம் காக்கின்ற செல்வத்தினை அடைந்ததனால் மனுச ஆனந்தத்தினை உடைய மகாராசாவுக்குத் தான் இன்பம் இல்லையோ எனில், அவனுக்கும் எந்தக் கணப்போதிலே யமன் வந்து தேகநாசம் பண்ணுவானோ என்னும் பயத்தினாலும், சனங்கள் செய்த பாவம் இராசாவை வந்து சாரும். அப்பாவ மிகுதியால் மறுமைக்கண் நிரயத் துன்பம் வரும் என்று மேல் வருங்காரிய விசாரணையினால் வரும் பயத்தினாலும், மிகவும் உள்ளந் திடுக்குத் திடுக்கென்று மாறாது நின்று பறை அறையும் ஆனால் அவன் ஒழிந்த மற்றையர் பூமியின் கண் இன்பம் உளரோ இலர். அற்ப செல்வத்தினை உடையோரும் மனக் களிப்பு மிகுந்து இருப்பர் ஆகலின் மகாசெல்வத்தினை உடைய அந்த ராசாவுக்கு அப்பயங்களும் அவற்றால் வரும் துன்பங்களும் இல்லை. மகா போகங்களை அனுபவித்துக் கொண்டு மனக்களிப்பு மிகுத்து இருப்பன் என்று நீ சொல்வாய் ஆனால், விவேகம் இன்மையால் மேல் வருங்காரிய விசாரணை பண்ணாத மானுடர்க்கு மனக்களிப்பு அல்லது விவேகமும் விசாரணையும் உடையோர்க்குத் துன்பமே அன்றி இன்பம் இன்று என்று அறிவாயாக. எ.று. :

கூற்று எனும் பயத்தாலும் என்ற உம்மையால் விசாரணையினால் வரும் பயம் வருவிக்கப்பட்டது. உள்ளம் பறை அறைதல் மிகுந்த பயம் எனக்கொள்க. யாவர்க்கு ஆயினும் விவேகம் உள்ள பொழுது தேகபோகந் துன்பமாய்த் தோன்றும் என்பதும், அஃது இல்லாத போது அவை இன்பமாய்த் தோன்றும் என்பதுங் கண்டு கொள்க.

உளமிகப் பறை நின்று அறையும் என்றதற்கு உதாரணம் : குறுந்திரட்டு

**"பிறந்தவர் இறத்தல் பிழையாது என அறிந்தார்
உறுந்துயர் ஒழிந்து இனிய உண்ண நினைவாரோ
மறந்து விடயத்து மயல் உற்றிடுதல் வான்மீது
இறந்தவரை உச்சி விழுவோன் இடை கொள் இன்பம்"**

(பிறந்தவர் இறத்தல் உறுதி என அறிந்தவர்கள் உறுகின்ற துயரை ஒழிந்து இனியவற்றை உண்ண விரும்பமாட்டார்கள். மறந்தும்

விடயங்களினால் வரும் மயக்கத்தில் திளைத்தல் மலையினது உச்சியிலிருந்து விழுவோனது இன்பம் போன்று நிலையற்றதாகும்.) என்றும், திருவள்ளுவ நாயனார்.

**"நன்று அறிவாரிற் கயவர் திருஉடையர்**
**நெஞ்சத்து அவலம் இலர்"**

தமக்கு நன்மையானவை இவை என்று அறிபவரைக் காட்டிலும் அவற்றை அறியாத கயவர் நன்மையுடையவராவார். அவரைப்போலவே இவரும் தம்முள்ளத்தில் கவலையில்லாதவராக இருப்பதால் நன்மையுடையவர் .

(இம்மானுடப் பிறப்பின் கண் இன்பம் இல்லை. ஆனால் இப்பிறப்பிற்கு மேலாய தெய்வப் பிறப்பில்தான் இன்பம் இல்லையோ என்ற சீடனை நோக்கிக் கூறுகின்றார்.)
என்றும், வரும் மற்றும் வருவனவற்றால் காண்க.

**பிறப்பிறப் புடைய ராயிடை யினும்பல்**
**பிணிபயந் தணிவில்கா மாதி**
**யுறப்படு தலின் வானவர்க்குமற் றென்னை**
**யுளசுகந் தேவின்மா னுடத்திற்**
**சிறப்பிவை யென்றாற் குறுக்கியோ னிகளின்**
**றீமையும் கொடியர்வீழ் நிரயத்**
**தறப்பெருந் துயரு முரைப்பதென் பிறப்பூ**
**டாதலாற் றீதலா திலையே** 13

பிறப்பு இறப்பு உடையராய் இடையினும் பல்
பிணிபயம் தணிவில் காமாதி
உறப்படுதலின் வானவர்க்கு மற்று என்னை
உளசுகம் தேவின் மானுடத்தில்
சிறப்பிவை என்றால் குறுக்கு யோனிகளின்
தீமையும் கொடியர்வீழ் நிரயத்து
அறப்பெரும் துயரும் உரைப்பதென் பிறப்பூடு
ஆதலால் தீதலாது இலையே.

எ.து. : இந்த மானுடர் போல் உற்பத்திலயங்களை உடையோராய், அவற்றுக்கு இடையாகிய திதிக்கண்ணும் பல வியாதிகளையும் கர்த்திரு சத்துருக்களினால் பயங்களையும் அடங்காத காமக்குரோதாதிகளையும் அடையப்படுதலின் தேவர்களுக்கும் இன்பம் என்னை உள, ஊர்த்த

யோனிகள் ஆகிய தேவகதி மானுடகதிக்கண் வருஞ் சிறப்பு இவைகள். ஆனால், குறுக்கு யோனிகள் ஆகிய மிருககதியினது துன்பங்களையும் மகாபாவிகள் வீழல் உற்ற நரககதியினது மிகுந்த பெரிய துன்பங்களையும் சொல்வது என்னை! ஆகையால் பிறப்பின் கண் துன்பமே அல்லது இல்லை. எ.று. :

நாற்கதி உள்ளும் அதிகமாய் உள்ள தேவகதிக் கண்ணும் இங்ஙனம் துன்பமே வரும் ஆகலின் வீடு ஒன்றுமே இன்பம் என்பதுங் கண்டு கொள்க. குறுக்கு யோனி என்றமையால் ஊர்த்த யோனி வருவிக்கப்பட்டது. எல்லாத் துன்பங்களினும் நிரயத் துன்பம் அதிகம் ஆதலின் அறப்பெருந்துயர் என்றார்.

வானவர்க்கும் மற்று என்னை உளசுகம் என்றதற்கு உதாரணம் :
பெருந்திரட்டு

**"தீயஅசுரர் பகை உண்டு செற்றம் ஆர்வம் மிக உண்டு** 12
**நோய் உண்டு அனங்கனார் உண்டு நோய்கட்கு எல்லாந் தாயான**
**காயம் உண்டு கைதொழவேண்டுநரும் உண்டு கற்பத்தே**
**மாயுந்தன்மை உண்டானால் வானோர்க்கு என்னை வளன் உண்டே"**

(தேவர்க்கு தீய அசுரர் பகையுண்டு. விருப்பு வெறுப்பு உண்டு. உள்ளேயே இருக்கும் கோபமுண்டு. நோயுண்டு, மன்மதானால் வரும் துன்பம் உண்டு. உயர்ந்த தேவர்களை வழிபடவேண்டும். நீண்ட ஆயுள் காலத்திற்குப்பின் தேவர்களும் அழிவர். அதனால், அவர்களுக்கும் வாழ்வு சிறப்பில்லை.)

என்றும்,

**" குருடன் புகராம் மார்த்தாண்டன் குட்டரோகி யாம்எஞ்ஞ** 13
**புருடன் தலைநோய் புரந்தரற்குப் புயத்தில் வாதந்தக்கற்குச்**
**சுரநோய் உண்டு கயரோகஞ் சோமனுக்கு நீரழிவு**
**வருணற்கு இவ்வாறு அமரர்க்கு நோய் உண்டு உண்டே மருத்துவரும்"**

(சுக்கிரன் குருடன், சூரியனுக்கு குட்டநோய், எஞ்ஞபுருடனுக்குத் தலைநோய், புரந்தரனுக்குப் புயத்தில் வாதம், தக்கனுக்குச் சுரநோய், சோமனுக்குச் சயரோகம், வருணருக்கு நீரிழிவு நோய் ஆகத் தேவர்களுக்கும் நோயுண்டு. நோய்தீர்க்க மருத்துவர் இல்லை.)
என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

**அரிதுபெற் றிடினும் பெற்றதின் விருப்ப**
**மறப்பெறா தனவிரும் புயிர்கள்**
**டெரியகிற் கிலமீ தெனைமுன மடையாச்**
**செல்வமாய்ச் சொல்பவித் திரமா**

யுரியசிற் சுகமாய் நித்தமா யொருவீ
டுளதெனக் கேட்டுமற் றதனிற்
பிரியமற் றினமு முனமுறும் பொல்லாப்
பிறவியே பெறவிரும் புதலே. 14

அரிது பெற்றிடினும் பெற்றதின் விருப்பம்
அறப்பெறா தன விரும்புயிர்கள்
தெரியகிற் கிலம் ஈதெனைமுனம் அடையாச்
செல்வமாய்ச் சொல்பவித் திரமாய்
உரியசிற் சுகமாய் நித்தமாய் ஒருவீடு
உளதெனக் கேட்டும் மற்றுஅதனில்
பிரியம் அற்று இனமும் முனம் உறும் பொல்லாப்
பிறவியே பெறவிரும் புதலே

எ.து. : யாவர்க்குங் கிடைத்தற்கு அரிய பொருளைப் பெற்ற காலத்தும் தாம் பெற்ற அப் பொருளை எளிதாகக் கருதி அதன் கண் விருப்பம் அற்றுப் பெறாதன ஆகிய பொருள்கள் எளிய ஆயினும் அவற்றை அரியவாகக் கருதி விரும்பா நின்ற உயிர்கள்; இது என்னையோ யாம் அறிகிலேம்? தாம் முன்னர் அடையாத செல்வமாகச் சொல்லபட்ட நின்மலமாய்த் தமக்கு உரிய ஞான ஆனந்தமாய் அழியாததாய் ஒப்பற்ற மோட்சம் உண்டு என்று கேட்டு இருந்தும் அதன் கண் விருப்பம் அற்று முன்னர்த் தாம் அடைந்ததாய் அசுத்தமாய்த் துக்கமாய் அநித்தமாய் உள்ள பொல்லாத பிறவியையே இன்னமும் அடைய விரும்புதல். எ.று. :

பெற்றதைத் சிறிதாக்கிப் பெறாததின் மேல் இச்சையை விரிப்பது உயிர்களுக்கு இயற்கைக் குணமாய் இருக்கவும்; தாம் அடைந்த பிறப்பு அசுத்தம், துக்கம், அநித்தியம் என்பது கண்டு இருந்தும், தாம் அடையாத வீடு சுத்தம், சுகம், நித்தியம் என்பது கேட்டு இருந்தும், அதனை நீங்கி இதனை அடைய விரும்புதல் இன்றி அதனையே உயிர்கள் விரும்புதலின், தெரியகிற்கிலம் ஈதெனை என்றார். வீட்டு இன்பம் உயிர்க்கு அனன்னியம் ஆகலின் உரிய சிற்சுகம் என்றார்.

முனமடையாச் செல்வமாய் என்றதற்கு உதாரணம் : தேவிகா லோத்தரம்.

**"ஒரு பொருள் எக்காலத்தும் உளதாகிச் சிறப்பு உடைத்தாய்**
**இருவினை இன்றி மேலாம் இன்பத்தை அளிப்பது ஆகும்**
**பொருவிலா இதன்மேல் அன்பு பொருந்திடாதாரும் உண்டே!**
**திருவுலா அகன்ற கல்விச் சிறந்த சான்றோர் கடாமே"**

(இறைவன் ஒருபொருள். எக்காலத்தும் உள்ள சிறப்புடையது.

இருவினைகள் அற்றது. மேலாகிய வீட்டின்பத்தை அளிப்பது. குற்றமில்லாதது. இதன்மேல் விரும்பத்தக்க செல்வமும், ஆழ்ந்த கல்வியறிவும் உடைய சிறந்த சான்றோர் அன்பு செலுத்துவர் .)

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

துன்பவெம் பிறப்பி னிழிவையு மழியாச்
சுகபர வீட்டுயர் வினையும்
பின்பவை தொலைத்தெய் தருங்கரு வியதாப்
பெற்றவிப் பிறப்பையு மிதனின்
மின்புரை நிலையா மையையுமோர்ந் தனனோர்
விவேகியு மெனி ற்பினும் விடயத்
தன்புறா வீடு, புகமிக விரையா
தரைக்கணந் தரைக்கனுற் றிடுமே 15

துன்பவெம் பிறப்பின் இழிவையும் அறியாச்
சுகபர வீட்டு உயர் வினையும்
பின்புஅவை தொலைத்து எய்தரும் கருவியதாப்
பெற்ற இப்பிறப்பையும் இதனின்
மின்புரை நிலையாமையையும் ஓர்ந்தனன் ஓர்
விவேகியும் எ(னி)ற்பினும் விடயத்(து)
அன்புறா வீடு புகமிக விரையாது
அரைக்கணந் தரைக்கண் உற்றிடுமே.

எ.து. : அநித்தியமாய்த் துக்கமாய் உள்ள வெவ்விய பிறப்பினது தாழ்ச்சியினையும், நித்தியமாய் ஆனந்தமாய் உள்ள மேலாகிய வீட்டினது உயர்ச்சியினையும், நெடுங்காலத்தின் பின்பு அந்த இழிந்த பிறப்பினை நீக்கி உயர்ந்த வீட்டினை அடைதற்கு அரிய ஏதுவாகப் பெற்ற பெறுதற்கு அரிய இந்த மானுடப் பிறப்பினையும், அங்ஙனம் பெறுதற்கு அரிய பிறவி ஆயினும் மின்போலுந் தோன்றி அழிகின்ற இக் காயத்தினது அறிதற்கு அரிய அவதியினையும், விசாரணை பண்ணினான். ஒரு விவேகியும் ஆனால் பின்னரும் பிறப்பிற்கு ஏதுவாய விடய சுகத்தின் மேல் அன்புவைத்து வீடு அடைதற்கு ஏதுவாய துறவினை அடைந்து தவநெறிக்கண் அதிசீக்கிரமாய்ச் செல்லாது அரைக்கணப் போது ஆயினும் உலக வாழ்க்கையைப் பொருந்தி நிற்பனோ என்றவாறு. பின்பு அவை தொலைத்து எய்த என்றதைப் பிறப்பை நீக்கி வீடு அடைய என்று பிரித்துக் கூட்டுக.

வினைப்பிறப் பொருவன் றுயரமென் றுணரின்
　　விடய போகங்கணச் சுதலுந்
தனக்குட லனிய முணர்தரின் மரணஞ்
　　சார்குறிக் குள நடுங் குதலு
நினைத்திடி னிதன்பேற் றருமைமா தவங்க
　　ணீங்கிநாள் கழித்தலுந் துணிவி
லனித்தமோர்ந் திடிணோர் கணமெதிர் காலத்
　　தவதிகூ றிடுதலு மிலையே 16

*வினைப்பிறப்பு ஒருவன் துயரம் என்று உணரின்*
　　*விடய போகங் கள்நச் சுதலுந்*
*தனக்கு உடலனியம் உணர்தரின் மரணஞ்*
　　*சார்குறிக்கு உளம்நடுங்கு தலு*
*நினைத்திடின் இதன்பேற்று அருமை மாதவங்கள்*
　　*நீங்கி நாள் கழித்தலுந் துணிவில்*
*அனித்தம் ஓர்ந்திடின் ஓர்கணம் எதிர்காலத்து*
　　*அவதி கூறிடுதலும் இலையே.*

*எ.து.* : இரு வினைக்கு ஈடாய் வரும் பிறப்பினை ஒருவன் துன்பம் என்று அறிந்தானே ஆனால் அத்துன்பத்துக்கு ஏதுவாய விடயபோகங்களை இச்சித்தலும் இல்லை. தனக்குக் காயம் வேறு என்பது அறிந்தால், மரணக்குறி கண்ட காலத்தில் காய நீங்கும் என்னும் பயத்தினால் மன நடுங்குதலும் இல்லை. இம் மானுடப் பிறவி பெறுதற்கு அருமை என்று அறிந்தால், இப்பிறவிக்குப் பயனாகி மோட்சத்தை அடைதற்கு ஏதுவாகிய மகத்தாகிய தவங்களைச் செய்தல் ஒழிந்து, வாழ்நாள்களை வீணாகப் போக்குதலும் இல்லை. எந்தக் கணம் இருக்குமோ எந்தக் கணம் போகுமோ என்று தெளியக்கூடாத தேக அநித்தியத் துவத்தை அறிந்தால், ஒரு கணப்போதாயினும் இன்ன காலத்தில் இன்னது செய்வோம் என்னும் அளவு சொல்லுதலும் இல்லை. என்றவாறு, இல்லை என்னும் வினைக்குறிப்பு மொழியைக் கடைநிலைத் தீபகமாக்கி எல்லாவற்றோடுங் கூட்டிக் கொள்க.

மரணஞ் சார்குறிக்குளம் நடுங்குதலும் இல்லை என்பதற்கு உதாரணம் : பெருந்திரட்டு.

"வில் விளங்கிய வின்னவர் மிகுந்த வாழ் நாளும்
　　அல்அரும் பகல் எனனும் ஈர் வாரினால் அரிந்து
"கொல்லும் வெங்கொடுங் கூற்றையார் குலைவுறார் குறுகின்
　　நல்விருந்து என உவந்து எதிர் கொள்ளுவான் ஞானி"

(வாழ்நாளை அரிந்து குறைக்கும் கூற்றுவனிடம், யாரும் உறவு கொண்டு இணங்கமாட்டார்கள், ஆனால், ஞானி அவனது வருகையினையும் நல்விருந்தாக ஏற்றுக்கொள்வான் மற்றும் வருவனவற்றால் காண்க.)

**கருமமொன் றியற்றப் பிறர்கையிற் கருவி**
**கவர்ந்துளோன் பினுமவர் கொளுமுன்**
**விரைவினெண் ணியசெய் யாதுமற் றதையே**
**மிகச்சிறப் பித்துநோக் குதல்போற்**
**புரையில்வீட் டின்ப மடைகுவா னதற்குப்**
**பொருந்திய வருந்தவம் புரியா**
**தொருகண மேனு நிலையிலிவ் வுடல் வைத்**
**தொப்பனை செய்துநோக் குதலே** 17

*கருமம் ஒன்று இயற்றப் பிறர்கையில் கருவி*
*கவர்ந்து உளோன் பினும்அவர் கொளுமுன்*
*விரைவில் எண்ணிய செய்யாது மற்றதையே*
*மிகச் சிறப்பித்து நோக்குதல் போல்*
*புரையில் வீட்டின்பம் அடைகுவான் அதற்குப்*
*பொருந்திய அருந்தவம் புரியாது*
*ஒருகண மேனு நிலையில் இவ்வுடல் வைத்து*
*ஒப்பனை செய்து நோக்குதலே.*

எ.து. : தனக்கான ஒரு தொழிலைச் செய்து முடிக்க அதனைச் செய்து முடித்தற்குரிய கருவியை அயலார் கையில் இரவல் வாங்கி வந்தவன் அக்கருவியைப் பின்னருங் கொடுத்தோர் வாங்கிக்கொள்ளும் முன்னர்த்தான் கருதிய தொழிலைச் சீக்கிரத்தில் செய்து முடியாது வைத்து, அதனைத்தனது ஆகப்பாவித்து மிகவுஞ் சிறப்பித்துப் பார்த்துக் கொண்டு இருத்தல்போலும்; குற்றம் அற்ற மோட்ச ஆனந்தத்தை அடையும் பொருட்டு அதற்குப் பொருந்திய அரிய தவத்தினைச் செய்யாமல், ஒரு கணப் போதாயினும் நிலை இல்லாத இக்காயத்தைத் தனதாகப் பாவித்துவைத்துச் செப்பஞ்செய்து பார்த்து கொண்டு இருத்தல். என்றவாறு.

தனக்குரிய தொழிலைச் செய்தற்குப் பிறர்கையில் கருவி வாங்கினோன்போல், தனக்குரிய தவத்தினைச் செய்தற்குக் கருவியாக இக்காயத்தைச் சிவன் கையில் வாங்கிக் கொண்டது என அறிக.

இல்வாழ்க்கையிலிருந்து தானங்களைக் கொடுத்துப் பிறப்பினை

*நீக்கக் கூடாதோ என்ற சீடனை நோக்கிக் கூறுகின்றார்.*

பவத்தனிப் பரவைக் குரவையைத் தானப்
படுவையைக் கொடுகடப் பரிதா
லுவப்பொடு தவப்பா தையினிவர்ந் தன்றி
யுண்மையித் தகவிகந் துலகோ
ரவப்பொழு தகல விருப்பதென் விருப்போ
வகன்றவர்க் கருத்தலா திகளாற்
றவத்தினை மறந்தார் கொல்லெனுஞ் சொல்லைத்
தமதுளத் துணர்கலார் போலும். 18

*பவத்தனிப் பரவைக் குரவையைத் தானப்*
*படுவையைக் கொடுகெடப் பரிதால்*
*உவப்பொடு தவப்பாதையில் இவர்ந்து அன்றி*
*உண்மை இத் தகவு இகந்து உலகோர்*
*அவப்பொழுது அகல இருப்பது என் விருப்போ*
*அகன்றவர்க்கு அருத்தல் ஆதிகளால்*
*தவத்தினை மறந்தார் கொல்எனும் சொல்லைத்*
*தமது உளத்து உணர்கலார் போலும்*

*எ.து. : பிறவியாகிய ஒப்பற்ற விசாலம் பொருந்திய கடலினை இல்வாழ்க்கையில் இருந்து கொடுக்கப்பட்ட தானமாகிய தெப்பத்தினாலே கடத்தற்கு அரியதாம்; விருப்பத்துடனே துறவின் கண் நின்று செய்யப்பட்ட தவம் ஆகிய கப்பலின் மேலேறினால் அல்லது, இது சத்தியம். இந்தத் தகைமையை விட்டு நீங்கி இவ் உலகத்தார் வீணிலே பொழுது போக இருப்பது என்ன விருப்பமோ! துறந்தோர்க்குப் பசிநோய் குளிர் முதலியவற்றிற்கு உண்டி மருந்து உறையுள் முதலிய உதவி, அவர் தவத்திற்கு விக்கினம் வராதபடி பாதுகாத்தற் பொருட்டுத் தமக்கு உரிய தவத்தினை மறந்தார் கொல்லோ இல்லறத்தார் என்று திருவள்ளுவநாயனார் கூறிய சொல்லைத் தமது உள்ளத்தின் கண்ணே விசாரணை பண்ணாதவர் போலும், என்றவாறு.*

இல்லறம் முற்றும் வழுவாது நடக்கவே குடும்பம் குற்றமாய்த்தோன்றும் இதனால் புறத் துறவு வரும்; இத்துறவினால் தவத்தைப் பண்ண வரும்; இத் தவத்தால் உட் துறவு வரும்; இவ் உட்துறவால் மெய்யுணர்வு பிறக்கும்; இம் மெய் உணர்வால் பிறப்பு நீங்கும், ஆதலின் தானப்படுவையைக் கொடுகடப்பரிது என்றார்.

இல்வாழ்க்கையே "அறனெனப்பட்டது" என்றுந் துறவினை

"அஃதும் பிறன்பழிப்பது இல்லாயின் நன்று" என்றுந் திருவள்ளுவ நாயனார் இல்வாழ்க்கையை அதிகமாகக் கூறி இருக்க, நீர் அதனை மறுத்துத் துறவினை அதிகம் என்றும் இதன் கண் நின்று வீட்டை அடைய வேண்டும் என்றுங் கூறியது என்னை என்று கேட்ட சீடனை நோக்கிக் கூறுகின்றார்.

ஈதலே யறமு மநித்தமா மனைத்து
மிகழ்ந்துகை விடுதலே வீடு
மாதலாற் றானக் குரியவில் வாழ்க்கை
யதனையே யறமெனக் கூறிக்
கோதிலா வீட்டி னிலக்கண மிருத்தல்
குறித்துமெய் யுணர்வையுந் துறவூ
டோதினார் வேதந் தனைத்தமி ழுருவத்
தொளித்தெமக் களித்தவள் ளுவரே. 19

ஈதலே அறமும் அநித்தமாம் அனைத்தும்
இகழ்ந்து கைவிடுதலே வீடும்
ஆதலால்தானக்குரிய இல் வாழ்க்கை
அதனையே அறம்எனக் கூறிக்
கோதிலா வீட்டின் இலக்கணம் இருத்தல்
குறித்து மெய்யுணர்வையும் துறவூடு
ஓதினார் வேதம் தனைத்தமிழ் உருவத்து
ஒளித்து எமக்கு அளித்த வள்ளுவரே.

எ.து. : யாவர்க்குங் கொடுக்குதலே தருமமும் அநித்தியம் ஆகிய எல்லாவற்றினையுந் துன்பம் என்று இகழ்ந்து கைவிட்டு நீங்குதலே வீடும் ஆகலின் தானங்கொடுத்தற்கு உரிய இல்வாழ்க்கையையே அறம் எனக் கூறித் துறவின் கண் குற்றமற்ற மோட்ச லட்சணம் இருத்தலை நோக்கி மெய்ப் பொருளை அறிதற்கு ஏதுவாய் ஞானங்கூறிய மெய் உணர்வு என்னும் அதிகாரத்தையும் துறவு அதிகாரத்தோடு சேர்த்துக் கூறினார். வேதார்த்தங்களைத் தமிழ்மொழி ரூபத்தில் மறைத்து எமக்கு அருளிச் செய்த திருவள்ளுவ நாயனார். என்றவாறு.

மொழிகளுள் அருத்தம் இருத்தலின் ஒளித்து என்றும், சத்தத்திற்கு உயிர் அருத்தம் ஆகலின் உருவத்து என்றும், கூறினார். வேதம் என்பதும் தமிழ் என்பதும் ஆகுபெயர். வேதந்தனைத் தமிழ் உருவத்து ஒளித்து

*என்றலுக்கு உதாரணம்: திருவள்ளுவமாலை.*

**"ஆரியமுஞ் செந்தமிழும் ஆராய்ந்து இதனிது**
**சீரியது என்று ஒன்றைச் செப்பு அரிதால் ஆரியம்**
**வேதம் உடைத்துத் தமிழ் திருவள்ளுவனார்**
**ஓது குறட்பா உடைத்து."**

*(ஆரியமொழியினையும் தமிழ்மொழியினையும் ஒப்பிட்டுக் கூறுதல் மிகவும் அரிது. ஏனெனில் ஆரியமொழியில் வேதம் உள்ளது. தமிழ் மொழியில் திருவள்ளுவர் ஓதிய குறட்பா உள்ளது.)*

*என்றும்,*

**"செய்யா மொழிக்குந் திருவள்ளுவர் மொழிந்த பெ**
**பாய்யா மொழிக்கும் பொருள் ஒன்றே - செய்யா**
**அதற்குரியர் அந்தணரே ஆராயின் ஏனை**
**இதற்கு உரியர் அல்லாதார் இல்."**

*(செய்யா மொழியாகிய வேதத்திற்கும் திருவள்ளுவர் மொழிந்த பொய்யா மொழியாகிய திருக்குறளுக்கும் பொருள் ஒன்றே. வேதத்திற்கு உரியோர் அந்தணர் திருக்குறளுக்கு அனைவரும் உரியவர்.)*

*என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.*

**நிறந்தருந் தெய்வப் புலமைவள் ளுவனார்**
**நீத்தவர் பெருமைநூன் முகப்பாற்**
**சிறந்திட வமைத்தாங் கதுகொடில் வாழ்க்கைச்**
**சிறுமைதூற் றினரது தெரியார்க்**
**கறந்தவா தியற்றி னவனினுங் கோடி**
**யதிகமா மெனமன மறாது**
**துறந்துளோ னையும்பட் டணத்தெம தடிக**
**டொகுத்தகட் டுரைதிகழ்த் திடுமே.** 20

*நிறம்தரும் தெய்வப் புலமை வள்ளுவனார்*
*நீத்தவர் பெருமை நூல் முகப்பால்*
*சிறந்திட அமைத்து ஆங்கது கொடில் வாழ்க்கைச்*
*சிறுமை தூற்றினர் அது தெரியார்க்கு*
*அறந்தவாது இயற்றின் அவனினும் கோடி*
*அதிகமாம் என மனம் அறாது*

துறந்து உளோனையும் பட்டணத்து எமது அடிகள்
தொகுத்த கட்டுரை திகழ்த்திடுமே.

எ.து. : அறிஞராற் புகழப்படுகின்ற தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனார் துறந்தோர் அது பெருமையைச் சாத்திர முகத்திற்கு அணியாக வைத்து, அவரது பெருமையைப் பொருளாகக் கொண்டு, அதன் பின்னர் இல்வாழ்க்கைச் சிறுமையைப் புகழ்ந்தது போன்று இகழ்ந்தார். அந்த நுட்பம் தெரியாதார்க்கு முப்பத்திரண்டு அறமும் வழுவாது செய்யும் இல்வாழ்க்கை உடையோனிலும் கோடி பங்கு அதிகமாம் என, உட் துறவு இல்லாத புறத்துறவோனையும் பட்டணத்துப் பிள்ளை ஆகிய எமது சுவாமிகள் தொகுத்துக் கூறிய உறுதிமொழி தானே விளக்கும். என்றவாறு.

துறந்தோர் பெருமை எனவே துறவாதார்க்குச் சிறுமை என்பதும் அவ் அதிகாரத்தினானுங் காண்க. கட்டுரையாற் சிறுமை பெருமை அறியப்படுதலிற் கட்டுரை திகழ்த்தும் என்றார்.

ஆனால் நீர் கூறிய துறவு இலக்கணம் என்னை என்ற சீடனை நோக்கிக் கூறுகின்றார்.

பிறப்பெனு முவரிச் சுழியதா மெழிலார்
பெண்டிரா தியவுயிர்ச் சார்வுஞ்
சிறப்புறு புவியா தியபொருட் சார்வுந்
தீரநீக் குதறுற வவற்றூ
டுறப்படு மெவைநீப் பினுமறி வுடையோ
ரொருதம தனைபிதா வினையுந்
துறப்பரேற் றுறப்போர்க் கருநர கெனநீ
சொற்றசொல் சத்திய மாமால் 21

பிறப்பெனும் உவரிச் சுழியதாம் எழிலார்
பெண்டிர் ஆதிய உயிர்ச் சார்வும்
சிறப்புறு புவிஆதிய பொருட் சார்வும்
தீர நீக்குதல் துறவு அவற்றூடு
உறப்படும் எவை நீப்பினும் அறிவுடையோர்
ஒரு தமது அனை பிதாவினையும்
துறப்பரேல் துறப்போர்க்கு அருநரகு என நீ
சொற்ற சொல் சத்தியம் ஆமால்.

எ.து. : பிறவி ஆகிய கடலுக்குச் சுழி ஆகிய அழகு பொருந்திய பெண்டீர் முதலிய உயிர்ச் சார்வினையும், சிறப்பினை உடைய காணி முதலிய பொருட்சார்வினையும், ஒருங்கே விட்டுவிட்டு நீங்குதல் துறவு, ஆனால் நீர் கூறிய இருவகைச் சார்வான அவற்றுள் பொருந்தி இருக்கிற எவற்றினைத் துறந்தாலும் அறிவினை உடையோர் ஒப்பற்ற தமது மாதாவினையும் பிதாவினையும் துறப்பாரோ, துறந்தால் என்னையோ எனின் துறந்தோர்க்கு அரிய நரகம் என்று நீ சொன்னாய். நீ சொன்ன சொல் உண்மையேயாம். என்றவாறு.

பெண்டீர் ஆதிய எனவே மாதா, பிதா, புத்திரர், சகோதரர் முதலிய பந்துக்களையும், புவி ஆதிய எனவே தனம், தானியம், வஸ்திரம், ஆபரணம், மாடு, ஆடு, அடிமை முதலியவற்றையும் வருவித்துக்கொள்க.

மாதாப்பிதாக்களை நீ இன்னார் என்று அறியாய் என்று கூறி, மேல் மாதா, பிதா, புத்திரர், இன்னார் என்று கூறுகின்றார்.

விடையாதூ ரிறையே தாதைமற் றவன்பான்
மின்னெம தன்னையன் னவரைக்
கடையரே மறந்து துறந்துதா னன்றோ
கடும்பல விடும்பையுற் றனமிவ்
வடைவுணர்ந் திலைபோன் றுடலிதற் கேது
வாய்வரத் தாய்பிதா வெனநெஞ்
சுடைவுறா நின்றாய் பவந்தொறிவ் வணமுற்
றுளவுயிர்க் களவியா துரையே. 22

விடையது ஊர் இறையே தாதை மற்றவன்பால்
மின்எது அன்னை அன்ன வரைக்
கடையரே மறந்து துறந்து தான் அன்றோ
கடும்பல ஈடும்பை உற்றனம் இவ்
அடைவு உணர்ந்திலை போன்று உடல் இதற்கு ஏது
வாய்வரத் தாய்பிதா என நெஞ்சு
உடைவுறா நின்றாய் பவந்தொறும் இவ்வணமுற்று
உளஉயிர்க்கு அளவுயாது உரையே.

எ.து. : இடபத்தில் ஏறி நடத்துகின்ற கடவுளே எமது பிதா. அவனது பாகம் பிரியாது இருந்த மின்போல்வாளே எமது மாதா. அந்தப் பிதாவையும், மாதாவையும் கடையர் ஆகிய யாம் மறந்து துறந்து அல்லவோ அளவில் காலங் கடிய பிறவித்துன்பத்தை அடைந்தனம். இந்த முறைமையை

அறியாய் போன்று உடம்பு தோன்றற்கு ஏதுவாய் வருகின்ற பேர்களை மாதா,பிதாக்கள் என்று மனங்கலங்குறா நின்றாய். சனனந்தோறும் இந்த முறையே மாதா பிதாக்கள் என்று வந்த சீவர்களுக்கு மட்டு யாது, நீ சொல்வாயாக. என்றவாறு.

உயிர்க்கு மாதாவும் பிதாவும், சத்தியும், சிவனும் என்பதும் உயிரும் நித்தியம் அவரும் நித்தியம் என்பதும், அவரை மறந்து நீங்கினோர்க்குப் பிறவித் துன்பம் வரும் என்பதும், சோணித சுக்கிலங்களினால் தேகம் உண்டு ஆகையால், இவ் உடம்பிற்கே மாதா பிதாக்கள் இவர் என்பதும், இவ் உடம்பும் அநித்தியம் இதற்கு ஏதுவாய் வந்தோரும் அநித்தியம் என்பதும், இவர் சனனந்தோறும் வேறு வேறாய் மாறி வருதலின் இவரைத் துறந்து தவம் புரிவோர்க்கு நிரயத் துன்பம் இல்லை என்பதுங் கண்டு கொள்க.

உடல் இதற்கு ஏதுவாய் வரத் தாய் பிதா என்றதற்கு உதாரணம் :

"அத்தனொடு அன்னைக்கு அன்பு செய்கின்றார் அளவில்
 பிறப்புற்று அவை அவை தோறும்
மெத்தனை தாயும், தந்தையும் உற்றார் இத்தனை
 அன்றோ இவர்களும் இங்கே"

(ஒவ்வொரு பிறப்பிலும் தந்தை தாயிடத்து அன்பு செய்கின்றனர். பின் அவர்களைப் பிரிகின்றனர். இப்பிறப்பிற்கு முன்பும் பின்பும் இதுபோல் எத்தனைபேர் தந்தை தாயாக இருந்திருப்பர். அவர்களைப் பிரிந்தது போன்றே இவர்களையும் பிரியவேண்டும்.)

மற்றும் வருவனவற்றால் காண்க.

உயிர்க்குத் தாய்தந்தை வேறே இருத்தலின் உடற்குத் தாய் தந்தைகளைத் துறந்தாலும் தன்னை நம்பி இருந்த மனைவி புத்திரரைத் துறக்கலாமோ என்ற சீடனை நோக்கிக் கூறுகின்றார்.

தனதகத் தகலா திருந்துபே ரின்பந்
 தருதலான் மனைவியுந் தன்பா
லினிதுதித் தொருதன் வினையொழித் தசையா
 திருத்திவீட் டமுதருத் துதலா
லுனலருஞ் சுதனு மொருவனுக் கவனூ
 டுதயமா யெழுந்தமெய் யுணர்வே
பிணையிஃ தன்றி மனைசுத ரெனயாம்

பேணிநாட் கழிப்பதும் பிழையே 23

தனது அகத்து அகலாது இருந்து பேரின்பம்
தருதலால் மனைவியும் தன்பால்
இனிது உதித்து ஒருதன் வினை ஒழித்து அசையாது
இருத்தி வீட்டமுது அருத்துதலால்
உனல்அரும் சுதனும் ஒருவனுக்கு அவனூடு
உதயமாய் எழுந்த மெய் உணர்வே
பினை இஃது அன்றி மனைசுதர் எனயாம்
பேணிநாள் கழிப்பதும் பிழையே

எ.து. : தனது மனம் ஆகிய வீட்டின் கண் இறை அளவாயினும் விட்டு நீங்காமல் இருந்து பேரின்பத்தைத் தருதலினால் பெண்டிரும், தனது இடத்தில் இனிதாய்த் தோன்றி ஒப்பற்ற தனது தொழில்களை மாற்றி முத்தி ஆகிய வீட்டின் கண் அசைவற வைத்து அம்முத்தி இன்பம் ஆகிய அமுதினைப் புசிப்பித்தலின் நினைத்தற்கு அரிய புத்திரனும், ஒரு புருடனுக்கு அவன் உள்ளே உதயமாய்த் தோன்றிய மெய்ஞ்ஞானமே. பின்னர் இந்த மெய்ஞ்ஞானத்தை அன்றிப் பெண்டிர் புத்திரர் என்று அபிமானித்துக்கெண்டு வீணிலே வாழ்நாள்களைப் போக்குதலும் குற்றமாம். என்றவாறு

மனை சுதரால் வரும் இன்பம் அநித்தியமும், அற்பமுமாகலாலும் மெய் உணர்வால் வரும் இன்பம் நித்தியமும் பூரணமும் ஆகலாலும் இதற்கு அஃது ஒப்பன்று. ஆயினும் ஒருபுடை ஒப்பாகக் கூறினார் என்று அறிக.

ஆனால் இந்த இளமைப் பருவத்திலே இல்வாழ்க்கையோடு இருந்து இம்மை இன்பத்தை அநுபவித்து முதிர்ந்த பருவத்தில் துறந்து தவத்தைப் பண்ணி வீட்டு இன்பத்தை மறுமைக்கண் அடையக்கூடாதோ என்ற சீடனை நோக்கிக் கூறுகின்றார்.

வேண்டினுண் டாகத் துறக்கவென் றமையால்
விருத்தனாய்க் கருத்தழிந் துருவங்
காண்டல்செய் விழிபஞ் சடைந்துட னடுக்குங்
காலம்வந் தடைவதன் முன்னர்
மாண்டகற் பதனாற் சாலியைப் போலு
மனைவியா தியசமா தியினூற்
றீண்டுமா னந்தம் பலவடைந் திடுதற்
கெண்ணிநீத் திடுவர்புண் ணியரே. 24

வேண்டின் உண்டாகத் துறக்கம் என்றமையால்
விருத்தனாய்க் கருத்தழிந்து உருவம்
காண்டல்செய் விழிபஞ்சடைந்து உடல் நடுக்குங்
காலம் வந்தடைவதன் முன்னர்
மாண்ட கற்பதனால் சாலியைப்போலும்
மனைவிஆதிய சமாதியி னுள்
தீண்டும் ஆனந்தம் பலஅடைந் திடுதற்கு
எண்ணி நீத்திடுவர் புண்ணியரே.

எ.து. : முத்தி இன்பம் வேண்டில் காலம் உண்டாகத் துறக்க வேண்டும் என்று திருவள்ளுவ நாயனார் அருளிச் செய்தமையால், வார்த்திகனாகி மனந்தடுமாறி உருவங்களைக் காணுதல் செய்யா நின்ற கண்கள் பஞ்சு அடைந்து உடல் நடுக்குறும் அக்காலம் வந்து பொருந்து முன்னரே, மாட்சிமைப்பட்ட கற்பினால் அருந்ததியைப் போன்ற பெண்டிர் முதலாகிய சார்வுகளை சமாதி நிட்டையைப் பொருந்தி இக்காயத்தின் கண் பல இன்பங்களை அடைதற்குக் கருதித் துறப்பார் புண்ணியர். என்றவாறு.

முதுமைக் காலத்தில் உள்ளம் தடுமாறுதலின் ஆசாரியன் உபதேசித்த மொழிகளை விசாரணை பண்ணக்கூடாது. விழி பஞ்சடைத்தலின் ஞான சாத்திரங்களைப் பார்க்கக் கூடாது. உடல் நடுக்குறுதலின் அசைவற நிட்டையில் இருக்கக்கூடாது. ஆகையால் நடுக்குங் காலம் வந்து அடைவதன் முன்னர் என்றார். நிட்டை கூடி அவத்தைகள் நீங்குந்தோறும் இன்பம் வருதலின் ஈண்டும் ஆனந்தம் பல அடைந்து இடுதற்கு என்றார். உடல் பொருள் ஆவி மூன்றினையும் ஆசாரியன் கையில் சத்தியமாகக் கொடுத்தலில் புண்ணியர் என்றார். இம் மூன்றினையும் கொடுத்தலாவது “உடல்தான் என்று அபிமானித்தல் இன்மையும், விட்ட பொருள்களின் மேல் பற்றுதல் இன்மையும், சிவம் அன்றி ஒன்றைச் சுட்டுதல் இன்மையும், எனக்கொள்க.

விருத்தனாய்க் கருத்து அழிந்து என்றதற்கு உதாரணம் : திவ்வியபிரபந்தம்,

“முதுகு பற்றிக் கைத்தலத்தான் முன்னொரு கோல்ஊன்றி
விதிர் விதிர்த்துக் கண் சுழன்று மேல்கிளை கொண்டு இருமி
இது என்னப்பர் மூத்தவாறு என்று இளையவர் ஏசாமுன்
மதுஉண் வண்டுபாடுஞ் சோலை அதரி வணங்குதுமே”

(ஒரு கையால் முதுகைப்பிடித்து மற்றொரு கையால் கொம்பினை ஊன்றி, உடல் நடுங்கிக் கண்சுழன்று இருமிக்கொண்டு செல்வதைப் பார்த்து இளையோர், இக்கிழவனைப்பார் என்று ஏசும்முன் தேனுண்ட வண்டுகள் இசைக்கும் திருவதரியை வணங்குவோம்.)

என்றும்,

"பண்டு காமரான வாறும் பாவையர் வாய் அமுதம்
உண்டவா றும் வாழ்ந்தவாறும் ஒக்க உரைத்துஇருமித்
தண்டு காலா ஊன்றி மெள்ளத் தள்ளி நடவாமுன்
வண்டு பாடுஞ் சோலை சூழ்ந்த வதரி வணங்குதுமே"

(இளமையில் பிறர் விரும்பும் அழகு பெற்று, மாதர்கள் வாயமுதம்பருகி இன்பங்களில் வாழ்ந்து, அழிந்ததைச் சொல்லி, இருமித் தடியை காலாக்கி ஊன்றி நடக்கத் தடுமாறும் முன் துளசிமாலை அணிந்த பெருமான் வாழும் திருவதரியை வணங்குவோம்.)

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

நீர் துறக்க வேண்டும் என்று கூறிய மனைவியை முதிர்ந்த வயதில் துறப்பது அன்றி இளமை வயதில் துறந்தால் பாவம் என்ற சீடனை நோக்கிக் கூறுகின்றார்.

இளமையின் மனையைத் துறத்தறீ தெனிற்றா
ணிறத்தலிற் றுறத்த லீடலவா
லளவிறீ தஃதாங் குயிர்ச்செய லன்றே
லபற்சன் னியாசாந்தீ ததுமெய்
விளிதலாற் பழுதின் றேற்பினு மிருப்பார்
விடுதறீ தடுபிணி குறித்தே
லுளையுநோ யிலரு மிறப்பதென் பிறப்போர்ந்
தொழித்திடிற் பழித்திடா துலகே. 25

இளமையின் மனையைத் துறந்தல் தீது எனில் தான்
இறத்தலில் துறத்தல் ஈடு அலவால்
அளவில் தீது அஃது ஆங்கு உயிர்ச்செயல் அன்றேல்
ஆபற்சன்னி யாசம் தீது அதுமெய்
விளிதலால் பழுதின்றே ஏற்பினும் இருப்பார்
விடுதல் தீதுஅடுபிணி குறித்தேல்
உளையு நோய் இலரும் இறப்பதென் பிறப்பு ஓர்ந்து
ஒழித்திடில் பழித்திடாது உலகே.

எ.து. : இளமை வயதினை உடைய மனைவியைத் துறக்குதல் பாவம் என்பை ஆனால், தான் அவளை அவ் இளமைக்கண் விட்டு இறந்து போகின்ற பாவத்தோடு துறந்து போகின்ற பாவம் சமானம் அன்று. ஆகையால் அங்ஙனம் விட்டு இறந்து போதல் அளவிலாத பாவம். இறந்து போதல் சிவச்செயலே அன்றி சீவச்செயல் அன்று ஆகையால் பாவம் இன்று என்பை ஆனால் ஆபற்கசன்னியாசம் சீவச்செயல் ஆகலின் அதற்குப் பாவம் உண்டாக வேண்டும். அச்சன்னியாசம் பண்ணிக்கொண்டவுடனே தேக நாசமாகலின் அது பாவம் இன்று என்பை ஆகில் அச்சன்னியாசம் பண்ணிக் கொண்ட பின்பும் தேகநாசகம் இன்றி இருப்பார் விட்டுத் துறந்திருத்தல் பாவம் அத்தேக நாசம் பண்ணுகின்ற வியாதியைக் குறித்துத் துறந்தமையால் பாவம் இன்று என்பை ஆகில் உடலை வருத்துதல் செய்யும் நோய் இல்லாதாரும் இறந்து போவது என்ன. ஆகையால் பிறப்பினது அநித்தியத்துவத்தை விசாரித்துத் துறந்தால் உயர்ந்தோர் பழியார். என்றவாறு.

விட்டு இறந்தோன் மனைவிக்கு மங்கள காலத்துப் பந்திப் பாவாடைக்கு வரக்கூடாமையினாலும், நல்ல வத்திராபரணங் கந்தபுட்ப முதலியவை தரிக்கக் கூடாமையினாலும், மங்கலத்தின் கண் அவளைக் கண்ட போது மங்கலியப்பெண்கள் இகழ்தலினாலும், துன்பம் வருதலின், விட்டுத் துறந்தோன் மனைவிக்கு அம்மங்கலத்தில் சிறப்புச் செய்கையாலும், நற்புடவை முதலியவைத் தரித்துக் கொள்கையாலும், அவள் புருடனைப் புகழுந்தோறும் அவளையும் புகழ்தலினாலும் இன்பம் வருதலின் இறத்தலில் துறத்தல் ஈடல என்றார். அநித்திய விவேகந்தோன்றித் துறந்தோனை இம்மைக்கண் உயர்ந்தோர் பழியாமையின் அவனுக்கு மறுமைக்கண் பிறவித் துன்பம் இன்று என்பதும், உயர்ந்தோர் பழியார் எனவே இழிந்தோர் பழிப்பார் ஆயினும் அதனால் அவனுக்கு ஒரு குற்றம் இன்று என்பதும், காண்க உலகம் என்றது உயர்ந்தோரை.

புதல்வரைக் குடும்பம் தாங்கும் பருவம் வந்த காலத்தில் அதற்குத் துணையாக வைத்துத் துறத்தல் நன்று; அவர்க்கு அதனைத் தாங்கும் பருவம் வருதற்கு இடையே கனவியாதி வந்த காலத்தில் ஆபற்சன்னியாசம் பண்ணிக்கொள்ளுதல் நன்று; அங்ஙனம் துறத்தல் அன்றிச் சும்மா விட்டுத் துறத்தல் தீது என்ற சீடனை நோக்கிக் கூறுகின்றார்.

**இக்கணத் திருந்த தினிவருங் கணத்து**
**டிருக்குமோ மரிக்குமோ வுடலென்**

றக்கண மனையா திகட்கரன் துணையா
மன்றென வெணித்துற வறஞ்சார்
மிக்கவ னாபற் சன்னியா சியுஞ்சார்
வினுக்குரஞ் சேர்த்திவிட் டவனுந்
துக்கமே வலிற்பின் பவரிவன் போலுந்
துறவரன் றென்பதுங் துணிவே 26

இக்கணத்து இருந்தது இனிவரும் கணத்து ஊடு
இருக்குமோ மரிக்குமோ உடல் என்று
அக்கணம் மனை ஆதிகட்கு அரன் துணையாம்
அன்று என எணித் துறவறம் சார்
மிக்கவன் ஆபற் சன்னியாசியும் சார்
வினுக்கு உரம் சேர்த்தி விட்டவனும்
துக்கமே வலிற்பின் பவர் இவன் போலும்
துறவர் அன்றுஎன்பதும் துணிவே.

எ.து. : இந்தக்கணப்பொழுது இருந்த உடல் இனிமேல் வரும் கணப்பொழுதிலே இருக்குமோ நாசம் ஆமோ என்று அநித்திய விவேகம் தோன்றிய அந்தக் கணப்போதிலே தானே பெண்டிர் ஆதிய சார்வினுக்குச் சிவனே துணை. நாம் துணை அன்று என்று கருதித் துறவத்தை அடைந்த உயர்ந்தோனை ஆபற்சன்னியாசம் பண்ணிக்கொண்டவனும், மனைவி ஆதிய சார்வினுக்கு வலிய துணை சேர்த்தினோனும், ஆவன். இவன் அல்லாமல் வியாதியைக் குறித்து அநித்தியம் தோன்றி ஆபற் சன்னியாசம் பண்ணிக்கொண்டவனும், மனைவியாதிய சார்வினுக்குப் புதல்வர் ஆதி சீவர்களைத் துணையாகச் சேர்த்தினோனும் பின்பு துன்பத்தை அடைதலினால் அவர்களை இவன் போலும் துறவர் என்று சொல்லுவது தெளிவு அன்று என்றவாறு.

இவ்வநித்திய விவேகம் கணப்போதாயினும் மாறாது உடையன் ஆகையாலும், சார்வினுக்கு அழிவில்லாத சிவனே துணையாகச் சேர்த்தினன் ஆகையாலும், இவனே ஆபற் சன்னியாசி என்றும், சார்வினுக்கு உரஞ்சேர்த்தி விட்டவன் என்றும் வியாதியைக்குறித்து ஆபற் சன்னியாசம் பண்ணிக்கொண்டவன் தேகநாசம் இன்றி இருந்த காலத்து மனைவி முதலியோரை விடுத்தேனே என்று பின்பு துன்பம் அடைதலினாலும், சார்வினுக்குச் சீவரைத் துணையாகச் சேர்த்தினோன் அச்சீவர்கட்கு இடையூறு வந்த காலத்தில் அங்ஙனம் வரலாமோ என்று பின்பு துன்பம் அடைதலினாலும், அவர்களை இவன் போலும்

துறவரன்று என்பது துணிவே என்றும் கூறினார். அநித்திய விவேகம் தோன்றித் துறக்கின்ற துறவே சிறப்பு என்பதும், சீவர்களுக்குச் சிவனே துணையன்றிச் சீவகர்கள் துணையன்று என்பதும் கண்டு கொள்க.

வேதம் எழுபத்தைந்து வயதுக்குமேல் சன்னியாசம் பண்ணிக் கொள்ளவேண்டும் என்று கூற, நீர் அதனை மறுத்து இளமை வயதிலே துறக்கலாம் என்று கூறியது என்னை என்ற சீடனை நோக்கிக் கூறுகின்றார்.

**பிறந்தவப் பொழுதே யினியொரு தலையாப்**
**பிறப்பறுத் திடுவமென் றெணியே**
**யுறைந்தனை வயிற்றிப் பினையதுற் பவத்தூ**
**டுறுபெருந் துயரினா லுயிர்கண்**
**மறந்துறு முறையுஞ் சுகரகன் றமையு**
**மதித்துநெஞ் சழிவினம் போல்வார்க்**
**கறைந்திடு மலது பிறப்புணர்ந் தகல்வார்க்**
**கவதியு மறையுமோ மறையே. 27**

*பிறந்த அப்பொழுதே இனியொரு தலையாப்*
*பிறப்பு அறுத்திடுவம் என்று எணியே*
*உறைந்து அனை வயிற்றில் பினையது உற்று பவத்து*
*ஊடு பெரும் துயரினால் உயிர்கண்*
*மறந்துறு முறையும் சுகர் அகன்றமையும்*
*மதித்து நெஞ்சு அழிவினம் போல்வாக்கு*
*அறைந்திடும் அலது பிறப்புணர்ந்து அகல்வார்க்கு*
*அவதியும் அறையுமோ மறையே.*

எ.து. : கருப்பத்தின் நீங்கிப் பூமியின்கண் பிறந்த அந்தக் கணப்போதிலே முன்னெடுங்காலம் இத்துன்பத்தை மறந்து மறந்து மோசம் போனோம். அங்ஙனம் மோசம் போகாதபடி இனி ஒரு நியமம் ஆகத் துறந்து ஞானாசாரியனை அடைந்து வேதாகமங்களைத் தேர்ந்து தவத்தினைச் செய்து பிறப்பினை மாற்றிக் கொள்வோம் என்று மாதாவினது கருப்பத்தின்கண் நினைத்துக் கொண்டிருந்து, பின்னர் அந்த விவேகத்தை உற்பவிக்கும் காலத்து வரும் மிகுந்த பெரிய துன்பங்களினால் சீவகர்கள் மறந்து இருக்கின்ற முறைமையினையும், பிண்ட ஞானம் அண்டத்தின் கண்ணும் மறவாது வந்து சுகரானவர் பிதா முதலிய சார்பினைத் துறந்து தவத்தினைப் பண்ணிப் பிறப்பை மாற்றிய முறைமையினையும் சுருதியும் குருவும் கூறக்கேட்டு அறிந்திருந்தும் மனத்தின்கண் விசாரம் இல்லாத

எம்போலிகளுக்கு இன்ன வயதிலே துறக்க வேண்டும் என்று மட்டுக்கூறுமல்லது பிறப்பினது அநித்தியத்துவத்தை விசாரித்துத் துறப்போர்க்கு மட்டுக்கூறுமோ வேதம், என்றவாறு.

உற்பத்துறு பெருந்துயர் என்றது பிரசூதவாயும் உரித்துத் தள்ளுதலினாலும் யோனித்து வார நெருக்கத்தினாலும் வருந்துன்பங்களை பிறந்தவப்பொழுதே இனி ஒருதலையா என்றதற்கு உதாரணம் : சிவதருமோத்திரம்.

“இறந்தே முனமே இனிப்பிறப்பே
மென்றும் இந்த மறைஇனியாம்
பிறந்த பொழுதே பிறவாத
பெருமை உடைய பிஞ்ஞகனை
அறிந்தே அவலப் பிறப்பிறப்பை
அறுத்து விடுவோம் அவன் அருளால்
செறிந்தே குரவன் திருவடியைத்
திகழ்ந்த வேதாகமந் தெருண்டே”

(இறப்பதற்கு முன்பே இனியும் பிறப்போம் என்றும், இனிப்பிறந்தால், பிறவாத பெருமையுடைய தலைக்கோலம் உடையவனை அறிந்து அவலத்திற்குக் காரணமான பிறப்பிறப்புக்களை அவனது அருளால் அறுத்துவிடுவோம் அதற்கு நற்குருவின் திருவடியைச் சேர்ந்து நல்வேதாகமப் பொருளைத் தெளிந்து கொள்வோம்.)
என்றும் , கூர்மபுராணம்

ஈங்குஇவை பிறழ்ந்துவரும் யாவை அவை என்னில்
கோங்கமுலை மாதரொடு கூடுவதன் முன்னம்
ஓங்கிய சன்னியாசி என உற்று உடலும் ஆகும்
தீங்கு எறி மெய்ஞ்ஞானநெறி சிந்தைநிலை பெற்றால்

(தீமைகளை எறிக்கின்ற சன்னியாச நெறியில் சிந்தை நிலைபெற்றால், பெண்களோடு கூடுவதாகிய எண்ணம் அழிந்துவிடும்.)
என்றும்,

“இல்லறம் முயன்று கடன் மூன்றும் இனி தீந்தால்
அல்லல் அறம் ஏவும் எதியாகி அமர்கிற்பார்
முல்லைநகை மாதர் கடி முற்றித் தினத்தின்
ஒல்லையெதி யாகி உணர்வுற்று உடலுமாமால்”

(இல்லற நெறியில் நின்று துறந்தார், துறவார், இறந்தார்களுக்குரிய மூவறங்களையும் செய்து முல்லைப்பூ போன்ற சிரிப்பினை உடைய பெண்களுடன் கொண்ட ஆசை அற்றால் நல்ல நெறியாகிய துறவுநெறி அமையும்.)

என்றும், வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

**கருப்பமா ருயிரத் துயர்பெயர்த் திடுதல்**
**காரண பூரண ஞானம்**
**விருப்பமா யடையக் கடவமென் றிருக்கும்**
**வியாசர்சே யடைந்தது மதுவே**
**திருப்பியீண் டதனைத் துறவின்மீ தேற்றிச்**
**செப்பலென் னெனிற்றுற வினைவிட்**
**டிருப்பதோர் ஞான மெவன்கொனீத் தவரென்**
**றிசைப்பதென் பெயர்மெய்ஞ்ஞா னிகட்கே.** 28

*கருப்பம் ஆருயிர் அத்துயர் பெயர்த்து இடுதல்*
*காரண பூரண ஞானம்*
*விருப்பமாய் அடையக் கடவம் என் இருக்கும்*
*வியாசர் சேய் அடைந்ததும் அதுவே*
*திருப்பி ஈண்டு அதனைத் துறவின் மீது ஏற்றிச்*
*செப்பல் என்எனில் துறவினை விட்டு*
*இருப்பதோர் ஞானம் எவன்கொல் நீத்தவர்என்று*
*இசைப்பதுஎன் பெயர் மெய்ஞ்ஞானிகட்கே.*

*எ.து. : மாதாவினது கருப்பத்தின்கண் உறைந்துள்ள உயிர்கள் அந்தத் துன்பத்தை இனிமேல் அடையாதபடி நீக்கிக் கொள்ளுதற்கு ஏதுவாகிய பரிபூரண ஞானத்தைச் சந்தோசமாகி அடையக்கடவோம் என்று இருக்கும் வியாசபுத்திரர் ஆகிய சுகர் பிண்டத்தின்கண் நினைத்துக் கொண்டிருந்து அண்டத்தின்கண் வந்து அடைந்ததும் அந்த ஞானமே. நீர் அந்த ஞானத்தைத் திருப்பி இங்கே துறவின்மேல் வைத்துச்சொல்வது என்னை என்று கேட்பாயானால், துறவினைவிட வேறாய் இருப்பது ஒரு ஞானம் யாது? மெய்ஞ்ஞானிகளுக்குத் துறந்தோர் என்று பேர் சொல்வது என்னை? நீ சொல்வாயாக. என்றவாறு.*

*உட்பற்றுப் புறப்பற்று எல்லாம் துறந்த விடத்தின் ஞானம் ஆகலின் துறவினை விட்டு இருப்பது ஓர் ஞானம் எவன் கொல் என்றார்.*

**ஞானியஞ் ஞானங் கெடுத்தலாற் றுறவோ**
**னெனப்படு நவிற்றினஞ் ஞானந்**

தானுட லினைநா னெனுமக விருளென்
றனையிஃ தெமக்குமொத் ததுவா
லூனமின் மறைதேர்ந் தொருசிவ நானென்
றுளத்துணிச் சயித்தவக் கணமே
யானென றவிர்த்தவ் விருளுமாய்ந் திடுமென்
றிசைத்தனை யிதுபழு தன்றே. 29

*ஞானி அஞ்ஞானம் கெடுத்தலால் துறவோன்*
*எனப்படு நவிற்றின் அஞ்ஞானம்*
*தான் உடலினை நான் எனும் அகஇருள் என்*
*றனை இஃது எமக்கு ஒத்ததுவால்*
*ஊனமில் மறைதேர்ந்து ஒருசிவம் நான்என்று*
*உளத்துள் நிச்சயித்த அக்கணமே*
*யான்எனல் தவிர்த்து அவ்விருளும் மாய்ந்திடும் என்று*
*இசைத்தனை இதுபழுது அன்றே"*

*எ.து. : ஞானியானவன் அஞ்ஞானநாசம் பண்ணுதலால் அவன் துறவோன் என்று சொல்லப்படுவன். சொல்லும் இடத்தில் அஞ்ஞானத்தின் இலக்கணந்தான் எங்ஙனம் எனின், தான் அல்லாத உடம்பைத் தான் எனக் கருதப் பண்ணும் உள்இருள் என்றாய். இஃது எமக்கும் சம்மதமாயது. குற்றமற்ற சுருதி விசாரணை பண்ணிச் சர்வமும் மித்தை; ஒப்பற்ற சிவம் ஒன்றுமே, சத்தியம்; அந்தச் சிவம் நான் என்று உள்ளத்தின்கண் நிச்சயம் பண்ணின அந்தக் கணப்போதிலே உடம்பினை யான் என்று கருதும் அகங்காரமும் நீங்கி அவ்வகங்காரம் கருதற்கு ஏதுவாய அஞ்ஞான இருளும் நாசமாம் என்று கூறினை. இங்ஙனம் கூறியது குற்றம் என்றவாறு.*

*அஞ்ஞான இருள் தான் அல்லாத உடலைத் தான் எனக் கருதச் செய்தல் சுபாவம் ஆகையால், எமக்கும் ஒத்தது என்றார். நிச்சய ஞானத்தால் அவ்விருள் போகாது ஆகலின் இது பழுது என்றார்.*

திரிவித வுலகத் தரிதொரு ஞானி
தேர்விடத் தென்றுமோ ரொன்றை
யுரைசெயிற் பிரம வித்தையொத் தரிதோ
வென்றுமிவ் வுலகுரைப் பதனா
லரிசொல்கீ தையிலும் பிரமசா தகரி
னார்க்குள வருத்தமென் பதனாற்
பெரியதோர் வருத்த மெனைமறை துணிந்தப்
பிரமநா னெனவிருத் தலினே 30

திரிவித உலகத்தர் இருதொரு ஞானி
தேர்விடத்து என்று ஓர் ஒன்றை
உரைசெயில் பிரம வித்தை ஒத்தர் இதோ
என்றும் இவ்வுலகு உரைப்பதனால்
அரிசொல் கீதையிலும் பிரமசாதகரி
ணார்க்கு உள வருத்தம் என்பதனால்
பெரியதோர் வருத்தம் எனைமறை துணிந்துஅப்
பிரம நான் என இருத்தலினே.

எ.து. சொர்க்க மத்திய பாதாளம் என்று மூன்று விதமாய் உள்ள உலகத்தின் கண்ணும் விசாரிக்கும் இடத்தில் ஒரு ஞானி கிடைத்தல் அரிது என்றும் ஒரோர் அரிய வித்தையினைப் பார்த்துச் சொல்லும் இடத்துப் பிரமவித்தைபோல் ஈது அரிதோ என்றும், இவ்வுலகத்தார் வழக்கமாகச் சொல்வதனாலும், அரி கூறிய பகவத்கீதையின் கண்ணும் பிரமசாதகரினும் யாவருக்கு உள்ளன. வருத்தங்கள் என்பதனாலும் அவ்வித்தை போல் அரிதும் பெரியதோர் வருத்தமும் என்னை உள? வேதத்தை ஆராய்ந்து இரண்டு என்பது இன்று பிரமம் ஒன்றே என்று நிச்சயம் பண்ணி அந்தப் பிரமம் நான் என்று இருத்தலினால், என்றவாறு.

எவ்வகைப்பட்ட அரிய வித்தைகளும் மாயாகாரியங்களுள் அடக்கம். பிரமவித்தை ஒன்றுமே மாயாகாரிய காரணங்களை எல்லாம் கடந்த வித்தை ஆகலின் இதனது பெருமையினையும் இதனை அடைந்த ஞானியினது பெருமையினையும் வேதாகமங்கள் கூறுதல் அன்றி, உலகத்தாரும் வழக்கமா எடுத்துக் கூறுதலின் உலகு உரைப்பதனால் என்றார். முன்னர் வேதாகம நிச்சயார்த்தம் பண்ணிக்கொண்டு பின்னர்ச் சமாதி நிட்டை கூடிப் பெரிய வருத்தத்துடனே மாயாகாரிய காரணங்களை எல்லாம் நீத்து அரிது ஆகிய பிரமவித்தையை அடைந்தவனே மூவுலகத்தும் அரியன்; அவனே பரஞானி என்பதும், வேத நிச்சயார்த்தம் பண்ணிக்கொண்டு பிரமநான் என்று இருத்தற்குப் பெரிய வருத்தம் இன்மையானும், அங்ஙனம் இருத்தல் யாவர்க்கும் எளிதில் கூடும் ஆகலானும் இந்நிச்சயம் மாயாகாரியமாகிய மனத்தைக் கொண்டாகையாலும் இது பிரம வித்தை அன்று என்பதும், இந்நிச்சயம் உடையார் அபரஞானிகள் என்பதும் கண்டு கொள்க.

திரிவித உலகத்தர் அரிதொரு ஞானி என்றதற்கு உதாரணம் : பரமார்த்த தரிசனம்.

**"காரணம் இறந்து ஒன்றிற்கும் காட்சியில் படாத ஒன்றைச்**
**சேர்பவர் வருத்தம் வேறு செப்பிடல் ஆவது அன்று ஆல்**

ஓர்வரிது இதுதான் வாழும் உயிர்களால் ஆவது ஒன்றா
யார்அவர் பெருமை தன்னை அள அறுப்பவர்களையா"

(வாழும் உயிர்களால் ஆவது ஒன்றுமில்லை. இதனால் வருவது வருத்தமே. அறிதற்கு அரிய பொருளாகிய ஒருவனை யார்? அறிவார்? அவரது பெருமையினை அளவிடமுடியாது.)
என்றும், மற்றும் வருவனவற்றாற் காண்க.

வருத்தமொன் றின்றிச் சாரலாம் பிரம
மென்றயன் வகுத்தகீ தையினூ
டுரைத்ததெற் றினுக்கா யெனிற்பர ஞான
முணர்பவர்க் குன்னுத லுரைத்த
னிரைத்திடு தொழில்க ளொன்றும்வேண் டாது
நீத்துவா ளாவிருத் தலினா
லருத்தமற் றதனு கோர்ந்துநூ றெளித
லாகநீ துணிந்தனை போலும். 31

வருத்தம் ஒன்று இன்றிச் சாரலாம் பிரமம்
என்றயன் வகுத்த கீதையின் ஊடு
உரைத்தது எற்றினுக்கா எனில் பரஞானம்
உணர்பவர்க்கு உன்னுதல் உரைத்தல்
நிரைத்திடு தொழில்கள் ஒன்றும் வேண்டாது
நீத்து வாளா இருத்தலினால்
அருத்த மற்றதனுக்கு ஓர்ந்து நூல் தெளிதல்
ஆகநீ துணிந்தனை போலும்.

எ.து. : ஒரு வருத்தமும் இன்றிப் பிரமத்தை அடையலாம் என்று பிரமன் வகுத்துக் கூறிய பிரமகீதையின் கண் சொல்லியது என்னத்துக்காக என்று கேட்பாயானால், பரஞானத்தை அறிவோர்க்கு மனத்தால் நினைத்தலும், வாக்கால் சொல்லுதலும் முறை வழுவாது காயத்தால் செய்யும் தொழில்களும் ஆகிய இவற்றுள் ஒன்றாயினும் விரும்பாது விட்டுச் சும்மா இருத்தலினால். அங்ஙனம் அருத்தம் இருக்க அதனை அறியாது நீ இச்செய்யுளுக்கு அருத்தம் வேதத்தை ஆராய்ந்து நிச்சயம் பண்ணிக்கொள்ளுதலாக இங்ஙனம் அறிந்தாய் போலும் என்றவாறு.

மனத்தால் நினைத்தல் கிரியாயோகம்; வாக்காற் சொல்லுதல் வேதாகமங்களை யோதி நிச்சயம் பண்ணப்பட்ட அபரஞானம். காயத்தால் செய்தல் சரியை கிரியைகள். இச்சரியை கிரியை

*யோகங்களையும் அபரஞானத்தினையும் கடந்தது பரஞானம் ஆகலின் அப்பரஞானம் உணர்வோர்க்கு அம்முக்கரணங்களும் அசைவின்றி இருக்கவேண்டும். ஆகலின் ஒன்றும் வேண்டாது வாளா விருத்தலினால் என்றார். வாக்குமனம் மாயகாரியம் இவற்றால் நிச்சயம் பண்ணின ஞானம் ஞானமன்று ஆகலின் இப்பாட்டிற்கு அருத்தம் ஈதன்று என்று கூற வேண்டி நீ துணிந்தனை போலும் என்றார். முக்கரணங்களும் அசைந்தவிடத்து வருத்தம் என்பதும் அவை அசையாது நின்றவிடத்து வருத்தம் இன்று என்பதும் கண்டுகொள்க.*

*வருத்தம் ஒன்று இன்றிச் சாரலாம் என்றதற்கு உதாரணம் : சொருபானந்த சித்தியார்*

"ஆதலால் அறியும் அறிவெலாம் கைவிட்டு
அறிவினுக்கு அறிவதாய் நின்ற
பேதமில் பிரமம் ஒன்றுமே காண்பான்
பெறும்பெறின் இன்பமாய்ப் பிறத்தல்
சாதலற்று இருக்கும் அதனை ஓர் வருத்தம்
இன்றியே சாரலாய் இருக்க
வாதரித்து அறியார் அற்பமே விரும்பி
அனந்த துக்கத்திலே அமைவார்"

*(பெறாத இன்பத்தை உடையவனாய்ப் பிறத்தல் சாதல் அற்று வேறுபாடு இல்லாமல் ஒருபொருளாய், அறிவினுக்கு அறிவாய் நின்ற பரமனைச் சார்ந்தால் என்றும் வருத்தம் இன்றி இருக்கலாம். இதனை அறியாதார் அளவில்லாத துன்பத்தினை அடைவர்.)*

சிறியவர் மணற்சோ றுண்டுதேக் கிடல்போற்
றேர்ந்துநூ றெளிந்தமாத் திரத்தி
னிதரிற் சிவமும் விடயமா மெனநீத்
தகத்திரு ளறாதுவைத் தந்தோ
வுறுமகம் பிரம மெனவுரைத் திறுமாந்
துறைதலோ ஞானமஞ் ஞானந்
துறவினை யுறாது மாயுமே வாயாற்
சுடரெனி னிருடுமிந் திடுமே. 32

*சிறியவர் மணல்சோறு உண்டு தேக்கிடல் போல்*
*தேர்ந்து நூல் தெளிந்த மாத்திரத்தின்*

அறிதரில் சிவமும் விடயமாம் என நீத்து
அகத்து இருள் அறாது வைத்து அந்தோ
உறும் அகம் பிரமம் என உரைத்து இறுமாந்து
உறைதலோ ஞானம் அஞ்ஞானம்
துறவினை உறாது மாயுமே வாயால்
சுடர் எனில் இருள் உமிந் திடுமே.

எ.து. : சிற்றில் இழைக்கின்ற சிறு பெண்கள் மணல் ஆகிய சோற்றினை வயிறு நிறைய உண்டது போல் உண்டு ஏப்பம் இடுகின்றது போல், வேதத்தினை ஆராய்ந்து நிச்சயம் பண்ணிக்கொண்ட மாத்திரத்திலே அறிவினால் அறியப்படுவன எல்லாம் விடயம் ஆகலின் சிவத்தினை அறியத்தொடங்கில் இதுவும் விடயம் ஆம் என்று இதனை அறியும் அறிவை விட்டு உள்ளிருள் ஆகிய அவித்தையை நீங்காது வைத்துக் கொண்டு அந்தோ அவ்விடத்துப் பொருந்தா நின்ற நான் பிரமம் என்று சொல்லி இறுமாந்து கொண்டிருக்குதலோ ஞானம்? அஞ்ஞானமானது துறவினை அடைந்தால் அன்றி நாசமாமோ? இருள் வீட்டின் இடத்து இருந்து கொண்டு வாயினால் விளக்கு என்றால் அவ்விருள் நாசமாமோ நீ சொல்வாயாக, என்றவாறு,

சிறியவர் சோறு அல்லாத மணலைச் சோறாகப் பாவித்துத் தாம் உண்ணாது இருந்தும் உண்டதுபோல் பாவித்துப்பிறர் காண ஏப்பம் இடுகின்றது போல், இவரும் அபர ஞானத்தைப் பரஞானமாகப் பாவித்துப் பிரமானந்தம் லபியாது இருந்தும் லபித்தது போல் பாவித்துப் பிறர்க்குச் சொல்கின்றார் எனக்கொள்க. மாயகாரியங்களாகிய எல்லாவற்றையும் துறந்து அஞ்ஞானத்தைக் கெடுக்க வேண்டுதலின் துறவினை உறாது மாயுமே என்றார்.

ஞானத்தால் அஞ்ஞானத்தைக் கெடுப்பது அன்றித் துறவினால் அஞ்ஞானத்தைக் கெடுக்கலாமோ என்ற சீடனை நோக்கித் துறவுதானே ஞானம் என்று மேற்கூறுகின்றார்.

ஞானியே யெவரும் வணங்குதற் குரியோ
னவிலுமா சௌசமில் பெரியோன்
மானிலத் தவன்றா னுடல்விடிற் குகைப்பால்
வைக்கவென் மறைப்படி புரித
றானும்வே தாந்தப் பொருடுணிந் திடினுஞ்
சாற்றினில் வாழுமந் தணர்க்கின்
றானதாற் றுறவு பெற்றநற் றவரே
யமலவீ டடையுஞா னிகளே. 33

ஞானியே எவரும் வணங்குதற்கு உரியோன்
நவிலும் ஆசௌசம்இல் பெரியோன்
மானிலத்து அவன்தான் உடல்விடில் குகைப்பால்
வைக்க என் மறைப்படி புரிதல்
தானும் வேதாந்தப் பொருள் துணிந்திடினும்
சாற்றினில் வாழும் அந்தணர்க்கு இன்று
ஆனதால் துறவு பெற்ற நற்றவரே
அமல வீடடையும் ஞானிகளே.

எ.து. : துறவியாகிய ஞானியே யாவராலும் வணங்குதற்கு உரியோன். அவனே அசுத்தம் இல்லாத பெரியோன். அவன் பூமியின்கண் காயத்தைவிட்டு நீங்கிய காலத்தில் அதனைக் குகைக்கண் வைக்க வேண்டும் என்று வேதம் சொன்னபடியே செய்குதலும் வேதமுடிவிலே விளங்கா நின்ற மெய்ப்பொருளை உணர்ந்த பரஞானிகள் ஆயினும் இல் வாழ்க்கையினை உடைய அந்தணருக்கு இல்லையானபடியினாலே, துறவினை அடைந்த நல்ல தவத்தினை உடையோரே நின்மலம் ஆகிய வீட்டினை அடையும் ஞானிகள். எ.று. :

துறவினோன் ஞானியல்லன் ஆயினும் இல்வாழ்க்கை உடையோன் ஞானி ஆயினும் இவன் அவனை வணங்க வேண்டுதலின் எவரும் வணங்குதற்குரியோன் என்றும், அவன் இறந்த காலத்தில் அவனது காயத்தைக் குகைக்கண் வைத்து அவனது தலையில் தேங்காய் உடைத்துப் பூசித்துப் பின்பு மூழ்காமல் வீடு புகுதலின் ஆசௌசமில் பெரியோன் என்றும் கூறினார். இல் வாழ்க்கையில் ஞானம் வருதல் ஏகதேசம் ஆகையாலும், துறவின் கண் ஞானம் வருதல் வெகுவாகையாலும் துறவினை ஞானம் என்றார். ஞானியே எவரும் வணங்குதற்குரியோன் என்றதற்கு உதாரணம் : சமாதி.

"ஒழுக்கமே புரிந்தோனாதல் அதனை விட்டொழிந்தான் ஆதல்
இழுக்கஞ்செய் மூர்க்கன் ஆதல் பண்டிதனாதல் எண்ணில்
பழிப்பரு ஞானந்தன்னில் முயல்பவன் பணியத்தக்கோன்
தொழத்தகு ஞானி என்று சொல்ல வேண்டுவதும் உண்டோ"

(ஒழுக்கம் உடையவன், அதனை விட்டு இழிவான செயல்களைச் செய்யின் மூர்க்கனாவான். (பண்டிதன்) புலவன் என் அனைவரும் பணியத்தக்கவன் பழிப்பற்ற ஞானத்தை முயன்று பெற்ற ஞானியே ஆவான்.)

பெரியோன் என்றதற்கு உதாரணம் : குறுந்திரட்டு

"பலன்கள் வேண்டிய பரிசுஎலாம்
பலித்திடும் பரமதத் துவஞானி
நலங்கொ ணாமமா மந்திரஞ்
செபித்திட நயந்தவன் நீராடுஞ்
சலங்கொ டீர்த்தமாம் அவன்திரு மேனியே
சகல தெய்வமுஞ் செவ்வாய்
மலர்ந்தவாசக மறுபிறப்பென
வரும் அயற்பிணி மருந்தாகும்"

(வேண்டிய தன்மைகளையெல்லாம் பெற்றிடும் மெய்ஞ்ஞானியின் பெயர் உச்சரிக்கப் பெரிய மந்திரம். அந்த ஞானி விரும்பி நீராடும் நீரே தீர்த்தம். அவன் திருமேனியே எல்லாத் தெய்வங்களும் ஆகும். அவன் செவ்வாய் மலர்ந்த சொல்லே மறுபிறப்பாகிய நோயினை நீக்கும் அருமருந்து.)

குகைப்பால் வைக்க வென்றதற்கு உதாரணம் : மெய்ஞ்ஞான விளக்கம்.

" பிறவி லாத பிரமபீசன் உடல்
இறுதி யாவனற் றீண்டிடில் எங்கணும்
அறுகி விற்கிடை கோடி யனலதாய்ச்
செறிவு செய்யும் அத்தேசம் என்று ஓதினார்."

(மெய்யுணர்விலிருந்து பிரியாதவராய் பிரமத்தை உணர்ந்த ஞானியின் உடலை நெருப்பில் இட்டால் அந்நெருப்பு கோடிவிற்கிடையளவும் பரவி நாட்டில் துயரத்தைக் கொடுக்கும்.)

விற்கிடை - நான்கு முழ அளவு

என்றும்,

"முன்னமே பாகமாம் ஊரல் செய்யுநாட்
பின்னரும் வேவவேண் டிடுமோ பேசிடாய்
அன்னதே இவ்வுடல் அறிவால் அட்டது
பின்னினிச் சுடுவது பிழையே யாகுமால்"

முன்பே புன்சிரிப்பாகிய தீயினால் அடப்பட்டது, பின்னரும் வேக வேண்டுமோ? இவ்வுடல் அறிவால் சமைத்தது. பின்னும் இதனைத் தீயில் இடுவது பிழையாகும்.

என வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

ஞானத்திலக்கணம் யாதென்று கேட்ட சீடனை நோக்கிக் கூறுகின்றார்.

தேர்ந்திடி னபரம் பரமென விரண்டாய்த்
திகழ்தரு ஞானமாங் கவற்றூ
டோர்ந்திடு மறையா தியகலை யபர
முயர்பர னொடுவிர வயிக்கங்
கூர்ந்துண ருணர்வே பரமதைத் தெளியக்
கூறன்மாத் திரங்கலை ஞானஞ்
சார்ந்துணர் வரிதப் பரனையோர்ந் தன்றிச்
சாற்றினவ் வயிக்கமாந் தலமே. 34

தேர்ந்திடின் பரம் அபரம் என இரண்டாய்த்
திகழ்தரு ஞானமாம் கவற்று ஊடு
ஓர்ந்திடு மறை ஆதிய கலை அபரம்
உயர் பரன் ஓடு விரவு அயிக்கம்
கூர்ந்துஉணர் உணர்வே பரம் அதைத் தெளியக்
கூறல் மாத்திரம் கலை ஞானம்
சார்ந்து உணர்அரிது அப்பரனை ஓர்ந்து அன்றிச்
சாற்றின் அவ் அயிக்கம் மாந்தலமே.

எ.து. : விசாரிக்கும் இடத்தில் ஞானந்தான் அபர ஞானம் என்றும், பரஞானம் என்றும் இரண்டு பிரகாரமாய் விளங்கா நிற்கும். அந்தஅபரஞான பரஞானங்களின் இலக்கணம் யாது என்னின், அவ்விரண்டின் உள்ளும் ஆராயப்பட்ட வேதாகம முதலிய கலைகளை ஓதி உணர்ந்து பொருணிச்சயம் பண்ணுதல் அபரஞானம்? உயிரானது பரனுடனே கலந்து ஐக்கம் கூடுதலை நுண்ணியதாக அறியும் அறிவே பரஞானம். ஆனால் அபரஞானத்தில் பயனில்லையோ என்னின் பரஞானத்தைத் தெளிவுபடச் சொல்லுதன் மாத்திரமேயாம். ஆனால் அவ்வைக்கியத்தை அறியும் நெறியாது என்னின், பொருந்தி அறிதற்கு அரிது. மேற்கூறிய பரனை அறிந்தால் அன்றிச் சொல்லும் இடத்தில் அந்த ஐக்கியமாகிய தலம். எ.று. :

ஆங்கென்பது அசைநிலை. ஆனால், அந்தப்பரனை அறியும் நெறிதான் எங்ஙனம் என்ற சீடனை நோக்கிக் கூறுகின்றார்.

அடுத்தவிச் சீவன் றன்மையோர்ந் தன்றி
யறியொணாப் பரனையஞ் ஞானங்
கெடுத்தலாற் சீவன் றனையுமோர்ந் தொருவர்
கிட்டொணா நனவினிற் சுழுத்தி

யுடைத்துமற் றெவனுக் கவனவஞ் ஞான
முடைக்குமுட் கரணவா தனைக
டுடைத்திடி னபாவ மெனப்படு நனவிற்
சுழுத்தியு மெளிவந்து தோன்றும். 35

அடுத்த இச்சீவன் தன்மை ஓர்ந்து அன்றி
அறிஒணாப் பரனை அஞ்ஞானம்
கெடுத்தலால் சீவன் தனையும் ஓர்ந்து ஒருவர்
கிட்டொணா நனவினில் சுழுத்தி
உடைத்து மற்று எவனுக்கு அவன் அஞ்ஞானம்
உடைக்கும் உட் கரண வாதனைகள்
துடைத்திடின் பாவம் எனப்படு நனவில்
சுழுத்தியும் எளிவந்து தோன்றும்.

எ.து. : இந்த உடம்பின் கண்ணே பொருந்தி இருக்கின்ற இச்சீவனது இயல்பை அறிந்தால் அன்றி அப்பரனை அறியக் கூடாது. ஆனால் அச்சீவனை அறியும் முறைமை எங்ஙனம் என்னின் அஞ்ஞானத்தைக் கெடுத்தாலன்றிச் சீவனையும் அறிந்து ஒருவருங் கிட்டக்கூடாது. ஆனால், இந்த அஞ்ஞானத்தைக் கெடுக்கு முறைமை எங்ஙனம் என்னின், நனவிற் சுழுத்திஎவனுக்கு உடையது அவன் அவ்வஞ்ஞானத்தைக் கெடுப்பன். ஆனால் அந்நனவிற் சுழுத்திவருநெறி எங்ஙனம் என்னின், அந்தக்கரண வாதனைகளை ஒழித்தால் அபாவம் என்று சொல்லப்படும். நனவிற் சுழுத்தியும் எளிதில் வந்து உதயமாம். எ.று. :

ஆனால் அந்தக்காரணவாதனை ஒழிக்கும் நெறி எங்ஙனம் என்ற சீடனை நோக்கிச் கூறுகின்றார்.

யோகசா தனையால் வாதனை கரணக்
கொழியுமவ் வியோகமு மிருமைத்
தாகுமே கிரியை ஞானமென் பேதத்
தாதனா தியதொழில் யோக
மேகமாம் பொருடோர்ந் ததுவிது வெனுஞ்சுட்
டிறத்தன்மற் றையதிரு வகைக்கும்
போகவேண் டிடுமைப் புலன்களு மிறந்தப்
புலனவா வொழித்தலாற் போமே. 36

யோக சாதனையால் வாதனை கரணக்கு
ஒழியும் அவ் வியோகமும் இருமைத்து

ஆகுமே கிரியை ஞானம் என் பேதத்து
ஆதன் ஆதிய தொழில் யோகம்
ஏகமாம் பொருள் தேர்ந்து அதுஇது எனும் சுட்டு
இறத்தல் மற்றையது இரு வகைக்கும்
போக வேண்டிடும் ஐம் புலன்களும் இறந்துஅப்
புலன்அவா ஒழித்தலால் போமே.

ஏ.து. : யோக சாதனையினால் அந்தக்கரணங்களுக்கு வாதனை ஒழியும். ஆனால் அவ்வியோகத்தின் இலக்கணமும் யாது என்னின் அந்த யோகமும் கிரியை ஞானம் என்னும் இரண்டு பேதத்து கிரியாயோகம் என்றும் ஞான யோகம் என்றும் இரண்டு பிரகாரமாயிருக்கும் அந்தக்கிரியாயோக ஞானயோக இலக்கணங்கள் யாவை எனின் கிரியாயோகம், 1 இயமம், 2 நியமம், ஆதனம் பிராணாயாமம், பிரத்தியாகாரம். தாரணை, தியானம், சமாதி என எண்வகையாய் இருக்கும். ஞானயோகம் ஏகமாய் உள்ள மெய்ப்பொருளை வேதாகமங்களை ஆராய்ந்து நிச்சயம் பண்ணிக்கொண்டு பின்னர் ஞான நிட்டை கூடி, அது என்றும் இது என்றும் சுட்டி அறியும் சுட்டறிவு எல்லாம் இறந்து கரணம் அசைவற நிற்றல். ஆனால் இவ்வியோகத்தை அடையுமாறு எங்ஙனம் என்னின். அந்த இருவகை யோகத்தினை அடைதற்கும் ஐம்புலன்களும் இறந்து போக வேண்டும். ஆனால் இவ்வைம்புலன்களும் இறந்து போம்படி செய்தற்கு உபாயம் எங்ஙனம் என்னின் ஐந்து அவாவினையும் ஒழித்தலினால் அப்புலன்கள் ஐந்தும் இறந்துபோம் என்றவாறு.

---

1 இயமம்.

ஏம முறுமியம மீரைந் திவைதம்மிற்
தூய்மை யருளுண் சுருங்கல் பொறைசெவ்வை
வாய்மை நிலையுடமை யேழும் வளர்விப்ப
காமங் களவுகொலை மூன்றுங் கைவிடுவ

2. நியமம்

தானந் தயவொடு சந்துட்டி பத்தி தற்பர தியனாநற் பூசை
யூனந் தருமொழுக் கத்தினி னாண ளுயர்செப மொள்ளிய விரத
ஞானந் தருமுறை கேட்டதின் முயற லெனநவி லீரைந்து மெய்த்
தானங் கசைவற நின்றிடு மிதுவே சாற்றிய நியமயோ ததுதான்

---

ஆதன் ஆதிய எனவே இயமாதி வருவிக்கப்பட்டது. புலன்கள் ஐந்து ஆகையால் அவற்றின்கண் செல்லும் அவாவும் ஐந்தாயிற்று. யோக சாதனையால் வாதனை கரணக்கொழியும் என்றதற்கு உதாரணம் : குறுந்திரட்டு.

"அண்டம் எண்திக்கு எங்கண்ணும்
அடங்காச் சூனியம் தாகக்
கண்டுகொண்டு இருக்கக் கண்ட
கருத்தையும் அறவே விட்டால்
அண்டம் எண்திக்கு எங்கண்ணுமாய்
நின்ற ஆனந் தத்தைக்
கண்டு கொண்டிருக்கும் வண்ணங்
கணத்தில் வந்துதிக்கும் அன்றே"

*(எட்டுத்திக்குகளுக்கும் உட்பட்ட உலகம் வெற்றிடம் எனக்கண்டு கண்ட வெற்றிடம் என்ற கருத்தையும் விட்டால் உல்கம் என்று கூறுகின்ற இடமெல்லாம் நிறைந்து நிற்பது ஆனந்தம் என்ற உண்மை ஒரு கணத்தில் தோன்றும்.) மற்றும் வருவனவற்றால் காண்க.*

*அந்த அவாவினை அறுக்குமாறு எங்ஙனம் என்ற சீடனை நோக்கிக் கூறுகின்றார்.*

ஐம்புல னடல்வேண் டும்விடல் வேண்டு
மொருங்குவேண் டியவனைத் தையுமென்
றும்பரும் பரவு மொருதமிழ் வேத
முரைத்தலா னோரிரு வகையா
நம்புறச் சார்பை வெறுத்தவா வறுத்தைம்
புலனொழித் தொழுங்கினா டருமச்
செம்பொருள் காண்ப தறிவறி யாமை
சிதைத்தல்வீ டெனத்திகழ் தருமால். 37

*ஐம்புலன் அடல்வேண்டும் விடல் வேண்டும்*
*ஒருங்கு வேண்டிய அனைத்தையும் என்று*
*உம்பரும் பரவும் ஒருதமிழ் வேதம்*
*உரைத்தலான் ஓரிருவகையா*
*நம்புறச் சார்பை வெறுத்து அவா அறுத்து ஐம்*
*புலன் ஒழித்து ஒடுங்கி*
*செம்பொருள் காண்பது அறிவு அறியாமை*
*சிதைத்தல் வீடு எனத் திகழ் தருமால்*

*எ.து. : வீடு அடையக் கருதினோான் ஐம்புலன்களையும் அடல்வேண்டும் என்றும் அவ்வைந்தினையும் அடுதற்கு அவற்றால் அனுபவிக்க விரும்பி வைத்த பொருள்கள் அனைத்தினையும் ஒருங்கே விடல் வேண்டும் என்றும், தேவர்களும் தோத்திரம் பண்ணாநின்ற ஒப்பற்ற தமிழ்*

வேதமாகிய திருவள்ளுவப் பயன் கூறுதலின் உயிர்ச்சார்பு, பொருட்சார்பு என்று இரு வகையாய் உள்ள நமது புறச்சார்பினை முன்னர் வெறுத்துத் துறந்து பின்பு அதன்கண் வைத்த அவாவினை அறுத்துப் பின்பு பஞ்சேந்திரியங்களையும் விடயங்களைக் காணுந்தோறும் எழுந்து செல்ல ஒட்டாது உள்ளடக்கி இந்த முறையே ஒவ்வொன்றாக நீத்துச்சென்று யாவராலும் அறிதற்கு அரிய அந்தச் செவ்விய மெய்ப்பொருளை அறிவது ஞானம் எனவும், அந்த ஞானத்தால் அஞ்ஞானத்தைக் கெடுப்பது வீடு எனவும் விளங்கா நிற்கும் ஆகலின், ஞானமும், வீடும் இவைகள் என்று அறிவாயாக, என்றவாறு.

முன்பு இருவகைச் சார்பாகிய புறப்பற்றினை ஒழித்து அதற்குமேல் அதன்கண் வைத்த அவாவினை அறுத்து அதற்குமேல் கா்ணப்பட்ட விடயங்களில் எழாமல் இந்திரிய நிக்கிரகம் பண்ணி, அதற்குமேல் முன்னர் ஏறி இருந்த கரணவாதனையை ஒழித்து, அதற்குமேல் நனவிற் சுழுத்தியைப்பெற்று, அதற்குமேல் அஞ்ஞான நிவிருத்தி பண்ணி அதற்குமேல் சீவ தரிசனம் பண்ணி அதற்குமேல் பரை தரிசனம் பண்ணி அதற்குமேல் சிவதரிசனம் பண்ணிஅதற்குமேல் ஐக்கியம் கூட வேண்டுதலின் ஒழுங்கின் நாடும் அச்செம்பொருள் காண்பது அறிவு என்றார்.

விடல் வேண்டும் ஒருங்கு வேண்டிய அனைத்தும் என்றதற்கு உதாரணம் : தேவிகா லோத்தரம்.

"துக்கசுகமாசை வெறுப்பு என்று கூட்டுந் துவம்துவங்க
இரண்டவைபோல் சொல்லப்பட்ட
மிக்கதெய்வ மடவார்கள் தன் மாதன்ம மெய்ப்பலன்கள்
வேறு வேறு உளவாம் அன்றே
தொக்க உளம் அதுவாக்கும் பிறப்பை ஆக்கும் தொடர்பெனவே
துணிந்து அந்தத் தொடர்பை ஆக்குந்
தக்க பொருட் சார்பு உயிர்ச் சார்படைய நீக்கும்
தவத்தார்பால் சிவம்வந்து சாருங்காணே"

(துன்பம், சுகம், ஆசை, வெறுப்பு என்பனவற்றைக் கூட்டும் யான், எனது என்னும் பந்தங்கள். இவைபோல் தெய்வமடவார்களின் தொடர்பு அவர்களது நினைவையே உருவாக்கும். மேலும் பிறப்பைத்தரும். இவற்றைத் தரும் சார்பை உயிரானது விட்டு நீங்கத் தவத்தினைச் சார்தல் வேண்டும். இத் தவத்தால் சிவம் தானேவந்து சாரும்.)

**அரம்பையுள் ளூறுதண் டெடுத்தலி னொருவ**
**னனுபவ மாஞ்சிவ முணர்த**
**னிரம்புமெய் யுணர்வத் தண்டின்மீ தொன்றி**
**நின்றநா ரனைத்துநீக் குதல்போல்**
**விரும்பிரு வகைப்பற் றையந்துறந் திருளை**
**வீட்டல்வீ டிவற்றையே யன்றி**
**வரும்பர வுரனும் வீடும்வே றறியேம்**
**வார்த்தைமாத் திரத்தியாம் பெறவே.** 38

*அரம்பை உள்ளூறு தண்டு எடுத்தலின் ஒருவன்*
*அனுபவமாம் சிவம் உணர்தல்*
*நிரம்புமெய் உணர் அத்தண்டின் மீது ஒன்றி*
*நின்றநார் அனைத்து நீக்குதல் போல்*
*விரும்பு இருவகைப் பற்றையும் துறந்து இருளை*
*வீட்டல் வீடு இவற்றையே அன்றி*
*வரும்பரஉரனும் வீடும் வேறு அறியேம்*
*வார்த்தை மாத்திரத்து யாம் பெறவே.*

*எ.து. : வாழையினது மட்டைகட்கு எல்லாம் உள்ளே சேமமாயிருக்கின்ற தண்டினை எடுத்தல்போல் ஒருவன் அனுபவமாய் மாயாகாரிய காரணங்கட்கு எல்லாம் சேமமாய் உள்ளீடாய் விளங்காநின்ற சிவத்தினை அறிதலே எங்கும் பரிபூரணம் ஆகிய பரஞானம். அந்த வாழைத்தண்டின் மேலே பொருந்தி நின்ற மட்டைகள் அனைத்தினையும் ஒவ்வொன்றாக நீக்குதல்போலத் தம்மால் விரும்பப்பட்ட உட்பற்றுப் புறப்பற்று ஆகிய இருவகைப் பற்றினையும் துறந்து அஞ்ஞான இருளைக் கெடுத்தலே மோட்சம். இந்தப் பரஞானத்தையும், மோட்சத்தையும் அன்றி வார்த்தை மாத்திரத்தால் பெறவரும் பரஞானத்தினையும், மோட்சத்தினையும் வேறே நாம் அறிகிலேம் என்றவாறு.*

*வார்த்தை மாத்திரத்தாற் பெறவரும் ஞானம் மோட்சம் என்றது சர்வத்தையும் பிரமம் என்று அறியாது இருந்ததே அஞ்ஞானம் என்றும், சர்வத்தையும் பிரமம் என்று அறிந்ததே ஞானம் என்றும், இங்ஙனம் அறிந்தபோதே அஞ்ஞானம் கெடும் என்றும் கூறிக்கொண்டிருத்தலை.*

**இருவகைச் சார்பா மொருபுறப் பற்று**
**மிடையதாங் கடையுடற் பற்றும்**
**விரிகர ணங்க ளாகுமுட் பற்று**

மௌனத்திரி விதம்விளங் கிடுமித்
திரிவிதத் தினையுங் காத்திரங் கரணஞ்
சேர்த்தியொன் றாக்கொடுட் பற்றும்
வருபுறப் புற்று மெனவிரன் டாக
மதிப்பரவ் வணந்துற வையுமே. 39

*இருவகைச் சார்பாம் ஒருபுறப் பற்றும்*
*இடையதாம் கடை உடல் பற்றும்*
*விரிகரணங்கள் ஆகும் உள் பற்றும்*
*எனத்திரிவிதம் விளங்கிடும் இத்*
*திரிவிதத் தினையும்காத்து இரங்கரணம்*
*சேர்த்தி ஒன்றாக் கொடு உள் பற்றும்*
*வருபுறப் பற்றும் என இரண்டாக*
*மதிப்பர் அவ்வணம் துறவையுமே.*

*எ.து. : உயிர்ச்சார்பு, பொருள்சார்பு என்னும் இருவகைச் சார்பாகிய ஒருபுறப்பற்று எனவும், இடைப்பற்று ஆகிய கடை ஆகிய உடற்பற்று எனவும், விரிந்த கரணங்களாகிய உட்பற்று எனவும், இங்ஙனம் பற்றுக்கள் மூன்று விதமாய் விளங்கா நிற்கும். இம்மூவகைப் பற்றினையும் காயத்துடனே கரணத்தைச் சேர்த்து ஒன்றாகக் கொண்டு உட்பற்று எனவும், இங்ஙனம் புறப்பற்று எனவும் அந்த முறைமையே துறவினையும் உட்டுறவு எனவும் புறத்துறவு எனவும் இரண்டாகக் கருதிச் சொல்வர் பெரியோர் என்றவாறு.*

*காயத்தோடு கரணம் ஒற்றுமை ஆகலின் காத்திரங் கரணஞ்சேர்த்தி என்றார். இரண்டாக மதிப்பர் என்றதை இருதலையும் கூட்டுக. பற்றுக்கள் திரிவிதமாய் விளங்கும் என்றதற்கு உதாரணம் : சமயாசாரம்.*

"புத்திரர் மனையாள் ஆதிப் புறச்சுற்றுப் பற்றுநீக்கி
இத்திரண் மலஉடம்பாம் இடைச்சுற்றப் பற்றும்விட்டே
ஒத்துயிர் விடாதபாச கரணஉட்சுற்றும் ஒய்த்துத்
தத்துவ மாயிருத்தல் தவத்தவர் சரிதை ஐயா"

*(புத்திரர், மனைவி முதலானோர் மீதும், திரட்சியான மலம்பொருந்திய உடம்பின்மீதும் கொண்ட பற்றை விட்டு, பாசத்திற்குக் காரணமான உட்கருவிகளில் இருந்தும் நீங்கித்தத்துவப் பொருளாய் இருப்பது தவசிகள் வரலாறாகும்.)*

*மற்றும் வருவனற்றால் காண்க.*

இருவகைப் பற்றி லொருவனே ஞானி
யெனப்படிற் புறப்பற்ற தேனு
மொருவுத லிலரு மெவணமப் பெயருக்
குரியர்வே ரொன்றுமில் கொடியுந்
தருமிலை மலர்கா யெனி னகப் பற்றி
றளவர்புறப் பற்றையுந் தணவார்
மருவினு மஃதோ ரொருவர்வே ரன்றீர்
மலர்க்கொடி வாடுறா வகையே. 40

இருவகைப் பற்றில் ஒருவனே ஞானி
எனப்படில் புறப்பற்ற தேனும்
ஒருவுதல் இலரும் எவணம் அப்பெயருக்கு
உரியர்வேர் ஒன்றும் இல் கொடியும்
தரும் இலை மலர் காய் எனின் அகப் பற்றில்
தவர் புறப்பற்றையும் தணவார்
மருவினும் அஃது ஒரொருவர் வேர்அன்றீர்
மலர்க்கொடி வாடுறா வகையே.

எ.து. : உட்பற்றுப் புறப்பற்று ஆகிய இருவகைப் பற்றுக்களும் இல்லாத ஒரு புருடனை ஞானி என்று சொல்லப்படுமானால் புறப்பற்று ஆயினும் நீக்குதல் இல்லாதாரும் எந்த முறைமையால் அந்த ஞானி என்னும் பெயருக்கு உரியர் ஆவார். ஆனால் புறப்பற்று இருக்க அகப்பற்றை ஒழித்தோர் ஞானிகள் அலரோ என்னின், ஒருவேராயினும் இல்லாத கொடியும், இலை, மலர், காய்களைத் தருமானால், அகப்பற்று இல்லாத தவத்தோர் புறப்பற்றினையும் விட்டு நீங்கார். ஆனால் புறப்பற்று இருக்க அகப்பற்று ஒழித்தோர் இல்லையோ என்னில், புறப்பற்று இருக்க அகப்பற்று ஒழிதலை ஒரொருவர் அடைந்தார் ஆயினும் வேரினை அன்று அறுக்கப்பட்ட மலர்க்கொடி சிறிதுபோது வாடாதிருக்கும் முறைமைபோல், அகப்பற்று ஒழித்தோர்க்கும் புறப்பற்றுச் சிலநாள் இருக்கும். என்றவாறு.

வேர் ஒன்றும் இல்கொடி, இலை, மலர், காய்களைக் கொடாதது போல் காரணமாகிய அகப்பற்று ஒழிந்தால் அதனது காரியம் ஆகிய புறப்பற்று இராது என்று குறிப்பாற் கூறி, வேரொன்றும் இல்கொடியும் தரும் இலை, மலர், காய் எனின் அகப்பற்று இறவர் புறப்பற்றையும்

தணவார் என்று அவரைப்பரிகாசம் பண்ணினார். வேரன்றீர் மலர்க்கொடி அறுத்த தருணத்தில் பச்சென்று சிறிதுபோது வாடாதது போல் தோன்றிப் பின்பு உலர்ந்து போகின்றதுபோல், அகப்பற்று ஒழித்த தருணத்தில் புறப்பற்றுச் சிலநாள் இருத்தல் போலத் தோன்றி நீங்கும் என்பது அறிக. அகப்பற்று ஒழித்தோர்க்குப் புறப்பற்றின் மேல் பிரவிருத்தி இல்லாமையால் அவர்க்கு அஃது இன்று எனக்கொள்க.

**வேரறக் கொடிவா டுதலினுட் பற்றை**
**விடுக்கின்மற் றையபற்று நேரே**
**சோருத லியல்பா மதனையே முன்னர்த்**
**தொலைக்கவேண் டுவதெனிற் கடுமுட்**
**சாருமோர் கொடியின் கிளையனைத் தையுமுன்**
**றறித்தொழித் தலதத னிடையா**
**ரோர்தனி வேர்கொள் ளரிதரி தகப்பற்**
**றொழித்தலும் புறப்பற்ற துறவே.** 41

வேர்அறக் கொடிவாடுதலின் உள்பற்றைக்
விடுக்கின் மற்றைய பற்று நேரே
சோருதல் இயல்பாம் அதனையே முன்னர்த்
தொலைக்க வேண்டுவது எனில் கடுமுள்
சாருமோர் கொடியின் கிளை அனைத்தையும் முன்
த்றித்து ஒழித்தலது அலது அதனிடையார்
ஓர் தனி வேர் கொள்ள அரிது அரிது அகப்பற்று
ஒழித்தலும் புறப்பற்றது உறவே.

எ.து. : காரணமாகிய வேரற அதன் காரியமாகிய கொடி உலர்ந்து போதல்போல் காரணமாகிய அகப்பற்றினை முன்பு ஒழித்தால் அதனது காரியமாகிய புறப்பற்றும் உடனே நீங்குதல் சுபாவம் ஆகலின், அந்த உட்பற்றினையே முன்பு ஒழிக்க வேண்டுமென்பை ஆனால், கடிய முட்கள் பொருந்திய ஒரு கொடியினது கிளைகள் அனைத்தையும் முன்னர் வெட்டி நீக்கினால் அன்றி அதன் நடுவே பொருந்திய ஒப்பற்ற முதல் வேரினைப் பிடுங்கிக் கொள்ளுதல் அரிது; அதுபோல் முன்பு புறப்பற்றை ஒழித்து அகப்பற்றை ஒழிப்பதன்றிப் புறப்பற்றிருக்க அகப்பற்றினை முன்பு ஒழித்தலும் அரிது என்றவாறு.

ஆனால் நீர் முட்கொடியைத் திருட்டாந்தம் கூறியது என்னை அஃது இல்லாத கொடியினது வேரினை முன்பு பிடுங்கிக் கொள்ளுதல்

போல் புறப்பற்றிருக்க அகப்பற்றை ஒழிக்கக் கூடாதோ என்ற சீடனை நோக்கிக் கூறுகின்றார்.

**முள்ளில்சில் கொடிவேர் கொளலின்முற் சனகன்**
**முதலவோ ரொருவர்மற் றொருதம்**
**முள்ளமா சணுகா வியல்பினா னகப்பற்**
**றொழிப்பினு முனமெனை யுறமுங்**
**கள்ளநெஞ் சினர்பற் பலரும்வீ டடையுங்**
**கதியதன் மையிற்றுற வளந்த**
**தெள்ளியோர் புறப்பற் றொழித்தலே முதற்கட்**
**செப்பின ரெவர்க்குமொப் புறவே.** 42

*முள்ளில்சில் கொடிவேர் கொளலின்முன் சனகன்*
*முதல் ஓர் ஒருவர் மற்றுஒரு தம்*
*உள்ளம் ஆசுஅணுகா இயில்பினான் அகப்பற்று*
*ஒழிப்பினு முனம் எனை உறமும்*
*கள்ள நெஞ்சினர் பற்பலரும் வீடுஅடையும்*
*கதி அதன் தன்மையில் துறவு அளந்த*
*தெள்ளியோர் புறப்பற்று ஒழித்தலே முதல்கண்*
*செப்பினர் எவர்க்கும் ஒப்புறவே.*

*எ.து. : முள்ளில்லர்த சில கொடியினது வேரினை முன்னர்க்கொடி தறித்து ஒழியாது பிடுங்கிக் கொள்ளுதல் போல், சனகராசா முதலிய ஓரொருவர் ஒப்பற்ற தமது உள்ளத்தின்கண் காமம் வெகுளி மயக்கம் என்னும் முக்குற்றங்களும் பொருந்தாத இயல்பினால் புறப்பற்றிருக்க அகப்பற்றினை முன்னர் ஒழித்தாராயினும், என்னைப் போலும் முக்குற்றங்களையுமுடைய மனத்தினர் பலரும் வீட்டினை அடையுமார்க்கம் அஃது அன்று ஆகலின், துறவினது இலக்கணங்களை எல்லாம் அறிந்து அளவிட்ட தெளிந்த அறிவினையுடைய திருவள்ளுநாயனார் புறப்பற்று ஒழித்தே அகப்பற்று ஒழிக்க வேண்டும் என்று புறப்பற்று ஒழித்தலை அகப்பற்று ஒழித்தற்கு முதற்கண் கூறினார், யாவருக்கும் சம்மதமாக. என்றவாறு.*

*உள்ளம் மாசு அணுகா என்றதனால் நின்மல சித்தர் என்றும் கள்ள நெஞ்சினர் என்ற தன்மையால் மலினசித்தர் என்றும் அறிந்து கொள்க. நின்மலசித்தர்கள் ஏகதேசிகளாய் எவ்வகைப்பட்ட பற்றுக்களில் இருந்தாலும் அவற்றின்கண் அவா இன்றித் தெய்வகதியாய் வீடடைதலினாலும், மலின சித்தர்கள் அனேகராதலாலும், விட்ட*

பற்றுக்களின் மேலும் ஓரோர் காலை அவாவுதலினாலும் அவர் வீட்டையும் மார்க்கம் யாவர்க்கும் மார்க்கம் அன்று என்றார். அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கினையும் தெளிந்தவர் ஆகலின் தெள்ளியோர் என்றார். புறப்பற்று இருக்க அகப்பற்று ஒழிந்தோர்க்கும் சம்மதமாகலின் எவர்க்கு ஒப்புறவு என்றார். மற்றும் என்பது அசைநிலை.

"உள்ளம் மாசணுகா இயல்பினான் என்றதற்கும், கள்ளநெஞ்சினர் என்றதற்கும் உதாரணம் : வாசிட்டம்.

**வெம்புதல் போய்த்தண் ணென்றவுன் மனத்துக்கிவ் வுலகின்**
**வியாபாரங்கள்**
**செம்புகா் வேழத்தினுக் கான்குளப்படி போற்றோன்று**
**மாற்றீன நெஞ்சுக்**
**கம்புவி யிற்றொழில் சிறிதேயாயினு நீந்திடவரிதாகும் ஆவின்பாதப்**
**பைம்புணலுங் கிழக்கொதுக்குக் கெல்லைகரை காணாத**
**பரவை யன்றோ"**

(செயல்முறைகளால், யானையினுடைய அடியில் அடங்கும் பசுவின் அடிபோல ஞானிகளது மனதில் துன்பமில்லாமல் குளிர்ந்திருப்பார்கள். பசுவின் காலடியில் தேங்கிய நீரினுள் நீந்துவது கிழட்டுக் கொசுவுக்கு அரிது. அதுபோல் ஈனநெஞ்சினர்க்கு உலகியல் செயல்முறைகளில் எல்லை காண்பது அரிதாகும்.)
என வரும், மற்றும் வருவனவற்றால் காண்க.

விடத்தகு மகப்பற் றினைமுனம் புறப்பற்
றொழிப்பதெற் றினுக்கென விளம்பல்
படிற்றொழுக் கினர்சம் மதமும்வா னவரும்
பயிலில் வாழ்க் கையும்விடுக் குதலென்
றெடுத்துமைக் கறிவா சாரமோ தியசொற்
கிழக்குமா குதலின்மா சியல்பாத்
துடைத்தசிந் தையர்க்கு நிந்தையி லொழுக்காச்
சொல்வர்முன் புறல்புறத் துறவே. 43

விடத்தகும் அகப்பற்றினை முனம் புறப்பற்று
ஒழிப்பது எற்றினுக்கு என விளம்பல்
படிற்று ஒழுக்கினர் சம்மதமும் வானவரும்
பயில் இல் வாழ்க்கையும் விடுக்குதல் என்(று)
எடுத்து உமைக்கு அறிவு ஆசாரம் ஓதிய சொற்கு

எடுத்து உமைக்கு அறிவு ஆசாரம் ஓதிய சொற்கு
இழுக்கும் ஆகுதலின் மாசு இயல்பாத்
துடைத்த சிந்தையர்க்கு நிந்தையில் ஒழுக்கா
சொல்வர்முன் புறல் புறத்துறவே.

எ.து. : முன்னர் அகப்பற்றினை ஒழிக்கத்தகும், புறப்பற்றினை ஒழிப்பது யாதுக்கென்று சொல்லுதல் கூடா ஒழுக்கத்தார்க்குச் சம்மதமும், வானவராயினும தாம் முன்பழகிய இல்வாழ்க்கையையும் விடுத்தல் செய்ய வேண்டுமென்று எடுத்து மகாதேவர் மகாதேவிக்கு ஞானாசாரங் கூறிய சொல்லுக்கும் குற்றமுமாதலின், முக்குற்றங்களையுஞ் சுபாவமாக நீத்த நின் மல சித்தர்க்கு முன்னர்ப் புறத்துறவடைதலை இகழ்ச்சியில்லா நெறியாகச் சொல்வர் பெரியோர். என்றவாறு.

ஒழுக்கமுடையார்க்குச் சம்மதம் ஆகலாலும், ஈசுவராக்கியத்திற்கு மாறுபாடு இன்மையாலும், நின்மல சித்தர்க்கு ஒழுக்கலாதலும், முன்னர்புறப்பற்று ஒழிதலே நன்னெறி என்பது காண்க.

புறப்பற்று ஒழிப்பது எற்றினுக்கு என்றதற்கு உதாரணம் : தேவிகாலோத்திரம்.

"சமயா சார சங்கற்ப விகற்பமும்
அமையா தாங்குல வாசார மானதும்
இமையா தாரும் விடாதவில் வாழ்க்கையும்
அமையார் தோளாய் விடுதலா சாரமே"

மற்றும் வருவனவற்றால் காண்க.

(சமய ஒழுகலாறுகளில் ஈடுபடத்தடையாக இருப்பது. தேவர்களும் விட்டுவிடாத இயல்பை உடையது இல்வாழ்க்கை. இதனை விடுதலே சிறந்த ஒழுக்கமாகும்.)

ஒன்றிய பாச விருடுரந் திடுதற்
குபாயமைம் புலனொடுக் கிடுத
லொன்றல திலையென் றதுசெய்வோ னவைவேண்
டனைத்துமுன் விடாதுவைத் துறுத
லென்றுமெவ் விடத்து மெனைமுத லுயிர்க
ளெவற்றையுங் கொலைசெயேன் வெருட்டே
னென்றுசொல் விரதி யொருவனா டொறுங்கை
யிடையினோர் படைகொளு மியல்பே. 44

ஒன்றிய பாச இருள் துரந்திடுதற்கு

உபாயம் ஐம்புலன் ஒடுக்கிடுதல்
ஒன்று அலது இலை என்றிது செய்வோன் அவைவேண்டி
அனைத்து முன்விடாது வைத்து உறுதல்
என்றும் எவ்விடத்தும் எனை முதல் உயிர்கள்
எவற்றையும் கொலைசெயேன் வெருட்டேன்
என்று சொல் விரதி ஒருவன் ஆடொறுங்கை
இடையினோர் படை கொளும் இயல்பே.

எ.து. : உயிரோடு பொருந்திய அஞ்ஞான இருளைப் போக்குதற்கு உபாயம் பஞ்சேந்திரியங்களை நிக்கிரகம் பண்ணுதல் ஒன்றுமே அன்றி வேறே உபாயமில்லையென்று அவ்வைந்தினையும் நிக்கிரகம் பண்ணுவோன் அந்தப் பஞ்சேந்திரியங்களால் விரும்பப்பட்ட பொருள்கள் அனைத்தினையும் முன்விட்டு நீங்காது வைத்துக் கொண்டு இருத்தல், எக்காலத்தும் எவ்விடத்தும் என்னை முதலாகிய உயிர்கள் எவற்றினையும் கொல்லுதல் செய்யேன் பயப்படச் செய்யேன் என்று சொல்லாநின்ற கொல்லாவிரதி ஒருவன் எக்காலமும் கையின்கண் இடைவிடாது ஒப்பற்ற வாளாயுதம் பிடித்துக் கொள்ளும் முறைமையாம். என்றவாறு.

உயிர்களைக் கொலை செய்யேன் வெருட்டேன் என்று சொல்லா நின்ற கொல்லாவிரதி அவை செய்தற்கு ஏதுவாகிய வாளினை விடாது கையிற்கொள்ளுதலின், அவன் அவை செய்வான் என்றும், அவன் கொல்லாவிரதியல்லன் என்றும் அறிகுதல்போல், பஞ்சேந்திரியங்களை நிக்கிரகம் பண்ணத் தொடங்கினோன் அவற்றால் அனுபவித்தற்கு ஏதுவாகிய விடயங்களைக் கைவிடாது வைத்துக் கொண்டிருத்தலின் இவன், அவைகளை விரும்புவான் என்றும் இந்திரிய நிக்கிரகியல்லன் என்றும் அறிந்து கொள்க.

விடயங்களை அனுபவியாது வைத்துக் கொண்டு ஞானசாதகம் பண்ணக் கூடாதோ என்ற சீடனை நோக்கிக் கூறுகின்றார். *(44)*

சாதக தசைக்கண் விடயமே தடையாஞ்
சாத்திய மானபின் புசித்தற்
காதல்வைத் திடினப் பிரமவா னந்தத்
ததிகமோ விடயவா னந்தங்
கோதில்வீட் டின்பம் பெறுகலா விடினுங்
கூடுதற் கெனிற்கரி பிழைக்கிற்
றீதிலோர் சிங்க மதனையே யன்றித்

சாதக தசைக்கண் விடயமே தடையாம்
சாத்தியம் ஆனபின் புசித்தற்(கு)
ஆதல் வைத்திடின் அப் பிரம ஆனந்தத்து
அதிகமோ விடய ஆனந்தம்
சோதில் வீட்டு இன்பம் பெறுகலா விடினும்
கூடுதற்கு எனில் கரி பிழைக்கில்
தீதிலோர் சிங்கம் அதனையே அன்றித்
தேடுமோ தேரை ஊன்தி னவே.

எ.து. : ஞானசாதக தசையின்கண் விடயங்களே அதற்குத் தடையாகும். ஆகலின் அவற்றினை வைத்துக் கொண்டு சாதகம் பண்ணக்கூடாது; ஆனால் அவ்விடயங்களைச் சாதக தசைக்கண் அனுபவியாது சாத்தியமான பின்பேனும் அனுபவித்தற்கு வைத்துக் கொள்வையானால், அச்சாத்திய தசைக்கண்ணே உதயமான அந்த பிரமானந்தத்திலும் இந்த விடயானந்தம் அதிகமாக வேண்டுமாதலின், இந்த விடயானந்தமே போதும்; அந்தப் பிரமானந்தத்தை அடைய ஞானசாதகம் பண்ண வேண்டுவதேயில்லை; ஆனால் சாதகம் பண்ணிக் கொண்டு வருமிடத்துச் சாத்தியம் கைகூடிக் குற்றமற்ற வீட்டின்பம் வந்து லபியாத காலத்தாயினும் பொருந்தி அனுபவித்தற்கு அவைகளை வைத்துக் கொள்வேன் என்பையானால், யானையினை இரையாகத் தேடிச் சென்ற குற்றமில்லாத ஒப்பற்ற சிங்கம் அந்த யானை தப்பிப்போயிற்று என்றால் அதனையே தேடுதலன்றி அற்பமாயுள்ள தேரையினது மாமிசத்தைத் தின்னத் தேடுமோ என்றவாறு.

மேலான யானையை இரையாகத் தேடிச் சென்ற சிங்கம் அந்த யானை கிடையாது போயிற்றாயினும் அதனையே தேடுதல் அன்றி கீழான தேரை ஊனைத் தின்னத் தேடாததுபோல், மேலான பேரின்பத்தை அனுபவிக்கத் தொடங்கினோன் அவ்வின்பம் தனக்கு லபியாது போயிற்று ஆயினும் அதனையே விரும்புதலன்றிக் கீழான விடய சுகத்தை விரும்பான் என்பதுங் கண்டு கொள்க.

பிரமவானந்தத் ததிகமோ விடயவானந்தம் மென்றதற்கு உதாரணம் : தத்துவரத்தினாகரம்.

"வாக்கொடு மனமு மிறந்ததி மதுர வாரியா யொழிவற நிறைந்து
போக்கொடு வரவ தின்றிய வமுதைப் பூரண மாகவுண்ட வர்தாம்
வீக்கிய கானல் நீரெனும் விடய மேவுற முயல்வரோ முயலில்
நோக்குறு மந்த ஞானியு நாயு மொத்திடும் வாசி யொன்றிலதே"

(வாக்கு மனங்கள் அற்று இன்பக்கடலாய் நீக்கமற நிறைந்து, போக்கும் வரவும் அற்ற அமுதாமாகிய இறைவினை உணர்ந்தவர்கள் விடயங்களில் பொருந்த மாட்டார்கள். அவ்வாறு விடயங்களில் பொருந்த முயன்றால் அந்த ஞானியும் நாயும் ஒத்தவர்களே. அவர்க்கும் நாயிற்கும் வேறுபாடு இல்லை.)

என்றும், குறுந்திரட்டு

"தூமங் காட்டுஞ் சுடுதழல் உண் டென்பது துய்ப்பார்க்
காமங் காட்டு மயினி யுவர்ப்பப் படியே நல்
ஏமங் காட்டு ஞானிகள் என்றால் இவர் நெஞ்சில்
காமங் காட்டும் பெற்றிலர் கற்றார் கலையன்றே"

என்றும்,

(புகை சுடுகின்றநெருப்பு உண்டு என்பதைக் காட்டும். உவர்ப்பு மிக்க உணவு காமத்தைக் காட்டும். அதுபோல் ஞானிகள் நல்ல பாதுகாவல் நெறியைக் காட்டுவார்களே அல்லது காமங்காட்டும் தன்மை உடையார் அல்லர். என்றும்,

சிங்கமதனையே யன்றித்தேடுமோ தேரையூன் றினவென்றதற்கு உதாரணம் : குறுந்திரட்டு

"பாய்ந்துமா வேழமொற்றிப் பறக்குமத் தறுகண் யாளி
தேய்ந்தழிவு உறினுந் தேரை யிரையெனச் செல்லா தாற்போல்
ஆய்ந்துநன் முத்தி இன்பம் அருத்திட வுற்ற நீரார்
சாந்துயர் வரினும் ஒன்றித் தளர்ந்தெழா தாகி விட்டார்"

(யானை போன்ற வலிமையினை உடைய யாளி இரையின்றி இறக்கும் நிலை ஏற்பட்டாலும் தேரையை உணவாக உண்ணாது. அதுபோல முத்தி இன்பத்தை எய்த நினைத்தவர்கள் அதனால் சாவுந் துன்பம் வரினும் அத்துன்பத்திற்காகத் தளர்ந்து விடமாட்டார்கள்.)

என்றும்,

மற்றும் வருவனவற்றால் காண்க :

படையெடுத் தமர்க்கட் சாருமோர் வீரன்
  பகைஞரைச் சயங்கொளா விடினும்
விடையெனப் பொருதாங் கிறத்தலே யன்றி
  வெந்நிட வுன்னிடா னதுபோற்
கடையென விடய மிகழ்ந்துபே ரின்பங்
  கருதினோன் பெறுகலா விடினு
மிடையறா தநைநா டுவதலான் மறந்து

மெண்ணுமோ மண்ணின்வாழ்க் கையையே. 46

படைஎடுத்து அமர்க்கண் சாருமோர் வீரன்
பகைஞரைச் சயம் கொளா விடினும்
விடை எனப் பொருதாங்கு இறத்தலே அன்றி
வெந்நிட உன்னிடான் அது போல்.
கடைஎன விடயம் இகழ்ந்து பேரின்பம்
கருதினோன் பெறுகலா விடினும்
இடை அறாது அதை நாடுவதலான் மறந்தும்
எண்ணுமோ மண்ணின் வாழ்க்கையையே.

எ.து. : ஆயுதம் எடுத்துக் கொண்டு யுத்தகளத்திலே செல்லா நின்ற ஒப்பற்ற வீரனானவன் சத்துருக்களைச் செயங்கொள்ளாத விடத்தும், இடம்போல் அச் சத்துருக்களோடு யுத்தம் பண்ணி அந்த ரணகளத்திலே இறந்து போதலேயன்றிப் பயந்து முதுகு கொடுக்க நினையான். அதுபோல் இழிவென்று அறிந்து அற்பமாயுள்ள விடயானந்தத்தை இகழ்ந்து கைவிட்டுப் பேரானந்தத்தை அடையக் கருதி ஞானசாதகந் தொடங்கினோன் சாத்தியம் கைகூடி அவ்வின்பத்தைப் பெறாதிருந்தானாயினும், சணமாயினும் இடைவிடாது அந்த இன்பத்தை எப்பொழுது அடைவேன் என்று கருதுவதேயன்றி, மறந்தாயினும் தான் முன்பு இகழ்ந்து கைவிட்ட இல்வாழ்க்கையை மீண்டும் நினைப்பானோ, என்றவாறு.

சுத்த வீரன் சத்துருக்களைச் சயங்கொள்ளாத விடத்தும் அவர்களோடு யுத்தம் எண்ணி இறந்து போதலேயன்றி முதுகு கொடுத்தற்கு நினையான். அதுபோல் சுத்த விரத்தன் ஞானசாதகம் பண்ணுமிடத்தும் அஞ்ஞானநாசம் பண்ணிப் பேரின்பத்தை அடையாது இருந்தானா யினும், அந்தச் சுத்தவாசனையோடு நின்று இறந்து போதலேயன்றி விடயங்களை இச்சித்து இல்வாழ்க்கையில் திரும்பான் என்பதும், யுத்த களத்திலே வெந்நிடாது இருந்தோனுக்கு மறுமைக்கண் வீர சொர்க்க இன்பம் வருவதுபோல் சுத்த ஞாதனையோடு இறந்தோனுக்கும் மறுமைச் சனனத்திலே வீட்டின்பம் வருமென்பதும், காண்க.

இந்திர சாலத் தொருநகர் காண்போ
ரெனத்தனு முதற்பிர பஞ்ச
நந்தினுங் கெடினும் பூரியா வாடா
நன்மனச் சனகனா தியரு
மந்திரி முதலோர் மீதுபூ பாரம்

வைத்தொரே காந்தத்துள் வதியாத்
தந்தொழி லொருக்கிச் சமாதியுற் றன்றோ
தவிர்ந்தனர் கரணவா தனையே. 47

இந்திர சாலத்து ஒருநகர் காண்போர்
எனத்தனு முதல் பிர பஞ்சம்
நந்தினும் கெடினும் பூரியா வாடா
நன்மனச் சனகன் ஆதியரும்
மந்திரி முதலோர் மீது பூ பாரம்
வைத்தொர் ஏகாந்தத்துள் வதியாத
தம்தொழில் ஒருக்கிச் சமாதியுற்று அன்றோ
தவிர்ந்தனர் காரண வாதனையே.

எ.து. : இந்திரசால வித்தையிலே தேர்த்திருவிழா முதலிய மங்கலமும் அக்கினிப்பட்டு வேவுதல் முதலிய அமங்கலமுமாய் விளங்காநின்ற ஒரு பட்டணத்தினைப் பொய்யென்று அறிந்து வினோதமாகக் காண்போர் போல், தேகாதிப் பிரபஞ்சம் எல்லாம் மாயாகாரியமாகிய பொய்யென்று அறிந்து அவைகள் ஆக்கமாய் விளங்குமிடத்தும் அவற்றிற்கு நாசம் வந்தவிடத்தும் பூரிப்பு வாட்டம் இல்லாத நின்மல சித்தத்தினையுடைய சனகராசா முதலோர்களும் மந்திரி முதலாகிய பேர்களிடத்து இராச்சிய பாரத்தை எல்லாம் ஒப்பித்து ஓர் ஏகாந்தத் தானத்தில் இருந்து கொண்டு தமது இராசரீகத் தொழில்களையெல்லாம் ஒழித்து ஞானசமாதி அடைந்தல்லவோ அந்தக் கரண வாதனையை ஒழித்தார்கள் என்றவாறு.

சனகன் ஆதியரும் என்ற சிறப்பும்மையால் பிரபஞ்சத்தை மெய்யாகக் கருதி அதன்கண் வரும் சுகதுக்கங்களினால் பூரிப்பு வாட்டங் களையுடைய மலின சித்தர்க்கு அப்பிரபஞ்சத்தோடும் கூடியிருந்து கரணவாதனையை ஒழித்தல் கூடாதென்பதாயிற்று. இந்திரசாலத் தொருநகர் காண்போரென வென்றத்ற்கு உதாரணம் : ஞானவாசிட்டம்.

“வெங்காதற் பெரும்பாம்பு நெளிபுற்றாங்
குடும்பபரம் வெறும்பொய் யென்றே
இங்காசை யறநீக்கி யெல்லையிலாப்
பரமபதத் திருந்து வாழ்வாய்
சிங்கார கந்தர்ப்ப நகரிருந்தென்
சிதைவுற்றென் தீதோ நன்றோ.
பங்கான மனைமக்கள் வாழ்ந்தாலென்

கெட்டாலென் பாச மாயை".

*(அழகான நகரம் இருந்தால் என்ன? சிதைந்தால் என்ன? நல்ல மனைவி, மக்கள் வாழ்ந்தால் என்ன? கெட்டால் என்ன? இவைபற்றி வருந்துதல் கூடாது. இவையெல்லாம் மாயை. கொடியபாம்பு வாழும் புற்றுப் போன்றது இல்வாழ்க்கை. இவற்றின்மீது கொண்ட ஆசையினை விட்டு பரம பதத்தில் இருந்து வாழ்வாய்.)*

*மற்றும் வருவனவற்றால் காண்க.*

சொற்றிடின் மயக்க மற்றுதித் துளவச்
சுகருமொண் டாதையைத் துறவா
வுற்றிருஞ் சமாதி யுற்றகப் பற்று
மொருவிவீ டடைந்தனர் சனகர்
முற்றவ முனிவர் நால்வரு மொருநான்
முகப்பிதா விடத்தவன் வளத்தோர்
பற்றுமற் றகப்பற் றையுமுயர் சமாதி
பணியொழித் தெணியவீ டடைந்தார். 48

*சொற்றிடின் மயக்கம் அற்று உதித் துளவச்*
*சுகரும் ஒண் தாதையைத் துறவா*
*உற்றிரும் சமாதி உற்று அகப் பற்றும்*
*ஒருவி வீடு அடைந்தனர் சனகர்*
*முற்றவ முனிவர் நால்வரும் ஒரு நான் -*
*முகப் பிதாவிடத்து அவன் வளத்தோர்*
*பற்று மற்று அகப்பற்றையும் உயர் சமாதி*
*பணி ஒழித்து எணிய வீடு அடைந்தார்.*

*எ.து. : சொல்லுமிடத்துப் பிண்டஞானத்தை மறைக்கு மயக்க இருள் இன்றி உதயமாகிய அந்தச் சுகரும் ஒள்ளிய பிதாவினைத் துறந்து பெருமை பொருந்திய ஞான சமாதியை அடைந்து மற்றை அகப்பற்றினையும் நீங்கி வீட்டினை அடைந்தார். சனகர் முதலிய தவமுனிவர் நால்வரும் ஒப்பற்ற நான்கு முகங்களையுடைய தமது பிதாவிடத்தும் அவனது செல்வத்தினிடத்தும் ஒரு பற்றாயினும் இன்றித் துறந்து உயர்ந்த ஞானசமாதி கூடி அகப்பற்றினையும் ஒழித்துத் தாம் கருதிய வீட்டினையும் அடைந்தார்கள், என்றவாறு.*

*சுகரும் சனகர் முதலிய நால்வரும் வேதாகம கலைகளையும் ஞானத்தினையும் அறிவிக்கும் வல்லமையுடைய உத்தம பிதாக்களையும்*

*அவரது செல்வத்தினையும் விட்டுத் துறந்து ஏகாந்த தானத்திலிருந்து அகப்பற்றை யொழித்தார் என்றதனால் அகப்பற்று ஒழிப்பார்க்குச் சங்கமாகாதென்பது அறிந்து கொள்க.*

**தத்துவ முணர வேண்டினோன் மனைமுற்**
**சகலமும் விடுத்து மெய்ஞ் ஞான**
**முத்திரை திகழச் சமாதியுற் றல்லான்**
**முடியுமோ வெனவுமை முதலா**
**வைத்ததற் குழாத்தை யொருவிநீள் கல்லான்**
**மரத்தினீ ழலிற்சமா தியையுற்**
**றத்தனே யுணர்த்தி னானெனிற் பினும்வே**
**றறைதனம் மிகுமட னன்றே.** 49

***தத்துவம் உணர வேண்டினோன் மனைமுதல்***
***சகலரும் விடுத்து மெய்ஞ் ஞான***
***முத்திரை திகழச் சமாதியுற்று அல்லான்***
***முடியுமோ என உமை முதலா***
***வைத்த தன் குழாத்தை ஒருவி நீள் கல்லால்***
***மரத்தின் நிழலிற் சமாதியை உற்று***
***அத்தனே உணர்த்தினான் எனிற் பினும் வேறு***
***அறைதல் நம்மிகு மடன் அன்றே.***

*எ.து. : பரதத்துவத்தை அறிய விரும்பினோன் மனைவி முதலிய சகல பற்றுக்களையும் விட்டுத் துறந்து மெய்ஞ்ஞான முத்திரை விளங்க ஞான சமாதியை அடைந்தால் அன்றி அதனை அறியக் கூடுமோவென்று மகாதேவி முதலாயுள்ள தனது கூட்டங்களை எல்லாம் நீங்கி, உயர்ந்த கல்லால மரத்தின் நிழல் கண் எழுந்தருளி ஞானசமாதியை அடைந்து, மகாதேவனே அறிவித்தான் என்றால், பின்னரும் வேறே சனகராச முதலிய பேர்களைத் திருட்டாந்தமாக எடுத்துக்கூறல் நமது மிகுந்த அறியாமையல்லவோ.*

*மெய்ஞ்ஞான முத்திரை - மனோமௌனம் மகாதேவரினும் அறிவிப்பாரின்மையின் பினும் வேறு அறைதல் நம் மிகு மடன் என்றார்.*

*மனைமுதற் சகலமும் விடுத்து என்றதற்கு உதாரணம் : திருமந்திரம்.*

**“விரைந்தன்று நால்வர்க்கு மெய்ப்பதி சூழ்ந்து**
**புரந்தகல்லால் நிழற் புண்ணியன் சொன்ன**
**பரந்தன்னை யோராப் பழமொழி யாளர்**
**உரந்தன் மையாக வொருங்கு நின்றாரே”**

(முன்னாளில் செம்பொருட் துணிவுச் செல்வர் நால்வரின் வேண்டுதலுக்கிணங்கச் சிவபெருமான் ஆல நிழலின் கீழ் எழுந்தருளி செந்தமிழாகமச் செழும் பொருளை உணர்த்தியருளினார். அத்தகைய மெய்ப்பொருள் உண்மையை ஆராய்ந்து அறிவு வழி பழமொழியாளர் ஒருங்கு நின்பர்.

என்றும், மற்றும் வருவன காண்க.

**எடுத்துள குடும்பச் சுமையொடீண் டொருவ**
**னெங்ஙன ஞானவா சானை**
**யடுத்தவ னேவ றொடுத்தருள் சுரக்கு**
**மளவுநின் றுளமகிழ்ந் தன்னோன்**
**கொடுத்தநாள் வாங்கிக் கொளும்பர மார்த்தங்**
**கூடினுங் காலமா திகளாற்**
**றடுத்துரை தொழிலை விடுத்தலாற் சமாதி**
**சார்ந்தஃ துணரவும் படுமே.** 50

*எடுத்துஉள குடும்பச் சுமையோடு ஈண்டு ஒருவன்*
*எங்ஙன ஞான ஆசானை*
*அடுத்தவன் ஏவத் தொடுத்து அருள் சுரக்கும்*
*அளவு நின்று உள மகிழ்ந்து அன்னோன்*
*கொடுத்தநாள் வாங்கிக் கொளும் பரமார்த்தம்*
*கூடினும் காலம் ஆதிகளால்*
*தடுத்துரை தொழிலை விடுத்தலால் சமாதி*
*சார்ந்தது அஃது உணரவும் படுமே.*

எ.து. : இவ்விடத்து ஒருவன் தான் சுமந்துள்ள குடும்ப பாரத்துடனே எப்படி ஞானசாரியனை அடைந்து அவனுக்குப் பூரணகிருபை வருமளவும் அவனது ஏவற்பணிவிடை தொடங்கிச் செய்து நின்று அந்த ஞானாசிரியன் திருவுள மகிழ்ந்து ஞானோபதேசத்தை அனுக்கிரகம் பண்ணின காலத்துத் தான் பெறுவான். காலதேச வர்த்தமானங்களினால் அந்த ஞானாசிரியனை அடைந்து அநுக்கிரகம் பெறக்கூடுமாயினும் வாக்காற் சொல்லும் வசனங்களையும் காயத்தாற் செய்யுந் தொழில்களையும் பண்ணாது விடுத்தாலன்றி ஞான சமாதி கூடி அந்த ஞானத்தை அறியவுங்கூடுமோ.

ஞானாசியரைத் தேடிச் செல்வோன் குடும்பத்தோடுஞ் செல்லக் கூடாமையின் குடும்பச் சுமையோடு எங்ஙனம் ஞானவாசானை யடுத்தென்றார். சீடன் பக்குவாபக்குவங்களை அறிய வேண்டி ஒரு

வருட முதல் பன்னிரு வருடமளவும் பரீட்சை பார்க்குதலின் அருள் சுரக்கும் அளவும் என்றும் குடும்பிக்கு அவ்வளவு நிற்கக் கூடாமையின் ஏவல் தொடுத்து நின்றென்றும் கூறினார். காலதேச வர்த்தமான மென்றது அற்பகாலம். இராச கலகங்களினது சரித்திரம் அவற்றால் அவரிருக்குமிடத்தில் இவன் சென்றானாயினும் இவன் இருக்கும் இடத்தில் அவர் வந்தாராயினும் தெய்வகதியாகக் கூடுதலின் கூடினுமென்றார். குடும்பிக்கு வாக்குக் காயங்களடங்காமையின் மனோலயம் பண்ணக்கூடாது; மனோலயம் இன்மையால் அஞ்ஞானம் நிவிருத்தியாகாது; அஞ்ஞானநிவிருத்தி இன்மையால் ஞானோதய மாகாது. ஆதலின் தடுத்துரை தொழிலை விடுத்தலாற் சமாதி சார்ந்தஃதுணரவும் படுமேயென்றார். இதனாற்குடும்பிக்கு ஞானாசிரியரை அடைந்து அநுக்கிரகம் பெற்ற காலத்தும் சமாதி கூடிப் பரஞானமுணரக்கூடாதென்பதுங் கண்டு கொள்க.

தனித்திருந் தொருதம் மனத்தையைம் பொறிவாய்த்
  தடுத்தகப் படுத்திஃதெத்தை
நினைத்தெழா நின்ற தென்று நோக் குநரே
  நீக்குவர் வாக்கொடு தொழிலைப்
பினைத்தடை யாம்போக் குவரில்வாழ்க் கையையும்
  பேச்சைநா டொறும்பழ குநர்
தனைத்தினொன் றேனும் விடார்பிறர் காண்ப
  தன்மையா னகப்பற்றே விடுப்பார். 51

தனித்து இருந்து ஒருதம் மனத்தைஐம் பொறி வாய்த்து
  அடுத்து அகப்படுத்தி அஃது எத்தை
நினைத்து எழா நின்றது என்று நோக்குநரே
  நீக்குவர் வாக்கொடு தொழிலைப்
பினைத்து அடையாம் போக்குவர் இல்வாழ்க்கையையும்
  பேச்சைநாள் தொறும் பழகுநர்
தனைத்தின் ஒன்றேனும் விடார்பிறர் காண்ப
  தன்மையான் அகப்பற்றே விடுப்பார்.

எ.து. : ஏகாந்த தானத்தைப் பொருந்தியிருந்து ஒப்பற்ற தமது மனத்தினைப் பஞ்சப்பொறி வழியே சகமுகமாய்ச் செல்லாது உள்வாங்கி அகமுகப்படுத்தி இந்தமனம் என்னத்தை நினைத்துக் கொண்டு எழுகின்றதென்று அறிவினாற் பார்க்குமவரே வாக்குக் காயங்களினது தொழில்களை நினைத்துக் கொண்டு எழுகின்றதென்று அறிந்த அவ்வாக்காற் சொல்லுந் தொழில்களையும் காயத்தாற் செய்யுந்

தொழில்களையும் விட்டு நீக்குவார். அவ்வாக்குக் காயங்கள் நிவிருத்தியாகலின் இல்வாழ்க்கையைப் பாதுகாத்தற்குத் தடை வருமாகலிற் பின்னர் அந்த இல்வாழ்க்கையையும் விட்டு நீங்குவார். வாசக ஞானமாகிய வார்த்தைகளோடு எக்காலமும் பழக்கமுடையார் விடவேண்டுமென்று கூறிய ஈதனைத்தினுள்ளும் ஒன்றாயினும் விடார். பிறர் காண்பதன்மையால் அகப்பற்றொன்றையுமே யொழிப்பார் என்றவாறு.

வாக்குக் காயங்கள் நிவிருத்தியான விடத்துப் புறப்பற்றைப் பாதுகாத்தற்குத் தடை வருதலாலும், அவை பிரவிருத்தியானவிடத்து அகப்பற்றை ஒழித்தற்குத் தடை வருதலாலும் தடையாம் என்றார். புறப்பற்றோடிருந்து அகப்பற்றை ஒழிக்கத் தொடங்குதல் அவ்விரு வகைக்கும் பழுதென்பதும், அகப்பற்றை ஒழிக்கத் தொடங்கினோன் புறப்பற்றை முன்னர் விட வேண்டுமென்பதும், பிறர் காண்பதன்மை யான் அகப்பற்றே விடுப்பாரென்றமையால் தமக்கென அவர்க்கு அகப்பற்றுப் போயதின்றென்பதும் காண்க.

தந்தைதாய் முதலாம் பந்தநீங் கிலர்க
  பிமுயு நெறியதின் றெனுஞ்சம்
பந்தனா ருரையும் வேண்டிய தெய்தப்
  படாதுள்சுற்ற மும்விடா விடினெ
ளெந்தைவாக் கரைய ருரையுமா தியவாக்
  கியம்பிர மாணமா மெனக்கொள்
புந்தியார் புறப்பற் றுறவகப் பற்றைப்
  போக்கவாய்ப் போக்குத லிலரே. 52

தந்தைதாய் முதலாம் பந்தம் நீங்கிலர்கள்
  தாம் உய்யும் நெறி அதின்று எனும்சம்
பந்தனார் உரையும் வேண்டியது எய்தப்
  படாது உள் சுற்றமும் விடா விடின் என்
எந்தைவாக்க ரையர் உரையும் ஆதிய வாக்
  கியம்பிர மாணமாம் எனக்கொள்
புந்தியார் புறப்பற்று உற அகப் பற்றைப்
  போக்கவாய்ப் போக்குதல் இலரே.

எ.து. : தந்தை தாய் முதலிய பந்தங்களை நீங்காதார்க்கு உய்ந்து போநெறி இன்று என்று கூறிய திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் வாக்கியத்தையும், தாம் வேண்டியது எய்தொணாது மாதர் முதலிய சுற்றமும் விடாவிடினென்று கூறிய எந்தையாகிய திருநாவுக்கரையர்

வாக்கியத்தையும், இவை முதலிய ஆப்த வாக்கியங்களையும் பிரமாணமாகக் கொள்ளுகின்ற நன்மதியுடையோர் புறப்பற்றிருக்க அகப்பற்றை ஒழிப்போமென்று வாய்ப்போக்கார்.

அவற்றிற்கு எதிர்மறையான ஆப்த வாக்கியங்களைப் பிரமாணமாகக் கொள்ளாதார் அங்ஙனம் கூறுவரென்பது காண்க. வாய்ப்போக்குதல் செய்யாதிருந்தும் செய்தேன் என்று சொல்லும் விருதாச் சொல் என்று அறிக.

இதற்கு உதாரணம் : திருக்கடைக்காப்பு

**“தந்தைதாய் புத்திரர் தன்னுடன் தோன்றினார் தாரமென்னும்**
**பந்தநீங் காதவர்க்கு உய்ந்துபோக்கு இல்லெனப் பற்றினாயே**
**வெந்தநீறாடியார் ஆதியார் சோதியார் வேதகீதர்**
**எந்தையா ரூர்தொழுது உய்யலாம் மையல்கொண்டு**
**அஞ்சல் நெஞ்சே”.**

(நெஞ்சே நீ அஞ்சாதே. தந்தை, தாய், சகோதரர், புத்திரர், மனைவி என்னும் பற்று நீங்காதவர்க்குப் பிறவித்துன்பத்திலிருந்து நீங்குவதற்கு வழியில்லை என்பதை அறிந்து திருவாரூர்ப் பெருமானின் திருவடிகள் பற்றிக் கொண்டாய். நீறு பூசும் அடியார்களும் வேதகீதர்களும் வழிபடும் ஆரூர் பெருமானை வழிபட்டால் உய்வடையலாம்.)
என்றும், தேவாரம்.

**“பழகினால் வரும் பண்டுள சுற்றமும்**
**விழவிடா விடின் வேண்டியது எய்தொணா**
**திகழ்கொள் சேறையில் செந்நெறி மேவிய**
**அழகனார் உளர் அஞ்சுவது என்னுக்கே”**

(பழகும் பழக்கத்தினால் வருகின்ற பழமையான சுற்றத்தாரும் இனி இவனால் நமக்குப் பயன் என்? என ஒதுக்கிவிடுவார்களாயின் கவலற்க. திருச்சேறை உறையும் அழகநாதர் உள்ளார். அப்பரணின் துணையை விட நமக்கு வேறொரு துணை வேண்டுமோ?)

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

இருவகைச் சார்புள்ளும் உயிர்ச்சாப்பை விடுத்துப் பொருட்சார் போடிருந்து அகப்பற்றை ஒழிக்கக் கூடாதோவென்ற சீடனை நோக்கிக் கூறுகின்றார்.

**“விடுக்குநர் புறப்பற் றதினுயிர்ச் சார்பை**
**விடுத்துமற் றையபொருட் சார்பைப்**

பிடிக்குத லொழுங்கன் றெனினுறை யிடமும்
பேணுறா தொழித்தறீ தெனவே
படிக்கணீ யுரைக்கக் கேட்டன முனைப்போற்
பற்றிநோக் காமையி னன்றோ
விடுக்கணென் றனைத்தும் விடுத்தன ருலக
மேத்துபத் திரகிரி முதலோர். 53

விடுக்குநர் புறப்பற்று அதின் உயிர்ச் சார்பைப்
விடுத்து மற்றைய பொருட் சார்பைப்
பிடிக்குதல் ஒழுங்கன்று எனின் உறையிடமும்
பேணுறாது ஒழித்தற்று எனவே
படிக்கணீ உரைக்கக் கேட்டனம் உனைப் போல்
பற்றி நோக்காமையின் அன்றோ
இடுக்கண் என்றனைத்தும் விடுத்தனர் உலகம்
ஏத்து பத்திரகிரி முதலோர்.

எ.து. : அகப்பற்றை ஒழிப்போர்க்கு இருவகைச் சார்பாகிய புறப்பற்றினுள் உயிர்ச்சார்பை விடுத்து மற்றைப் பொருட் சார்பைப் பிடிக்குதலும் மார்க்கமன்றென்றால் நீர் சொன்னவையெல்லாம் விடுப்பினும் இருத்தற்கு ஓரிடமாயினும் பிடியாது விடுக்குதல் குற்றமெனவே பூமியின்கண் நீ ஒருவனே சொல்லக் கேட்டு அறிந்தனம். உன்னைப் போலக் கூர்ந்து விசாரியாமையாலன்றோ பற்றுக்களி யாவும் துக்கமென்று அறிந்து எல்லாப் பற்றுக்களையும் உயர்தோர் தோத்திரம் பண்ணாநின்ற பத்திர கிரிராசா முதலாயினோர் விடுத்தார்கள் என்றவாறு.

உனைப்போற்பற்றி நோக்காமையின் அன்றோ வென்றமையால், குறிப்பால் நீ அறியாமையினாலே கூறுகின்றாயென்பது காண்க. பத்திரிகிரி முதலாயினாரெனவே பட்டணத்துப்பிள்ளை முதலாயி னோரையும் வருவித்துக் கொள்க.

பொருட்சார்பால் வரும் குற்றம் மேல்வரும் செய்யுளுட் கூறுகின்றார்.

54. துறந்தவன் பொருட்சார் புறவறி விலர்க்குத்
தூயஞா னாதிசாத் திரங்க
ளறைந்திதம் பேசிப் பொருள்கவர்ந் ததனா
னச்சமு மிச்சையா திகளுஞ்

செறிந்துற வகத்துண் டினியவூ னிருக்குஞ்
செய்தியா னெய்சொரி தழல்போ
லிறந்திடா மனவா தனையினைத் தனதோ
ரெணத்தையெவ் வணத்தினான் முடிப்பான். 54

துறந்தவன் பொருட்சார்பு புற அறிவிலர்க்குத்
தூய ஞான ஆதி சாத்திரங்கள்
அறைந்து இதம் பேசிப் பொருள் கவர்ந்ததனால்
அச்சமும் இச்சை ஆதிகளும்
செறிந்துற அகத்துண்டு இனிய ஊண் இருக்கும்
செய்தியான் நெய்சொரி தழல் போல்
இறந்திடா மனவா தனை யினைத் தனது ஓர்
எணத்தை எவ் வணத்தினான் முடிப்பான்.

எ.து. : பொருட்சார்ப்பு இருக்க உயிர்ச்சார்பைத் துறந்தவன் அறிவு இல்லாத பேர்களுக்கு ஞானசாத்திர முதலாயவற்றைச் சொல்லி அவர்க்கு இதமான வார்த்தைகளைப் பேசி பொருளை வாங்கிப் புதைத்து அதனால் பயம் ஆசை முதலியனவும் மனத்தின்கண் பொருந்த இனிமையாகிய ஊன்களைப் புசித்திருக்கும் முறைமையால் நெய்யினைச் சொரிந்த அக்கினிபோல் மனத்தினது வாதனைகள் இறந்து போகாவாகலின் பின்னர்தான் அகப்பற்றினை ஒழிக்க வேண்டுமென்று எண்ணிய எண்ணத்தினை எந்த முறைமையால் முடித்துக் கொள்வான் என்றவாறு.

அறிவில்லார்க்கு ஞானசாத்திர முதலிய கூறுதலினாலும் பொருள் கவர்தலினாலும், அதனால் பயம் ஆசை குரோத முதலிய வருவதாலும், சௌக்கிய போசனங்களைப் புசித்தாலும், மனத்தின்கண் வாதனை நெய் சொரி தழல்போல் மேன்மேல் ஏறுதலின் பொருட்சார்பு இருக்கத் துறந்தோனுக்கும் அகப்பற்றொழித்தல் கூடாதென்பது இதனாற் காண்க.

பொருட்சார்பினுள் எல்லாவற்றையும் விட்டு ஓரிடம் பற்றியிருந்து தவம் பண்ணலாகாதோ? என்ற சீடனை நோக்கி அவ்விடத்தால் வருங்குற்றம் கூறுகின்றார்.

பொருளறத் துறந்து பயிக்கமேற் றருந்திப்
பொருந்தினு மோரிடம் பிடித்துள்
வெருளறப் பனியா தியினுடற் பழக
வேண்டுமின் றாகுத றானு

மிருளறத் தீப மேற்றன்முன் றொழில்க
ளென்றும்வேண் டிடுதலா னிடரு
மருளறச் சிதலை முதலுயிர்க் குறுக
ணாற்றலு மதன்பொருட் டாமால். 55

பொருள் அறத் துறந்து பயிக்க மேற்று அருந்திப்
பொருந்தினும் ஓரிடம் பிடித்து உள்
வெருள் அறப் பனி ஆதியின் உடல் பழக
வேண்டும் இன்றாகுதல் தானும்
இருள் அறத் தீபமேற்றன் முன் தொழில்கள்
என்றும் வேண்டிடுதலால் இடரும்
அருளறச் சிதலை முதலுயிர்க்கு உறுகண்
ஆற்றலும் அதன் பொருட்டு ஆமால்.

*எ.து. : பொருட்சார்பினையும் விட்டுத் துறந்து பிச்சையேற்றுண்டு ஓரிடத்தைப் பற்றிக் கொண்டிருந்தானாயினும் மனோபய நீங்கவும் பனி முதலியனவற்றுள் தேகம் பழகவும் வேண்டும்; பழக்கம் இன்மையாகுதல் தானும், இருள் நீங்கத் தீபமேற்றுகை முதலிய தொழில்கள் எக்காலத்தும் வேண்டுதலால் துன்பமும் சீவாகாருண்யம் இன்றிச் செல்லு முதலிய உயிர்களுக்குத் துன்பம் செய்குதலும் அவ்விடம் பிடித்தற் பொருட்டாக வரும் என்றவாறு.*

*ஓரோர் காலத்து அவ்விடத்தினை நீங்கி இருள், காடு முதலிய இடத்துக்குச் செல்லுங்கால் மனோபயம் தோன்றலின் பூரணபாவனை மறக்கும்; பனி, மழை, வெய்யில், காற்று முதலியவற்றாற் காயத்திற்கு வருத்தம் தோன்றலின் சமபாவனை மறக்கும்; விளக்கிடல், அலகிடல், மெழுகல் முதலிய தொழில்கள் எக்காலமும் வேண்டுதலின் இராகத் துவேடம் பிறக்கும்; அதனால் மனோலயம் பண்ணக்கூடாது; செல்லு, கொதுகு, மூடு, எறும்பு, தேள் முதலிய உயிர்களுக்குச் சீவகாருண்யத்தை விடுத்துத் துன்பஞ்செய்தலின் மனத்தின்கண் அழுக்கேறும்; இவையெல்லாந் துறவறத்திற்குப் பங்கமாகலின் தனக்கெனவோரிடம் பிடித்தலும் ஆகாதென்றார். அவ்விடம் ஆகாதெனவே பொதுச் சாவடி, புறந்திண்ணை, பாழ்ங்கோயில், மலை முழை, மரநிழல் முதலிய இடத்தில் இருக்க வேண்டுமென்பதாயிற்று.*

பிறிதுநோய் தன்னோய் போன்றுபோற் றானேற்
பெரிதுநூ லரிதினோர்ந் துணர்ந்த
வறிவினா லுண்டோ லாவதென் றமையான்

தெளிந்தோர்க்கும் அருளை, முழுவதும் துறக்க இயலாது. அவர்களது செயல் அருளாகவும் அறநெறியாகவும் இருக்கும். இறைவனை அன்றி வேறொரு பொருள் இல்லை எனத் தெறிந்தவர் உள்ளத்தில் சிவம் மன்னும்.)

என்றும், அருட்பிரகாசம்

"உயிர்நித்தம் என்றறிந்தாலு நல்லோர் பல்லுயிர்கள்உற்ற
துயருக்கிரங்கல் புதுமை கொல்லோ அருட்தோன்றன் முன்னாட்
செயிருற்ற தேவர் குறைகேட்டு இரங்கித் திருவுளத்தூடு
அயர்வுற்று உகுத்த கண்ணீரக்கமாமணி யாய்த்தெனிலே"

(உயிர் அழிவற்ற பொருள் என்று அறிந்தாலும் நல்லோர் உலக உயிர்கள் உற்ற துயரத்திற்காக இரங்குவது புதுமையே. அருட்தோன்றலாகிய சிவபெருமான் தேவர்கள் உற்ற குறைகளைக் கேட்டு அதற்காக இரங்கி திருவுள்ளத்தில் அயர்வுற்று உதிர்த்த கண்ணீரே அக்காமாமணி ஆயிற்று எனலாம் என்று வரும்.)

மற்றும் வருவனவற்றால் காண்க.

தனக்கினி யவனாம் வகைசரா சரங்க
ணினைகவென் றுமைக்குரைத் ததுவும்
வினைக்கடல் கடந்த பரதர்முற் சிவிகை
சுமந்துசென் றதுவுமோர் மேலோர்
பிணைக்கொல் பாம்பாதி யுறுதலஞ் செலுங்காற்
பேணலிற் றமைநடந் திடும்போ
தினக்கறை யானா தீயமரி யாதங்
குரமுரி யாதியங் கிடுவார். 57

தனக்கு இனியனவாம் வகைசரா சரங்கள்
தனை நினைக என்று உமைக்கு உரைத்ததுவும்
வினைக்கடல் கடந்த பரதர் முன் சிவிகை
சுமந்து சென்றதுவும் ஓர் மேலோர்
பிணைக்கு ஒல்பாம்பு ஆதி உறுதலஞ் செலுங்கால்
பேணலின் தமை நடந்திடும் போது
இனக்கறை யான் ஆதிய இயமரியாது அங்
குர முரியாது இயங்கிடுவார்.

எ.து. : ஒருவன் தனக்குத்தான் இனியவனாய்த் தன்னைப் பாதுகாக்கும் முறைமைபோல் சராசரங்களாயுள்ள உயிர்களைக் கருதுகவென மகாதேவிக்கு மகாதேவர் அறிவாசாரங் கூறியவதனையும், சரியை

கிரியை யோகங்களுக்கு ஏதுவாகச் செய்யுந் தொழிலாகிய கடலைக் கடந்து நின்ற பரதர் முன்னர்ச் சிவிகை சுமந்து கொண்டும் உயிர்க்கொலை வாராது நடந்து சென்ற அதனையும், விசாரித்து அறிந்த மேலாயினோர் பின்னர்க் கொல்லுகின்ற பாம்பு முதலிய துட்டப் பிராணிகள் உறையுமிடத்தில் போம்பொழுது தம்மைப் போற்றிக் கொள்ளுதல் போல், நடக்கும் பொழுது கூட்டமாயுள்ள செல்லு முதலிய சரவுயிர்கள் இறவாமலும், முளை முதலிய அசரவுயிர்கள் நாசமாகமலும் நடப்பார் என்றவாறு.

ஈசுவர வாக்கியத்தையும் அவர் வாக்கியத்தின்படி நடந்து கொண்ட பெரியோர்கள் சரித்திரத்தையும் அறிந்த மேலோர்களுக்கு அந்த நடை வருமென்பதறிக.

தனக்கினி யவனாம் வகைசராசரங்கணினைக என்றதற்கு உதாரணம் : தேவிகாலோத்தரம்.

**“தனக்கினியனாம் வகையே சராசரங்க ளனைத்தினையு**
**நினைத்திகழ்வார் புகழ்வார்பா லொத்துருக்கு நீர்மையினை**
**மனத்துடைய னானவன் நாமுரைத்த ஆசாரம்**
**அனைத்துடைய னாகஅறிவெறி கமழும் ஐம்பாலாய்”**

*(வாசமிக்க கூந்தலை உடைய பெண்ணே! உலகப்பொருள் எல்லாம் தமக்கு இனியது என நினைந்து இகழ்ந்தாலும் புகழ்ந்தாலும் ஒரு தன்மையாய் ஒருவன் இருந்தால் அனைத்தும் அவனுக்கு கைகூடும்.)*
என்றும்,

**“நடுங்காமல் எவ்வுயிரு நறுக்காது துரும்பனைத்தும்**
**பிடுங்காது முதலெவையும் பிரசமலர் கொய்யாது**
**விடுங்காலா லூழ்த்துதிர்த்த விரைமலர்கள் அவையேந்தி**
**அடுங்காலன் தனையட்டவம் புயங்கள் அருச்சிப்பான்”**

*(நடுக்கமின்றி எந்த உயிர்களையும் அரியாது, புல் பூண்டுகளைப் பிடுங்காது தேனிறைந்த மலர்களை வழியப் பறியாது காற்றிற்கு வீழ்ந்த வாசனை மலர்களைக் கையிலேந்தி எமனை வென்ற சிவனை வழிபடுவர்.)*
என்றும் வரும் மற்றம் வருவனவற்றால் காண்க.

**தம்மிடத் தேனுந் தமக்கினி யவர்பா**
**லேனுமோ ரிடர்வந்து சாரி**
**னம்மவூழ் முறையென் றறிந்துமேழ் கடலோ**

ரணுவென வுருகுமென் போல்வா
ரிம்முறை துயர்வே றுயிருறி னிரக்க
மின்றிய தன்றியுந் தம்மால்
வெம்மைய கொலையொன் றடையினு மதனூ
ழென்பதென் மிகமுக மலர்ந்தே. 58

தம்மிடத்து ஏனும் தமக்கு இனியவர்பால்
ஏனும் ஓரிடர் வந்து சாரின்
அம்ம ஊழ் முறை என்று அறிந்து ஏழ் கடலோர்
அணுவென உருகும் என் போல்வார்
இம்முறை துயர் வேறு உயிர் உறின் இரக்கம்
இன்றியது அன்றியும் தம்மால்
வெம்மைய கொலை ஒன்று அடையினும் அதன் ஊழ்
என்பது என் மிக முக மலர்ந்தே.

எ.து. : தம்மிடத்தாயினும் தமக்கினியராயுள்ள சுற்றத்தார் முதலியோர் இடத்தாயினும் ஒரு துன்பம் வந்து பொருந்திற்றாயின் அதனை ஊழ்வினைப் பயன் என்று அறிந்திருந்தும் சத்தசாகரமும் ஓரணுவென்று சொல்ல நெஞ்சம் எல்லாம் நெக்கு நெக்குருகும் எம்போலிகள், இந்த முறையே வேறொரு உயிர் துன்பத்தினை அடையின் இரக்கமின்றி இருப்பதல்லாமலும் தம்மால் ஒருயிர் வெவ்வியதாகிய கொலை என்று அடைந்தவிடத்து அதுனூழ் வினையென்று சொல்வது என்னை மிகவுமுக மலர்ந்து என்றவாறு.

துறவறமுடையார்க்கு ஒருயிரால் ஒருயிர்க்குத் துன்பம் வந்ததாயினும் அதற்குத் தம்மை அறியாமல் தம்மால் ஒரு துன்பம் வந்ததாயினும் இரக்க வேண்டுமேயன்றி, இரக்கமின்றி இருத்தல் பழுதென்பது காண்க.

இம்மையி னிகழ்ச்சி மறுமையிற் சிறுமை
யெய்துமென் றுயிர்க் கொலை புரியாச்
செம்மைபைங் கனக மாதிகைப் பற்றாத்
துறவினைச் சிலரடைந் திடினுந்
தம்மையொத் துயிர்க ளனைத்தையுங்காணுந்
தயவுயிர் தபனிய முதல
மும்மையு மோட்டிற் காட்டிலன் னையிற்காண்
டுறவொரோர் தவர்க்கலான் முடியா. 59

இம்மையின் இகழ்ச்சி மறுமையில் சிறுமை
எய்தும் என்றும் உயிர்க் கொலை புரியாச்

செம்மை பைங் கனகம் ஆதி கைப்பற்றாத்
துறவினைச் சிலர் அடைந்திடினும்
தம்மை ஒத்து உயிர்கள் அனைத்தையும் காணும்
தயவு உயிர் தபனிய முதல
மும்மையும் ஒட்டிற் காட்டில் அன்னையில் காண்
துறவு ஓரோர் தவர்க்கலான் முடியா.

எ.து. : இம்மைக்கண் சீவர்களால் பழிப்பும், மறுமைக்கண் பிறவித் துன்பமும் வருமென்று கருதி, உயிர்களைக் கொலை செய்யாத செம்மையினையும், பொன்மண் பெண்ணென்னும் மூவகையையும் பற்றாத துறவினையும், இந்த முறையே சிலர் அடைந்தாராயினும் தம்மைப் போல் உயிர்களெல்லாவற்றினையும் காணும் தயவும் உயர்ந்த பொன்னாதி மூவகையினையும் ஓட்டினைப் போலவும், காட்டினைப் போலவும், அன்னையைப் போலவும், காணுந்துறவும் ஓரோர் தவருக்கல்லது கூடாது என்றவாறு.

இம்மை மறுமைகளைக் குறித்துக் கொலை செய்யாது பொன்னாதி மூவகையையும் ஓடாதிகளாகக் காண்போர் துறவு சாதகரென்றும், அவ்விரு வகையையும் குறியாது சுபாவமாகத் தம்மைப் போலுயிர்களைக் கண்டு பொன்னாதிகளை ஓடாதிகளாகக் காண்போர் துறவு சாத்தியரென்றும் அறிக. அச்சாத்தியர் அரியராகலின் ஓரோர் தவர்க்கலான் முடியாவென்றார்.

அறைதலிற் கொல்லா நலத்தது நோன்மை
யெனவரு டுறவுசா ரகத்தூ
டுறுமஃ துறவே சினமழுக் காறங்
குறாமையாற் கொடுஞ்சொல்கூ றாமை
புறமுரை யாமை மருவிய விரண்டாற்
பொருவின்மெய் யுறுதியோர்ந் துரைத்த
னிறைபெருந் தவத்தோர் வாக்கினிந் நான்கு
நிகழுமென் றியம்புவர் நெடியோர். 60

அறைதலில் கொல்லா நலத்தது நோன்மை
எனவரு துறவுசார் அகத்தூடு
உறும் அஃது உறவே சினம் அழுக்காறு அங்கு
உறாமையால் கொடுஞ்சொல் கூறாமை
புறம் உரையாமை மருவிய இரண்டால்
பொருவின் மெய் உறுதி ஓர்ந்து உரைத்தல்
நிறைபெருந் தவத்தோர் வாக்கினில் நான்கு

நிகழும் என்று இயம்புவர் நெடியோர்.

எ.து. : உயிர்களைக் கொல்லாத நலத்தினையுடையது தவம் என்று திருவள்ளுவ நாயனார் கூறுதலின் ஒன்றினும் பற்றற்ற துறவு பொருந்திய உள்ளத்தின்கண் சீவகாருண்ணியம் நிலை பெற்றிருக்கும் அது நிலை பெற்றிருக்கவே அவ்வுள்ளத்தின்கண் உயிர்களிடத்துக் கோபமும் பொறாமையும் பொருந்தாமையாற் கோபமின்மையாற் கொடுஞ்சொற் கூறாமையும் பொறாமை இன்மையாற் புறங்கூறாமையும் உளவாகும். பொருந்தாநின்ற இவை இரண்டினாலும் கொடுஞ்சொல் கூறாமையால் ஒப்பற்ற மெய்ம்மை கூறலும், புறங்கூறாமையால் உயிர்களுக்கு உறுதி மொழிகளை ஆராய்ந்து கூறுதலும் உளவாகும். ஆகலின் இவை நான்கும் நிறைந்த பெரிய தவத்தினையுடையார் வாக்கின்கண் விளங்காநிற்குமென்று சொல்லுவர் பெரியோர், என்றவாறு.

(உள்ளத் துறவில்லாதார்க்கு அருள் இன்மையாற் கோபமும் பொறாமையும் உடையாரகாலிற் கொடுஞ்சொல் கூறுதலும் புறங்கூறுதலும், பொய்ம்மை கூறுதுலும், பயனில் சொல் கூறுதலும் ஆகிய இந்நான்கும் இவரது வாக்கின்கண் விளங்கும் என்பது காண்க. இதனால் உள்ளத்துறவுடையரே மனம் வாக்குக் காயங்களினாலும் நன்மை உடையோர் என்பது அறிக.)

புறங்கூறல் - பிறரைக் காணாதவிடத்து இகழ்ந்து கூறல்
உறுதிமொழி - வீட்டினை அடைதற்கு ஏதுவான மொழி.

கான்றசோ றதனிற் கண்டுபொய்ப் போக
மனைத்தையுங் கைவிடுத் திடினுந்
தோன்றுல கினைமெய் யெனக்கொடு மீக்கூற்
றுறவிருப் படையினத் துறவோன்
சான்றதா யுளதன் னுளமிலை யெனவுந்
தற்பரா னந்தமுற் றவனைப்
போன்றிரு விழிமேற் செருகியீண் டுரைக்கும்
பொய்யையெவ் விதத்தினாற் போக்கும். 61

கான்ற சோறு அதனில் கண்டு பொய்ப்போகம்
அனைத்தையும் கைவிடுத்து இடினும்
தோன்று உலகினை மெய்யெனக் கொடு மீக்கூர்
துறவு விருப்படையின் அத்துறவோன்
சான்றதாய் உள தன்னுளம் இலை எனவும்
தற்பரானந்தம் உற்றவனைப்

**போன்று இருவிழி மேல்செருகி ஈண்டு உரைக்கும்**
**பொய்யை எவ்விதத்தினால் போக்கும்.**

*எ.து. : கக்கினசோறுபோல் மாயாகாரியாமாகிய பொய்ப் போகங்கள் அனைத்தினையும் கண்டு துறந்தானாயினும் கானற்சலம் போற்பொய்யாத் தோன்றுகிற பிரபஞ்சத்தினை மெய்யாகக் கருதிக் கொண்டு கீர்த்தியை அடைய விருப்பமுற்றானாயின், அந்தத் துறவியானவன் தனக்குள்ளே சாட்சியாய் இருந்துள்ள தனது உள்ளமானது தற்பரானந்தம் பெற்றது இல்லை இல்லை என்று தனக்குக் கூறவும், தான் பிறருக்கு அந்தத் தற்பரானந்தத்தைப் பெற்றவன் போலும் இரண்டு கண்களையு மேலே செருகி இவ்விடத்துக்கண் குறிப்பாற் கூறும் பொய்யால் வரும் பாவத்தினை எந்த முறைமையாற் போக்குவான் என்றவாறு.*

*ஐயன், காளி சந்நிதி முன் பொய்யுரைத்த பாவம் தீர்க்கக் கூடாமல் இம்மைக் கண்ணே துன்பம் வரும். ஆகலின் தேவர்க்கெல்லாம் மேலாய சிவசன்னதியில் அசத்தியங்கூறிய பாவம் தீராதென்பது அறிவிக்க எவ்விதத்தினாற் போக்குமென்றார்.*

*சான்றாதாயுள தன்னுளம் இலை எனவும் என்றதற்கு உதாரணம் : பெருந்திரட்டு.*

**"தன்னெஞ்சம் தனக்குச் சான்று அதுவாகத்**
**தத்துவம் நன்குண ராதே**
**வன்னெஞ் சனாகிக் கூடமே புரிவோன்**
**வஞ்சகக் கூற்றினும் கொடியோன்**
**பன்னுங் காலவன்தனது எரிசனம் பரிசம்**
**பழுதுற நிரயஏது வும்ஆம்**
**புன்னெஞ் சாலவனும் போய்நரகு எய்திப்**
**பூமியுள் ளளவும் ஏறுஆனால்"**

*(மெய்ப்பொருள் உணராது வஞ்சனை உடைய நெஞ்சினை உடையவன் கூற்றவனினும் கொடியவன், இவனைப் பார்த்தால், அவனைத் தொடுதல், நரகத்தில் சேர்க்கும். அவனும் போய் நரகெய்தி உலகம் உள்ளவும் நரகை விட்டு வெளியில் வரமாட்டான்.)*
*மற்றும் வருவனவற்றால் காண்க.*

**இத்திற னருள்கைப் பிடித்தெலாம் விடுத்தோ**
**னேவல னொருவனோ டுறினுஞ்**
**சித்தசஞ் சலமுண் டவனொரோர் காலை**

செயுஞ்செயல் பிழைக்கினுட் சீற்றம்
வைத்திடப் படுத லாற்றன துடற்பால்
வந்தொரு பிணியுறிற் றுணிவோ
டத்தனே யுளனென் றிருத்தலி னிருத்த
லரிதனோன் றனையுறி னதனால். 62

இத்திறன் அருள்கைப் பிடித்து எலாம் விடுத்தோன்
ஏவலன் ஒருவனோடு உறினும்
சித்த சஞ்சலம் உண்டவன் ஒரோர் காலை
செயுஞ்செயல் பிழைக்கினுட் சீற்றம்
வைத்திடப் படுதலால் தனது உடற்பால்
வந்ததொரு பிணியுறில் துணிவோடு
அத்தனே உளன் என்று இருத்தலின் இருத்தல்
அரித நோன்றனை உறின் அதனால்.

எ.து. : இந்த முறைமையே சீவகாருண்ணியம் ஒன்றுமே கைப்பிடித்துப் பற்றுக்களாய் உள்ளன எல்லாவற்றினையும் துறந்தவன் ஏவலாளன் ஆகிய வொருவனுடைனே கூடியிருந்தான். ஆயினும் அவன் ஒரோர் காலத்துச் செய்யும் ஏவற்பணிவிடைகளுள் ஒவ்வொன்று தப்பச் செய்தானாயின் உள்ளத்திற் கோபம் வைக்கப்படுதலாலும், தனது தேகத்தின் கண்ணே ஒரு வியாதி வந்தடைந்தால் அவ்வியாதியைப் போக்குதற்குச் சிவனே உளனென்றுதான் துணிவோடிருத்தல்போல் அவனுக்கு ஓர் வியாதி வந்து அடையின் அங்ஙனம் இருத்தல் கூடாது. அதனாலும் சித்தசஞ்சலம் தோன்றும் என்றவாறு.

சீவகாருண்ணியத்தினாலும், பிறர் பழிப்பர் என்பதனாலும் அவனுக்குச் சிவனே உளன் என்று இருத்தல் கூடாமையால் விவகாரப்படியே வைத்தியனைத் தேடுதல், மருந்து தேடுதல் முதலியவற்றால் மனோவிசாரந் தோன்றுதலிற் சித்தசஞ்சலம் உண்டென்றார். சித்தசஞ்சலம் மனோலயம் பண்ணுதற்குத் தடை ஆகலின் அச்சஞ்சலம் பிறத்தற்கு ஏதுவாகிய ஏவலாளனும் ஆகாதென்பது அறிக.

யாதியா தொருவ னீங்கியான் நோத
லதனினா லதனினா லிலனென்
றோதலா லனைத்துந் துயர்தரு மெனநீத்
துயர்பரம் பொருளினைக் காட்டுந்
தீதிலோர் குரவ னெங்குள னெனவே
தேடுமா லலைகடல் சூழும்

பூதல மிசையோர் துறவினோ னறவு
பொலிமலர் தேடும்வண் டினைப்போல் 63

யாதி யாது ஒருவன் நீங்கியான் நோதல்
அதனினால் அதனினால் இலன் என்று
ஓதலால் அனைத்தும் துயர்தரும் என நீத்து
உயர் பரம் பொருளினைக் காட்டும்
தீதிலோர் குரவன் எங்குளன் எனவே
தேடுமால் அலைகடல் சூழும்
பூதல மிசையோர் துறவினோன் நறவு
பொலிமலர் தேடும் வண்டினைப்போல்.

எ.து. : யாதொன்றினை யாதொன்றினை ஒருவன் நீங்கியான் அவன் அதனால் அதனால் வருந்துன்பங்கள் இலனென்று திருவள்ளுவ நாயனார் கூறுதலின் பற்றுக்களாய் உள்ளன எவையும் துன்பங்களைத் தருமென்று அறிந்து துறந்து எப்பொருள்களுக்கும் மேலாய் உயர்ந்த மெய்ப்பொருளினை அறிவிக்குங் குற்றமில்லாத ஒப்பற்ற ஞானாசிரியன் எந்த இடத்தில் இருக்கிறான் என்று தேன் செரிந்த மலரினைத் தேடும் வண்டினைப் போல் அலைகடல் சூழ்ந்த பூமியின் கண்ணே ஒரு துறவியானவன் தேடுவன் என்றவாறு.

தேனி நிரம்பிய மலரைத் தேடும் வண்டினைப் போலச் சிவகாருண்ணியம், ஈசுர பக்தி, பாச வைராக்கியம், பிரமஞானம் என்னும் நான்கும் நிறைந்த ஞானாசிரியனைத் தேடுகின்றான் என்பது அறிக. ஆல்அசை, நறவுபொலி மலர்தேடும் வண்டினைப்போல் என்றதற்கு உதாரணம் : அறிவானந்த சித்தியார்.

"அளிமலர் விட்டுவிட்டு ஆய்ந்து மதுவுண்டு அகநிரப்பிக்
களிவந்து இருந்த கருத்து இங்குறநின் கவலை என்னும்
விளிவினை விட்டுவிட்டுஆய்ந்து வியன்குரு மேவி நின்று
தெளிவந்து உனைக் கண்டிடும் அளவும் குருத் தேடிடுமே"

(தேன்நிறைந்த மலர்களைத் தேடித் தேனினை மிகுதியாக உண்டு. மயங்கிய வண்டுகள் போல, மயங்காது கவலையிலுருந்து தெளிவ பெற அரிய குருவினைத் தேடி அடைவாயாக.)

சமரமுற் றிடாது புறந்திரி யொருவன்
றனதெதி ரடைதரு படைக்கைக்
குமரரை நோக்கி மிகுபராக் கிரமங்
கூறினுந் தேறல ரதுபோ

லமர்தரத் துறவு சமாதியோ திடினு
மவற்றினுக் கயனடை யினரேற்
றமரெனத் துணிவுற் றவரொடும் பழகார்
தத்துவ நிலைதலைப் படுவோர். 64

சமர முற்றிடாது புறந்திரி ஒருவன்
தனது எதிர் அடைதரு படைக்கைக்
குமரரை நோக்கி மிகு பராக் கிரமங்
கூறினும் தேறலர் அதுபோல்
அமர்தரத் துறவு சமாதிஓ திடினும்
அவற்றினுக்கு அயல் நடையினரேல்
தமரெனத் துணிவு உற்று அவரொடும் பழகார்
தத்துவ நிலைதலைப் படுவோர்.

எ.து. : யுத்தகளத்தைச் சாராது அதற்குப் புறம்பாய்த் திரிகின்ற ஒருவன் களத்தினைச் சார்ந்து தனக்கு எதிரே ஆயுத பாணிகளாய் வந்து நின்ற வீரரைப் பார்த்து மிகுந்த பராக்கிரமங்களைச் சொன்னானாயினும் அக்களத்திற் சென்று யுத்தம் பண்ணாது புறத்து நின்று கூறுதலால் அவனை வீரன் என்று தெளிவுறார். அதுபோல் மனத்திற்குச் சம்மதமாய் பொருந்தும்படி துறவு சமாதிகளைக் கூறினாராயினும் அவற்றிற்கு உரிய நடக்கை இன்றிப் புறநடக்கையராயின் அவரை வீட்டினை அடைவித்தற்கு ஏதுவாகிய தமர் என்று தெளிந்து அவர்களுடனே கூடிப் பழகார் பரத்துவ நிலைமையை அடையும் நன்னெறிக் கண் விரைந்து செல்வோர் என்றவாறு.

புறந்திரி ஒருவன் சமர்க்களத்தும் செல்லாது அதனைச் சார்பவரோடும் கூடாது இடையே நின்று பராக்கிரமங் கூறுதலின் அவனை வீரன் அல்லன் என்றும் பேடி என்றும் அறிகின்றதுபோல், அயல் நடையினர் துறவு சமாதிகட்கு உரிய நன்னெறியும் செல்லாது அந்நெறி செல்வாரோடுங் கூடாது இடையே நின்று அவற்றிற்கு உரிய நெறி மாத்திரங் கூறுதலின் அவரைத் துறவு சமாதியுடையர் அல்லர் என்றும் கூடா ஒழுக்கம் உடையவர் என்றும் அறிந்து கொள்க.
அமர்தரத்துறவு சமாதி ஓதிடினும் அவற்றினுக்கு அயனடையினரேல் என்றதற்கு உதாரணம் : அனுபவசித்தி.

"மறைகள் ஆகம முதற்கலை முழுதையும் அயலற மிகவோதிக்
குறைவி லாவகைப் பொருடனை மதுரமாக் கூறவல் லவரேனு
நிறைவதாகிய பொருளினுக்குத் தகுநிலையவர் அலராகில்
அறைவ தாகிய அவர்மொழி ஆத்த வாக்கியம் எனவறையேமே"

*(வேத ஆகமங்களில் குறிப்பிட்டுள்ள கலைகள் முழுவதையும் குறையின்றி ஓதி உணர்ந்து, பிறர்க்கு இனிமையாக எடுத்துக்கூற வல்லாரும் வேத ஆகமங்கள் உரைத்த வழி ஒழுகுகின்ற வரும் உரைத்த மொழிகளே மாமந்திரம் எனப்படும்.)*
*என்றும்,*

**"இறைகண் அன்பினை உரை செய்து தாம்இறைக்கு**
**அன்பகத்து இலரேனும்**
**துறவுநன்றென வுரைசெய்து துறவினி**
**னிலைமையது இலரேனுங்**
**கரைகள் ஒன்றுள செயல்களின் மூளுறுங்**
**கருத்துஅறி கிலரேனு**
**மறையினன்குறு மலர்மொழி யாதீத்தவாக்**
**கியம் என அறையாதே.**

*(கடவுளிடம் அன்புக் காட்டித் தாம்வழிபடாது, கடவுளை வழிபடு என்று சொல்பவர், துறவு உயர்ந்தது எனக் கூறுவார் துறவுக்குப் போகாதவர். தமது தவறான செயல்களினால் வரும் துன்பங்களை உணராதவர் கூறும் மொழிகள் வேதத்தைப் போன்றதாக இருந்தாலும் உயர்ந்த வாக்கியமாக ஏற்றுக்கொள்ளப்படாது.)*
*என்றும்,*

**"தெய்வ வாணிநற் செந்தமிழ் இயலிசை தெரிந்து**
**பாடைகளும் பொய்**
**மெய்யது ஆகவே பொருள்களும் விளங்கிட**
**விளம்பவல் லவரேனு**
**மையிலா வகை மொழிவது ஒன்றவர்செயன்**
**மருவல்ஒன்று எனிலத்தை**
**யைய மூவரின் முதல்வரே மொழியினும்**
**மாத்தவாக் கியமென் னார்"**

*(தெய்வமாகிய வாணி செந்தமிழ் இயல் இசை தெரிந்து கூறும் பாடைகளும் பொய். மெய்யதாகவே பொருள்கள் விளங்கிட விளம்ப வல்லவரேனும் குற்றமில்லாத வகையில் மொழிவாராயினும் அரியஅயன்மால் மூவரின் முதல்வரே மொழியினும் உயர்ந்த வாக்கியம் என்று கூறமாட்டார்.)*
*என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.*

**நீரிடத் தன்றி யந்தரத் திடையே**
**நிகழுமோர் மரைகொள விரும்பார்**

பாரிடத் தெவரும் வினோதிகள் சாலம்
பண்ணலென் றெண்ணிமற் றதுபோற்
சீருடைத் துறவு சமாதிபெற் றுலகிற்
றிகழினு முயிர்க்கெலாந் தயவுஞ்
சாரருட் குருபத் தியுமிலார் தமையுந்
தமரெனப் பழகவுந் தகுமே. 65

நீரிடத்து அன்றி அந்தரத்து இடையே
நிகழுமோர் மரைகொள விரும்பார்
பாரிடத்து எவரும் வினோதிகள் சாலம்
பண்ணல் என்று எண்ணி மற்றதுபோல்
சீருடைத் துறவு சமாதி பெற்று உலகில்
திகழினும் உயிர்க்கு எலாம் தயவும்
சார் அருள் குருபத்தியும் இலார் தமையுந்
தமர்எனப் பழகவும் தகுமே.

எ.து. : பாரின்கணுள்ளோர் யாவரும் நீரின்கண் எழுகின்ற தாமரைப் பூவைக் கொய்து கொள்ள விரும்புதலே அன்றி ஆகாயத்தின்கண் விளங்கா நின்ற தாமரைப் பூவைக் கொய்து கொள்ள விரும்பார்கள். விநோத வித்தையினை உடையார் இந்திரசாலம் பண்ணுதல் என்று அறிந்து அதுபோலச் சிறப்பினை உடைய துறவு சமாதிகளை அடைந்து உலகத்தின் கண் விளங்கா நின்றார். ஆயினும் எல்லா உயிர்களிடத்தும் காருண்ணியமும் தாம் அடைந்த கிருபாமூர்த்தியாகிய ஞானாசிரியடத்துப் பத்தியும் இல்லாதாரையும் தமரென்று கருதி அவருடன் கூடிப் பழகவும் தகுமோ என்றவாறு.

தாமரைப் பூத் தோன்றுதற்கு இடம் நீரே அன்றி அந்தரம் இடம் ஆகாமையால் இதன்கண் தோன்றிய பூ பூப்போலத் தோன்றுவதே அன்றிப் பூவென்றும், வினோதிகள் சாலம் பண்ணுதலென்றும், விரும்பாது உலகர் விடுத்தல்போல், துறவு சமாதிகளுக்கு ஏதுவாகிய சீவகாருண்ணியம் ஈசுரபக்திகள் இல்லாத துறவு சமாதிகள்அவைபோலத் தோன்றுவன அன்றித் துறவு சமாதிகள் அல்லவென்றும், அவர் அவைபோலக் காட்டுகிறார் என்றும், அறிந்து அவரோடும் பழகாது நீங்க வேண்டும் என்பது கண்டு கொள்க.

இதுநெறி யெனவோ ரூர்க்குமற் றொருவ
ரேகினு மாத்தன்வாய்க் குறிக
ளதுதனிற் காணா விடத்துல கருமோ
ரடிபெயர்த் திடுகல ரதுபோ

லெதிரறு சமாதி யாதிபெற் றுடையோ
ரென்னினு முன்னவ னுரைத்த
சதுர்மறை யாக மாந்தநிந் தகரேற்
றமரென லவரையுந் தகுமே. 66

இதுநெறி என ஓர் ஊர்க்கு மற்று ஒருவன்
ஏகினும் ஆத்தன் வாய்க் குறிகள்
அதுதனில் காணா இடத்து உலகரும்ஓர்
அடி பெயர்த்திடுகலர் அதுபோல்
ஏதிரறு சமாதி ஆதி பெற்றுடையோர்
என்னினு முன்னவன் உரைத்த
சதுர்மறையாக மாந்த நிந் தகரேல்
தமரெனல் அவரையும் தகுமே.

எ.து. : ஒருவன் ஒரூர்க்கு வழி ஈது என்று அழைத்துச் சென்றான் ஆயினும் தமக்கு ஆப்தனாய் உள்ளவன் வாயாற்கூறிய அடையாளங்கள் அந்நெறியிலே காணாதவிடத்து அதனை மாறுநெறி என்று கருதி, உலகத்தாரும் ஓரடியாயினும் பெயர்த்து வைத்திடார்கள். அதுபோல ஒப்பில்லாத சமாதி துறவு குருபத்தி சீவகாருண்யம் ஆகிய நான்கினையும் அடைந்தார்களாயினும் கடவுள் கூறிய நான்கு வேதமும் இருபத்தெட்டுத் திவ்வியாகமும் ஆகிய இவற்றின் முடிவாயுள்ள வாக்கியங்களை இகழ்ந்து கூறினாராயின் அவரையும் தமரென்று சொல்லலும் தகுமோ தகாது, என்றவாறு.

ஒருவன் ஒரூர்க்கு வழி ஈதென்று அழைத்துச் சென்றானாயினும் தமக்கு ஆப்தன் கூறிய அடையாளங்கள் அந்நெறியிலே காணாதவிடத்து அதனை மாறுநெறி என்று ஓரடியாயினும் பெயர்த்திடாத உலகர்போல் சமாதியாதியுடையோர் வீட்டையும் நெறி கூறுங்கால் கடவுள் கூறிய வேதாகம முடிவு வாக்கியத்தின்படி கூறாது அதனை மறுத்துக் கூறினாராயின் இந்நெறி மாறுநெறியென்று கருதி இவரோடும் பழகலாகாது என்பது கண்டுகொள்க. சதுர்மறையாக மாந்தமெனவே ஞானங் கூறிய வாக்கியமென்பதும், ஞானங்கூறுதற் பொருட்டுச் சரியை கிரியை யோகங்களை மறுத்துக் கூறினும் ஞானங்கூறிய வாக்கியங்களைமறுத்துக் கூறுதல் நெறியன்று என்பதுங் காண்க. நிந்தகர் - புறச்சமயத்தோர்கள்.

ஈங்கறை முறையிற் றேர்ந்துபா ரிதன்மீ
தெங்கணுந் தேடியோ ரிடத்தி

**னோங்கருண் முதல நான்குமோர் வடிவா**
**யுளதென மறையினீற் றுரைக**
**டாங்குநா வொடுஞ்செங் குவளைமார் பொடும்பொற்**
**சரணொடுஞ் சரணென வடைந்தோர்**
**தீங்கொழித் தருள்வான் றிகழுமோர் குரவற்**
**கண்டுளங் குளிர்ந்தனன் றெளிஞன்.** 67

*ஈங்கு அறை முறையில தேர்ந்து பார் இதன் மீது*
*எங்கணும் தேடி ஓரிடத்தின்*
*ஓங்குஅருள் முதல் நான்குமோர் வடிவாய்*
*உளதுஎன மறையின் ஈற்று உரைகள்*
*தாங்கு நாவொடும் செங்குவளை மார்பொடும்பொன்*
*சரணொடும் சரண்என அடைந்தோர்*
*தீங்கு ஒழிந்து அருள் வான் திகழும் ஓர் குரவற்*
*கண்டு உளம் குளிர்ந்தனன் தெளிஞன்.*

*எ.து. : இவ்விடத்துக் கூறிய முறையே ஞானாசாரியனது இலக்கணம் எல்லாம் உடையோன் எங்குளன் என்று ஆராய்ந்து பூமியின் கண்ணே எவ்விடத்தும் தேடி ஓரிடத்தின்கண் உயர்ந்த சீவகாருண்ணியம், ஈசுரபத்தி, பாசவைராக்கியம், பிரமஞானம் என்னும் நான்கும் ஒருவடிவங்கொண்டதுபோல் வேதத்தினது முடிவாயுள்ள மகாவாக்கியமே முதலிய வாக்கியங்களைத் தரிக்கின்ற நாவுடனும் செங்கழுநீர் மாலை விளங்காநின்ற மார்பகத்துடனும் பொன் போன்ற திருவடிகளுடனும் அத்திருவடிகளில் அடைக்கலமாய் வந்து அடைந்த பக்குவரது அஞ்ஞானமாகிய பொல்லாங்கை நீக்கும்பொருட்டு விளங்காநின்ற ஞானசாரியனைக் கண்டு தெரிசித்து இதயமெல்லாம் குளிர்ந்தனன் அந்த அறிவுடையோன். என்றவாறு.*

*ஓங்கருண்முதல நான்குமோர் வடிவாய் என்றதனாலும், மறையினீற்றுரைகள் தாங்கு நாவொடும் என்றதனாலும், ஆசாரியனது இலக்கணம் எல்லாமுடையனென்பது காண்க.*

*சரணென வடைந்தோர் தீங்கொழித்து அருள்வான் என்றதற்கு உதாரணம் : தத்துவராயர் நான்மணிமாலை அகவல்.*

**"ஒளித்தகும் அறிவு மரக்கலன் அமைத்துத்**
**துறவின் நாமக் கூம்பு நாட்டி**
**ஏம அருளாங் கயிற்றிற் பிறழ்வறக்**
**கட்டிப் பத்தி என்னும்பாய் பூரித்து**

முத்தி யூரிற் றம்மை யுய்த்தருள்
சொரூபன் என்னும் ஒருமீ காமன்
அருந்தவர்க்கு அரசின் பாதம்
திருத்தவைக் கிலர்தம் சென்னியின் மிசையே"

*(அறிவாகிய மரக்கலன் அமைத்து, துறவு என்னும் கூம்பினை நட்டி அருளாம் கயிற்றினால் பிறழாமல் கட்டி பத்தி என்னும் பாயினை விரித்து முத்தியாகிய ஊரில் தம்மைக்கொண்டு சேர்த்தும் ஒருவனது பாதத்தில் சென்னியினைச் சூடுதல் வேண்டும்.)*
*மற்றும் வருவனவற்றால் காண்க.*

காரிய மாக லாற்சகம் படைக்குங்
காரணன் குலானனி லுளனென்
னோரியல் பெனவேழ் கடலுமொன் றாக்கி
யொப்பிடுங் கருணைய னேனும்
பேரியை பிறப்புத் தனையடைந் தவர்க்குப்
பினையுறா வகைகெடப் பார்க்குங்
கூரிய விழியோ னாதலி னறவுங்
கொடியனு மாகுமக் குரிசல். 68

*காரியம் ஆகலால் சகம் படைக்கும்*
*காரணன் குலாலனில் உளன் என்று*
*ஓரியல்வு என ஏழ் கடலும் ஒன்றாக்கி*
*ஒப்பிடுங் கருணையன் ஏனும்*
*பேரியை பிறப்புத்தனை அடைந்தவர்க்குப்*
*பினையுறா வகைகெடப் பார்க்கும்*
*கூரிய விழியோன் ஆதலின் நறவும்*
*கொடியனும் ஆகும் அக்குரிசில்.*

*எ.து. : பிரபஞ்சம் மாயாகாரியமாகலின் அதற்குக் காரணமாயுள்ள மாயை சடமாகலின் இதனைக் காரியப்படுத்தும் நிமித்த காரணனாகிய கடவுள், கட கலச முதலாயுள்ள பாண்டங்கள் மண்ணினது காரியம்; அவைக்குக் காரணமாகிய மண் சடமாகலின் இதனைக் காரியப்படுத்தும் நிமித்த காரணனாகிய குலாலன்போல் இருக்கின்றானென்று மேலாகிய கடவுளுக்குக் கீழாகிய குலாலனை உவமை கூறுகின்ற ஒரு முறைமைபோல் உவமை கூறப்படாதாயினும் சத்தசாகரங்களையும் ஒன்றாகக் கூட்டி உவமை கூறுகின்ற கிருபாசமுத்திரமாய் இருந்தானாயினும் தன்னை வந்து அடைந்த பக்குவர்க்குப் பேரும் பொருந்திய பிறப்பும் இவையேயன்றிப் பின்னர் அந்தப் பேரும் பிறப்பும் வராதபடி நாசமாகப் பார்க்கின்ற நுண்ணிய*

விழிகளை உடையோன் ஆகலின் மிகவுங் கொடிய தன்மையினை உடையவனுமாவன் அந்த ஆசாரியன் என்றவாறு.

கிருபாசமுத்திரத்திற்கு உவமையின்மையால் கடவுளுக்குக் குலாலனையுவமை கூறுதல்போல் ஏழ்கடலும் ஒன்றாக்கி ஒப்பிடுங் கருணையனேனும் என்றார். கூரியவிழியோன் என்றதனாலும், பேரியை பிறப்புதனை அடைந்தவர்க்குப் பினை யுறாவகை கெடப் பார்க்கும் என்றதனாலும் மாயாகாரிய காரணமெல்லாங் கடந்த நோக்கம் என்பதும், அந்நோக்கம் பெற்றோர்க்கும் அவைகள் நீங்கும் என்பதும் காண்க. அறவுங்கொடியனுமாம் என்றது தூடணபூடணமாகத் துதித்தென்க. இதனுட் சீவகாருணியம் உடையன் என்பதறிக.

செப்பிரும் கைலைக் குருமுறை மையிற்றன்
சிரமிசைச் சரணம்வைத் துளவோர்
மெய்ப்பர னருளை நினைதொறு முளந்தீ
மெழுகுகல் லெனவுரு கிடினு
மைப்பவந் துடைத்தன் பினர்க்குவீ டளிக்கும்
வல்லப முடையமற் றொருதா
னொப்புமிக் கிலியா கலினிறை பத்தி
யுளனுமன் றாகுமவ் வும்பன். 69

செப்பிரும் கைலைக் குருமுறைமையில் தன்
சிரமிசைச் சரணம் வைத்துள ஓர்
மெய்ப்பரன் அருளை நினைதொறும் உளம்தீ
மெழுகு கல்லென உருகிடினு
மைப்பவம் துடைத்து அன்பினர்க்கு வீடு அளிக்கும்
வல்லபம் உடைய மற்று ஒருதான்
ஒப்புமிக்கு இலியாகலின் இறை பக்தி
உளனும் அன்றாகும் அவ் உம்பன்.

எ.து. : யாவரும் புகழாநின்ற பெருமை பொருந்திய கைலாச குருபரம்பரையின் வந்து தனது சிரசின் மீதே திருவடிகளைச் சூட்டிய ஒப்பற்ற ஞானாசாரியனது கிருபையை நினைக்கும்தோறும் அக்கினியிற்பட்ட மெழுகும் கல்லென்று சொல்ல அதனினும் அதிகமாக உள்ளமெல்லாம் உருகா நின்றோன் ஆயினும் தன்னை அடைந்த பக்குவர்க்கு களங்கமாயுள்ள பிறவித் துன்பத்தை மாற்றி வீட்டினைக் கொடுக்கும் சாமார்த்தியத்தினை உடைய ஒருதான் சமானாதிகமின்மையனாதலின் ஈசுரபத்தியுடையனும் அன்றாகுவன்

அந்த ஞானாசிரியன் என்றவாறு.

இதன்கண் ஈசுரபத்தியுடையனென்பது காண்க.

கருடனை நினைவோர் பார்வையாற் பிறர்பாற்
கடுவொழித் தலிற்றனை நினைவோ
ரொருவரை நோக்கி னவர்கணும் பாச
மொழித்தல்செய் துறவொடேய்ந் துறினு
மருண்மகட் புணர்ந்து ஞானசந் ததிபெற்
றவரொடு மகிழ்ந்திருத் தலினக்
குருபரன் றன்னைப் பின்னைநே ரில்லாக்
குடும்பியென் றுரைக்கவும் படுமால். 70

*கருடனை நினைவோர் பார்வையால் பிறர்பால்*
*கடுஒழித்தலில் தனை நினைவோர்*
*ஒருவரை நோக்கின் அவர்கள் உம்பாசம்*
*ஒழித்தல் செய் துறவொடு ஏய்ந்து உறினும்*
*அருள்மகள் புணர்ந்து ஞான சந்ததி பெற்று*
*அவரொடு மகிழ்ந்து இருத்தலின் அக்*
*குருபரன் தன்னைப் பின்னை நேரில்லாக்*
*குடும்பி என்று உரைக்கவும் படுமால்.*

*எ.து. : கருடனைத் தியானம் பண்ணுவோர் பார்வையாற் பிறர்மேலேறிய விடநீக்குதல் போல் தன்னைத் தியானம் பண்ணுவோர் பிறரொருவரை நோக்கின் அவரிடத்தும் பாசங்களை நீக்குதல் செய்யுந் துறவுடனே கூடியிருந்தானாயினும் சீவகாருண்ணியமாகிய பெண்ணினைக் கூடி ஞானமாகிய புத்திரனைப் பெற்று அவரோடும் எக்காலமும் மகிழ்ந்திருத்தலின் அந்த ஞானாசாரியனைப் பின்னர் ஒப்பற்ற குடும்பியென்றும் சொல்லப்படும் என்றவாறு.*

*இதனுட் பாசவைராக்கியமுடையனென்பது காண்க.*

குலவுசெங் கதிரோ னிருளினை யுணராக்
கொள்கைபோற் றானொரு காலுஞ்
சொலுமறி யாமை யறிகிலா ஞானத்
தோன்றலே யெனினுமத் தூயோ
னிலகுமா னந்த வுருவினை யணுக்கட்
கீந்ததற் கிணையொரு துணையின்
மலவுட லவர்பாற் கவர்தலி னிஃதோர்

குதிரை கொண்டிட வன்றடைந்து உடல்ஆதி
கொடுத்தவன் போல் கொடுப்பவர்க்கும்
பொதுமை உற்று இவண்ஓர் மானுடன் தானாய்த்
திகழும் அப்பூரண புராணன்.

எ.ம். : கல்யாண காலத்தில் மறையோர் தஞ்சாதி ஆசார வழக்கமாய்ச் செல்கின்ற யாத்திரை போலவும், அக்காலத்தில் கல்யாணப் பெண் அருந்ததியைப் பார்க்குதல் போலவும், இதுவும் ஒருலகாசார வழக்கமெனத் தமது உடல்பொருளாவி மூன்றினையும் கொடுக்கும் என்போல்வார்க்கும், பாண்டியனுக்குக் குதிரை கொள்ளும் பொருட்டு அந்நாளிற் சென்று திருப்பெருந்துறையில் ஞானாசாரியாரை அடைந்து உடலாதி மூன்றினையும் உண்மையாகக் கொடுத்த மாணிக்கவாசக சுவாமிகள் போல் உடலாதிகளை உண்மையாகக் கொடுப்போர்க்கும் பொதுமையுற்று இவ்விடத்து ஒரு மனிதனாகியும், மானை இடக்கரத்தேந்திய சிவனாகியும் விளங்கா நிற்பன். அந்தப் பரிபூரணனாகிய பழையோன். என்றவாறு.

வதுவைநாள் யாத்திரை செல்லும் மறையோரும் அக்காலத்தில் அருந்ததியை நோக்குங் கல்யாணப் பெண்ணும் யாத்திரை போவது போலவும் அருந்ததியை நோக்குதல் போலவும் காட்டின மாத்திரமே அன்றி யாத்திரை போனதும், அருந்ததியைக் கண்டதும் அவர் மனத்திற்கு இல்லை; அதுபோல் உலகாசார வழக்கமாக உடலாதிகளைக் கொடுப்போரும் கொடுத்ததுபோல் காட்டின மாத்திரமே அன்றிக் கொடுத்தது இவர் மனத்திற்கு இல்லை என்பதறிக.

பாரினட் டாங்கா திகளொடக் குரவற்
பலதரம் வலம்வந்து பணிந்து
சீரிய துதிசெய் தனுதின மவற்றாற்
றிருவுளத் தடைக்கவும் பட்டுத்
தூரமோ டணிமை யறவிறை கருணை
சுரக்குநா ளளவுநின் றேவ
லாரிவன் றனக்கொப் பெனச் செய்தொண் சரண்பெற்
றறியவேண் டுவமுழு தறிந்தான். 73

பாரின் அட்டாங்க ஆதிகளொடு அக் குரவற்
பலதரம் வலம்வந்து பணிந்து
சீரிய துதி செய்து அனுதினம் அவற்றால்
திருஉளத்து அடைக்கவும் பட்டுத்

தூரமோடு அணிமை அற இறை கருணை
சுரக்கு நாள் அளவு நின்று ஏவல்
ஆரிவன் தனக்கு ஒப்பெனச் செய்துஒண் சரண்
பெற்றுஅறிய வேண்டுவ முழுது அறிந்தான்.

எ.து. : பூமியின்கண் அட்டாங்க முதலிய அங்கங்களுடனே அந்த ஞானாசாரியனைப் பலகாலும் வலமாக வந்து வணங்கி எக்காலமும் தோத்திரம் பண்ணி அவ்வணக்கத் தோத்திரங்களினால் இவன் பக்குவனாமென்று அறிந்து ஆசாரியனது திருவுளத்தில் அடைக்கவும் அன்புடையனாகி அவ்வாசாரியன் கோபித்தானென்று தூரத்திலும் செல்லாமற் சந்தோசித்தானென்று சமீபத்திலும் சாராமற் சேய்மை அணிமைகளுக்கு நடுவாய் அவ்வருள் இறைவன் கிருபை வைக்குநாளளவும் நின்று ஏவற்பணிவிடைகளைச் செய்து ஒள்ளிய திருவடி தீட்சை பெற்று வீடடைதற்கு அறிய வேண்டும். உபதேச மொழிகளெல்லாவற்றினையும் அறிந்தான் என்றவாறு.

அட்டங்காதி எனவே பஞ்சாங்க சிட்டாங்க சிராங்கமும் கொள்க.

தூரமோ அணிமையற வென்றதற்கு உதாரணம் : திருவள்ளுவ நாயனார்.

"அகலாது அணுகாது தீக்காய்வார் போல்க
இகல் வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்"

மன்னரிடம் பழகுபவர்கள் தீயின் அண்மையின் குளிர் காய்பவர்போல, தக்க நிலையிலிருந்து செயல்பட வேண்டும்.

அட்டாங்காதிகளோடு அக்குரவற் பலதரம் வலம் வந்தென்பதற்கு உதாரணம் : சிவதருமோதிதரம்.

"வலஞ்செய்து தண்டதனை மானவிதி முறை தழுவத்
தலந்தன்னிற் பணிந்தெழுக தலைகரமற்று இருகன்னந்
துலங்குமுக வாய்புயங்கள் எனும் எட்டும் தோயமயிர்
இலங்குசிரங் கரமுழந்தாள் எனும் ஐந்து இலங்குறவே"

மற்றும் வருவனவற்றால் காண்க.

(திருக்கோயிலை வலமாகச் சுற்றிவந்து, தலை, இரண்டு கைகள், இரண்டு கன்னம், முகம், வாய், நெற்றி என்னும் எட்டும் நிலத்தில் தோயவும் (அல்லது) தலை, கைகள், இரண்டு முழந்தாள், என்னும் ஐந்தும் தோய்வும் வீழ்ந்து வணங்கும் முறைப்படி பணிந்து வணங்கவேண்டும்.)

சற்குரு வருளா லையமுந் திரிவுந்
தானற மறைமுடி வுணர்ந்த
பிற்குரு பரன்றாண் முச்சரண் புகுந்த
பெரியவ ரினமரீஇ யிருந்தொண்
சொற்களி னரிய பொருள்கடேர்ந் தவணந்
தொலைத்தொரு சிறிதுநாட் பின்னர்க்
கற்குத லாதி யனைத்துநீத் தென்று
ஞானாசா தகத்தினாள் கழிப்பான். 74

சற்குரு அருளால் ஐயமுந் திரிவும்
தான் அற மறைமுடி உணர்ந்த
பிற்குருபரன் தாள் முச்சரண் புகுந்த
பெரியவர் இனமரீஇ இருந்து ஒண்
சொற்களின் அரிய பொருள்கள் தேர்ந்து அவணம்
தொலைத்து ஒரு சிறிது நாள் பின்னர்க்
கற்குதல் ஆதி அனைத்து நீத்து என்றும்
ஞான சாதகத்தின் நாள் கழிப்பான்.

எ.து. : சற்குரு கடாட்சத்தினாலே ஐயமுந்திரிவும் நீங்கி வேதத்தின் முடிவாகிய மகாவாக்கியத்தினால் அறிகின்ற மெய்ப்பொருளை நிச்சயித்து அறிந்தபின் அந்த ஞானாசாரியனது திருவடிகளைத் தனக்குமுன்னர் அடைக்கலமாகப் புகுந்த பெரியோர் கூட்டத்தினை அடைந்திருந்து ஒள்ளிய சாத்திரத்தின் மொழிகளினது அரிய பொருள்களை அவரால் ஆராய்ந்து அறிந்து அம்முறையே சிறிது காலங்கழித்த பின்னர்ச் சிரவண மனனங்கள் முதலிய அனைத்தினையும் விட்டு நீங்கி எக்காலத்தும் ஏகாந்த தானத்திலிருந்து நிட்டை கூடி ஞான சாதகத்தினாலே நாள்களைப் போக்க நிற்பான் என்றவாறு.

ஐயந்திரி வென்றவற்றுள் ஒன்றோ இரண்டோ என்பது ஐயம், முன்னர் ஒன்றென்று துணிந்து இரண்டென்பது, முன்னர் இரண்டென்று துணிந்து ஒன்றென்பதும் திரிவென்றறிக.

ஒண் சொற்களின் அரிய பொருள்கள் தேர்ந்து என்றதற்கு உதாரணம் : பெருந்திரட்டு

"ஒப்பில் மலன் ஓதி வைத்த
உரையை ஓதல் ஓதுவித்தல்
செப்பும் பொருளைத் திரிவுமறத்
தெளிகை பிறரைத் தெளிவிக்கை

தப்பாது அதனை மனத்தகத்தே
 தரிக்கை எனவுந் தானைந்தாம்
வைப்பார் அருந்தா மருந்தாகிச்
 சிறந்த ஞான மகவினையே"

கடவுள் ஓதிவைத்த உரையைத் தாம் ஓதுதல், பிறர்க்கு ஓதுவித்தல், சொல்லும் பொருளைத் திரிவு அறத் தெளிதல் பிறரைத் தெளிவித்தல் அதனை மனத்தகத்தே இருத்துதல் என்னும் ஐந்தும் மருந்தாகி ஞானத்தினை விளைவிக்கும் வினையாகும்.

மற்றும் வருவனவற்றால் காண்க.

அரும்பொறி யின்மை பழியன்றி யார்க்கு
 மறிவறிந் தாள்வினை யின்மை
பெரும்பழி யெனலா னொருவன்வீட் டின்பம்
 பெறாமைகொ டிகழ்கலர் பெரியோர்
விரும்பஃ தடையும் வகையருட் குருவான்
 விளங்கியு முளங்கையிற் கனிபோல்
வரும்படி நாளு முயன்றுறா வென்போன்
 மதியிலார் தமையிகழ் வதலால். 75

அரும்பொறி இன்மை பழிஇன்றி யார்க்கும்
 அறிவுறிந்து ஆள்வினை இன்மை
பெரும்பழி எனலான் ஒருவன் வீட்டின்பம்
 பெருமை கொடு இகழ்கலர் பெரியோர்
விரும்ப அஃது அடையும் வகை அருள்குருவான்
 விளங்கியும் உளங்கையில் கனிபோல்
வரும்படி நாளு முயன்றுறா என்போல்
 மதியிலார் தமை இகழ்வு அதலால்.

எ.து. : யாவர்க்கும் அரிதாகிய செல்வம் இல்லாமை பழிப்பன்று அச்செல்வத்தினை அடையும் உபாயம் அறிந்திருந்தும் அவ்வுபாய நெறிக்கண் முயற்சியின்மையே பெரிய பழிப்பென்று திருவள்ளுவ நாயனார் கூறுதலின், ஒருவன் ஞானநிட்டை இடையறாது கூடுமிடத்து அவ்வீட்டின்பத்தினை அடையாதிருத்தலைக் குறித்து இகழார் பெரியோர், விரும்பா நின்ற அந்த ஆனந்தத்தை அடையும் நெறி ஞானாசாரியனால் அறிந்திருந்தும் உள்ளங்கை நெல்லிப் பழம்போல் அது வரும்படிக்கு எந்நாளும் ஞானசாதகத்தின்கண் முயற்சிப்படாத என்போலும் புத்தியில்லாரை இகழ்வதே அன்றி என்றவாறு.

எக்காலமும் மாறாது ஞானசாதகத்தின்கண் முயலல் வேண்டுமென்பது இதனுட் காண்க.

பகர்தரு தொழில்க ளனைத்துமோர் சிறிது
பண்ணவேண் டுவபணி விடுத்துப்
புகலுரை யடக்கித் தனியிடத் திருந்து
போற்றிசெய் தருட்குரு பதம்பின்
மிகமுயன் றிதய வருத்தமெய் தாமன்
மெலிந்துகை விடுதல்செய் யாம
லகமுக மாக்கி மனத்தைநா டொறுமோ
ரைம்புல னொழித்தசை வறுப்பான். 76

பகர்தரு தொழில்கள் அனைத்தும் ஓர் சிறிது
பண்ண வேண்டுவ பணி விடுத்துப்
புகலுரை அடக்கித் தனிஇடத்து இருந்து
போற்றி செய்து அருட்குரு பதம்பின்
மிகமுயன்று இதய வருத்தம் எய்தாமல்
மெலிந்துகை விடுதல் செய்யாமல்
அகமுகம் ஆக்கி மனத்தை நாள்தொறும் ஓர்
ஐம்புலன் ஒழித்து அசை வறுப்பான்.

எ.து. : சொல்லாநின்ற நித்திய கருமங்கள் அனைத்தினுள்ளும் இன்றியமையாது செய்ய வேண்டுங் கன்மங்களில் ஒரோர் சிறிது சீக்கிரத்திலே செய்து விடுத்துப் புகல்கின்ற வாக்கினை மௌனமாக்கி ஏகாந்த தானத்தில் இருந்து கொண்டு கிருபாசாரியரது திருவடிகளைத் தோத்திரம் பண்ணிப் பின்னர் அவர் கூறிய உபாயத்தின்படியே மனோலயமும் பண்ணத் தொடங்கும்போது அந்த உபாய நெறிக்கண் மிகவும் முயற்சிப்பட்டு மனவருத்தமும் அடையாமல் எவ்விதத்தால் அடக்கினும் இது அடங்குவதில்லை என்று உள்ளம் வருந்தி அவ்வுபாய நெறியை விட்டு நீங்குதல் செய்யாமல் பையப் பைய அம்மனத்தினைச் சகமுகமாய்ச் செல்லவொட்டாமல் அகமுகமாக்கி எக்காலமும் ஒப்பற்ற பஞ்சேந்தரியங்களையும் நிக்கிரகம் பண்ணி மனத்தினது சங்கற்பத்தை நாசம் பண்ணுவான் என்றவாறு.

தனித்திருந் தொருதம் மனத்தையைம் பொறிவாய்த் தடுத்தென்ற செய்யுளுள், வாக்குக் காயங்களை அடக்கினால் அன்றி மனமடக்கக் கூடாதென்ற முறையே, இச்செய்யுட் கண்ணும் மனமடக்குதற்கு அவை அடக்க வேண்டுமென்று கூறியவாறு காண்க.

கீழ்ப்போன செய்யுட்களுள் கூறிய முறையே புறப்பற்றுக்களாய் உள்ளன எல்லாம் துறந்து அநாசாரியரை விட்டு நீங்கி ஆசாரியரை வந்து அடைந்து திருவருடி தீட்சை பெற்று அவரது உபதேச மொழிகளைக் கேட்டு அவரது திருவடியை அடைந்த பெரியோரை அடைந்து நிட்டை கூடி ஞானச்சாதகம் பண்ணுவோனுக்கு மேல் வரும் செய்யுள்களுள் ஞானாசாராம் கூறுகின்றார்.

மிக முயன்று இதயம் வருத்த எய்தாமல் என்றதற்கு உதாரணம் : ஞானவாசிட்டம்.

**"மிகமுயன்று வருந்தாமற் சமமாகின்ற**
**வேண்டுகோளால் தன்முயல்வால் வினோதந் தன்னால்**
**பகர்மனமாஞ் சிறுமகவை நிறுத்தல் வேண்டும்**
**பலபிறப்பிற் பரிசயங்கள் அகலப் பண்ணி**
**அகலசுபவா தனையுதித்தால் முயற்சி பேறாம்**
**ஐயுறினுஞ் சுகமடைவை அதுதீ தன்று**
**திகழ்மனம் போய்த் தற்பதத்தைத் தெளியு மட்டுஞ்**
**தேசிகனூல் சொல்வழியிற் செல்லு வாயே"**

(மனதை அடக்க மிக முயலாமல் வெறுத்து இகழ்ந்து உயர்த்துச் சொல்லாமல் வேண்டுகோளால் தன் முயற்சியால் தனது மனமாகிய சிறுமகவை நிறுத்த வேண்டும். இது பல பிறப்பில் பெற்ற பயிற்சியால் தொடர்புடையவைகளை நீக்கி அகன்ற நற்செயலில் வருமானால் முயற்சிப் பேறாம். ஒருசமயம் ஐயம் வரினும் சுகமடைவீர். ஐயம் தீதல்ல. விளக்கமான மனம் தெளியும் மட்டும் குருநாதன் சொல்லிய நூல்வழிச் செல்க.)

என்றும், திருமந்திரம்

**"உடலாங் குகையில் உணர்வாகும் பீடத்**
**தடலார் சமாதி யிதயத்த தாக**
**நடமா டியகுகை நாடிய யோகி**
**மிடையாகா வண்ணமே சாதிக்கும் மெல்லவே"**

(உடலென்னும் குகையில் உணர்வென்னும் இருக்கையில் மலமுதலியவற்றை வெல்லும் திண்மைவாய்ந்த நிட்டை கூடும் நிலையம் நெஞ்சமாகும். இந்நெஞ்சத்தை இடமாகக் கொண்டு இறைவன் நடமாடுகின்றான். யோகியர் அவனையே நாடி நிற்கின்றனர். திருவருள் நினைவால் இடையூறு நேராவண்ணம் நிட்டையினை நிலைபெறச் செய்து இன்புறுவர்.)

**உச்சியம் போதின் மீதரும் பசிக்கவ்**
**வூர்வல மாயிலந் தோறும்**
**பிச்சைகை யிடையிற் காடிகூ ழேனும்**
**பெற்றது பற்றியுள் வெறுப்போ**
**டிச்சையற் றருந்திப் பொருந்தவே காந்தத்**
**திடையினுந் தாகம்வந் தடையி**
**னச்சிநீ ரூரிற் புகுந்துறா தேரி**
**யாதியி னருந்துத னன்றே.** 77

*உச்சியம் போதில் மீது அரும்பசிக்கு அவ்*
*வூர் வலமாய் இலந்தோறும்*
*பிச்சை கையிடையில் காடி கூழேனும்*
*பெற்றது பற்றிஉள் வெறுப்போடு*
*இச்சை அற்று அருந்திப் பொருந்தவே காந்தத்து*
*இடையினும் தாகம் வந்து அடையின்*
*நச்சி நீர் ஊரில் புகுந்துறாது ஏரி*
*ஆதியில் அருந்துதல் நன்றே.*

*எ.து. : உச்சிக்காலத்திலே மிகுந்த அரிய பசிக்கு அந்த ஊரினை வலமாகச் சென்று வீடுதோறும் பிச்சையாகக் கையின் கண்ணே காடியாயினும், கூழாயினும் கொடுத்ததை வாங்கி உள்ளத்தின்கண் அவற்றின் வெறுப்பும் விருப்புமின்றிப் புசித்து மீண்டும் போய் தனது ஏகாந்த தானத்தில் இருக்க வேண்டும். பின்னரும் தண்ணீர்த்தாகம் வந்ததாயின் நீரினை விரும்பி ஊர்க்கட் புகாது ஏரி முதலியவற்றுள் நீர் அருந்துதல் நன்மையாம் என்றவாறு.*

*பிச்சைக்கேயன்றி நீரைக் குறித்து ஊர்க்குப் போகவேண்டாமையின் ஏரியாதியினருந்துதல் நன்று என்றார். ஏரியாதி யெனவே நதி, மடு, வாவி, சுனை முதலியனவுங் கொள்க.*

*இலந்தோறும் பிச்சை கையிடையில் என்றதற்கு உதாரணம் : திருமந்திரம்.*

**"பரந்துல கேழும் படைத்த பிரானை**
**இரந்துணி யென்பர்கள் எற்றுக் கிரக்கும்**
**நிரந்தர மாக நினையும் அடியார்**
**இரந்துண்டு தன்னடி யெட்டச் செய்தானே"**

*(ஏழு உலகையும் படைத்த சிவபெருமானை இருந்துண்பவன் என்பர் உண்மையறியார். "அவன் எதன் பொருட்டு இரக்கின்றான்? என்றால்,*

*மெய்யடியார்கள் தன்னையே நினைத்துக்கொண்டிருக்கிறார்கள் அவர்கள் உண்ணும் ஊன் தன் திருவருளால் வழங்கப்படுவது எனினும் மெய்ம்மை உணர்த்த இரந்து உண்கின்றார். அதனால் அவர்கள் அத்திருவருளின்பால் இருந்து பெற்று உண்ணுதல் வேண்டும். அவ்வாறு உண்ணின் தன் திருவருடியினை எய்துவது எளிதாம் என்னும் திருக்குறிப்பாம் என்க.)*

என்றும்,

"பிறப்பறி யார்பல பிச்சைசெய் மாந்தர்
சிறப்பொடு வேண்டிய செல்வம் பெறுவர்
மறப்பிலர் ஆகிய மாதவஞ் செய்வர்
பிறப்பினை நீக்கும் பெருமை பெற்றாரே"

*(பலவகையாகப் பொருளீட்டும் முயற்சி இன்றிப் பிச்சை எடுக்கின்ற மனிதர்கள் பிறப்பின் நோக்கத்தை அறியமாட்டார். இறைவனை மறவாது பெரிய தவத்தைச் செய்பவர்கள் இப்பிறப்பில் சிறப்போடு வேண்டிய செல்வத்தையும் பிறப்பினை நீக்கும் பெருமையும் பெற்றவர் ஆவர்.)*

என்றும்,

"அச்சிவன உள்நின்ற பொருடன்னை யுள்ளுவோர்
உச்சியும் போதாக வுள்ளமாக் கோயிற்குப்
பிச்சை பிடித்துண்டு பேத மறநினைந்து
இச்சைவிட் டேகாந்த மேறி யிருப்பரே"

*(அச்சிவன் உடம்பினுர் உயிர்க்குயிராக விளங்கும் அருளை உணர்ந்தவர். உச்சிப்போதில் உள்ளத்தில் அமர்ந்திருக்கும் தலைவனுக்குப் பிச்சை ஏற்று உண்டு பேதமிலா ஞானம் வரபெற்று ஆசையை விட்டு தனிமையில் பொருந்திருயிருப்பர்.)*

என்றும் வரும் மற்றும் வருவனவற்றால் காண்க.

ஞானசா தகன்மற் றுதயமா தியினூ
　　ணயக்கொணா மயக்கமா தலினு
மீனமார் விந்து மிகுமெனா வகன்றோ
　　ரிகழ்ந்துகை விடுத்தவா தலினுந்
தானிரந் தொருபோழ் தருந்திடு முணவுஞ்
　　சமமலாற் றாழினு மிகினு
முனதா ருடற்க ணோயுறு மற்றைக்

குறக்கமு மிகுந்திடு மன்றே. 78

ஞானசாதகன் மற்றும் உதய ஆதியின் ஊண்
நயக்கொணா மயக்கம் ஆதலினும்
ஈனமார் விந்து மிகும்எனா அகன்று ஓர்
இகழ்ந்து கைவிடுத்து அவாதலினும்
தான் இரந்து ஒருபோழ்து அருந்திடும் உணவும்
சமமலால் தாழினும் மிகினும்
ஊன தார் உடல்கண் நோயுறு மற்றைக்கு
உறக்கமு மிகுத்திடும் அன்றே.

எ.து. : ஞானசாதகம் பண்ணுகின்றவன் உச்சிக் காலத்தொழித்து மற்றை உதயகால முதலிய காலங்களின் அன்னாதிகளைப் புசிக்கலாகாது, தேக மயக்கம் வருதலினாலும், இழிவினையுடைய சுக்கிலவர்த்தனையா மென்று துறந்தோரால் இகழ்ந்து விடப்பட்டனவாகலாலும், தான் பிச்சையேற்று ஒருபோது புசிக்கின்ற புசிப்பும் எந்நாளும் ஒரு சமமாகப் புசியாமல் குறைந்ததாயினும் மிகுந்ததாயினும் ஊன் பொருந்திய உடம்பின்கண் வியாதி வந்து அடையும் அன்றைக்கு நித்திரையும் மிகுந்து வரும். என்றவாறு.

மயக்கம் வருதலினால் தேகம் ஆசனத்தின்கட் செவ்வேயிராது. விந்து மிகுதலினால் மனத்தின்கட் காமமிகுந்து அம்மனம் அசைவற நில்லாது. வியாதி வருதலின் சமாதிகூடத் தொடங்கவே கூடாது. உறக்க மிகுதலினால் கேவலம் வந்து அடையும் ஆகலின் இதனுட் கூறிய முறையே செய்ய வேண்டுமென்பதறிக. உதயமாதியென்றதனால் சாயங்காலம் இராக்காலம் விடியற்காலம் முதலியனவுங் கொள்க.

மிகுத்திடு முனமிற் படுதழ லவிப்பான்
விடுபவன் கலங்கனீர் தெளிநீர்
பகுத்திடா னதுபோற் காடிசோ றேனும்
பசித்தவன் புசித்திட றகுமா
னகத்தவர் மனைதோ றுழன்றெனக் கடிசி
னல்கிடென் றொருவன்வேட் டுணலா
னகத்துறு பசியும் போக்கிமற் றதுகொ
டதிகமென் பயனடைவானோ. 79

மிகுத்திடு முனம் இல்படு தழல் அவிப்பான்
விடுபவன் கலங்கல் நீர் தெளிநீர்

பகுத்திடான் அதுபோல் காடி சோறேனும்
பசித்தவன் புசித்திடல் தகுமால்
நகத்தவர் மனைதோறும் உழன்று எனக்கு அடிசில்
நல்கிடுஎன்று ஒருவன் வேட்டு உணலால்
அகத்துறு பசியும் போக்கி மற்றதுகொடு
அதிகம்என் பயன் அடைவானோ.

எ.து. : வீட்டின்கட்பட்ட அக்கினி மிகுந்து பற்றி எரியுமுன்னர் அவிப்பவன் அதனை அவித்தலைப் பார்க்குதலேயன்றிக் கலங்கனீர் என்றும், தெளிந்த நீரென்றும், நீரினைப் பகுத்துப் பாரான். அதுபோல் உதராக்கினி மிகுவதற்கு முன்னர் இதனை அவித்தற்கு நீரென்று கருதி நாச்சுவை விரும்பி நன்று தீதென்று பகுக்காது காடிச் சோறாயினும் நல்ல சோறாயினும் பசியையுடைய தவத்தோன் புசிக்குதல் முறைமையாம். தவத்தோர் சிரிக்க வீடுதோறுந் திரிந்து எனக்குச் சோறு கொடுமின என்று கேட்டு ஒருவன் நாச்சுவை விரும்பி வாங்கி உண்டலினால் அவ்வயிற்றில் உறுபசியைப் போக்குதலும் அன்றி அங்ஙனம் உண்டது கொண்டு அதிகமாக வேறே யாது பயனைப் பெறுவானோ என்றவாறு.

பிச்சை வாங்கி உண்டலினாலும், வேட்டுண்டலினாலும் பசி போதலேயன்றி வேறுபயன் இன்மையால் அதிகம் என்பயன் அடைவானோ என்றார். தவத்தோர்க்கு நாச்சுவை வேட்டு ஒருவரைப் பின் சென்று வாங்கியுணலாகாதென்பது கண்டு கொள்க.

(காடி சோறேனும் பசித்தவன் புசித்திடற்குமென்றதற்கும், நகத்தவர் மனைதோ றுழன்றென்றதற்கும்.) உதாரணம் : கூர்ம புராணம்.

"இவ்வகை யையமேற்று நன்குண்போன்
காடிசோ றெவற்றினை யேனுஞ்
செவ்விதி னளித்த தருந்திடல் வேண்டும்
மனைதொறுஞ் சென்றுசென் றுற்று
வெவ்வழல் போல வெகுண்டுமற் றொன்றை
விழைந்துநீ யளித்திஎன்று அருந்தல்
அவ்விய மளித்த மனத்தினோர்க் காகா
வென்றுநான் மறைய றைந்திடுமால்"

(பிச்சை எடுத்து உண்போன் புளித்த கஞ்சியே ஆயினும் செம்மையாக ஊற்றினாலும் அருந்துதல் வேண்டும். இல்லந்தோறும் சென்று நெருப்புப் போலச் சீறி ஒன்றினை விரும்பி அதனை அளித்திடுக என வாங்கி உண்ணல் மனக்கோட்டம் இல்லாத தவத்தினர்க்கு ஆகாது

*என நான்மறைகள் கூறுகின்றன.)*

**எரிந்தெழு பசிநோய் தணிக்கவோர் மருந்தென்**
**றேற்றுணா தொருவனாச் சுவைவேட்**
**டருந்திடு மளவும் வருந்தியப் பிண்ட**
**மளித்தவர் தம்மைநோ வதுவென்**
**னிருந்துள கிரக வாழ்க்கையும் பினைவந்**
**தெய்திய துறவுமல் லதுவீண்**
**டிரிந்துடல் வளர்த்தி யெனத்தனை விடுத்த**
**தெய்வத்தை நோவது மறந்தே.** 80

*எரிந்து எழு பசிநோய் தணிக்க ஓர் மருந்து என்று*
*ஏற்று உணாது ஒருவன் நாச்சுவை வேட்டு*
*அருந்திடும் அளவும் வருந்தி அப்பிண்டம்*
*அளித்தவர் தம்மை நோவது என்*
*இருந்துள கிரக வாழ்க்கையும் பினைவந்து*
*எய்திய துறவும் அல்லது வீண்*
*திரிந்து உடல் வளர்த்தி எனத்தனை விடுத்த*
*தெய்வத்தை நோவது மறந்தே.*

*எ.து. : வயிற்றின்கண் எரிந்து எழுகின்ற பசி வியாதியை மாற்றுதற்கு ஈது ஓர் மருந்து என்று ஏதாயினும் வந்த பிச்சையை வாங்கி உண்ணாத ஒருவன் நாச்சுவையை விரும்பிக் காடி கூழ் முதலிய பிச்சை வந்த இடத்து அதனைப் புசிக்கும் அளவும் உள்ளம் வருந்தி அந்தப் பிச்சை கொடுத்தோரை நோவது என்னையோதான்! முன் இருந்துள்ள இல்வாழ்க்கையும் அல்லது அதனை விட்டுப் பின்னர் வந்து அடைந்த துறவும் அல்லாது பதிதனாய் வீணே திரிந்து உடம்பை வளர்ப்பாய் என்று தன்னை விட்ட ஊழ்வினையை நோதல் மறந்து என்றவாறு.*

*ஒருவரைப் பின் சென்று வேட்டுண்ணாது பிச்சை ஏற்றிடினும் காடி கூழ் முதலிய பிச்சைகளை அருந்தும்போது உள்ளத்தில் வெறுப்பு வைத்து அருந்துதலும் தவத்தினர்க்குக் குற்றம் என்பது காண்க.*

**எய்தவ னுறமற் றேவையென் னோவ**
**தெனவுல குரைத்தலி னொருதாஞ்**
**செய்துள வினைக்குத் தக்கபே றிறைவன்**
**சேர்க்குத றனைமறந் தென்னோ**
**வுய்தவ மறியாக் கைதவ ரைய**
**முதவிடார் தமையுத வினரை**

வைதல்வாழ்த் திடுதல் செய்துமற் றொருசாண்
வயிறுநா டொறும்வளர்ப் பதுவே. 81

எய்தவன் உறமற்று ஏவை என் னோவ
தென உலகு உரைத்தலின் ஒருதாம்
செய்துள வினைக்குத் தக்க பேறு இறைவன்
சேர்க்குதல் தனை மறந் தென்னோ
உய்தவம் அறியாக் கைதவரையம்
உதவிடார் தமை உதவினரை
வைதல் வாழ்த்திடுதல் செய்து மற்று ஒருசாண்
வயிறு நாள்தொறம் வளர்ப்பதுவே.

*எ.து. : எய்தவன் இருக்க அம்பை நோவது என்னை என்று உலகத்தார் வழக்கமாக எடுத்துச் சொல்லுதலின், ஒப்பற்ற தாம் செய்துள்ள நல்வினை தீவினைகளுக்குத் தக்க சுக துக்கங்களைக் கடவுள் கூட்டுகிற முறைமையினை மறந்து, என்னையோ வீட்டினை அடைந்து பிழைக்குத் தவத்தினைப் பண்ண அறியாத வஞ்சகர் பிச்சை கொடாதவரையும் அது கொடுத்தவரையும் வைதல் செய்தும் வாழ்த்துதல் செய்தும் தமது ஒரு சாண் வயிறு நாள்தொறும் வளர்ப்பது என்றவாறு.*

*சிவச்செயலை மறந்து சீவச்செயலை நாடினாராகலின் "உய்தவம் அறியாக் கைதவரென்றும், அங்கணம் நாடிப் பிச்சை உதவிடாரையும் உதவினோரையும் வைதலும் வாழ்த்துதலும் தவத்தோர்க்கு இழிவாகலின் "சாண் வயிறு நாடொறும் வளர்ப்பதுவே என்றும்" கூறினார்.*

தன்னரு குறுசேய் சிரத்தொரங் குலியாற்
றான்புடைத் தொருவன்மீ தொருவன்
சொன்னமாத் திரத்தி னவனையச் சேயுந்
துணிவுகொ டெழுந்தறை குதல்போன்
முன்னவன் விளையாட் டாயவைந் தொழிற்கு
முன்னிலை யாயசீ வரைப்பார்த்
தின்னல்செய் சாபமிட்டுமா தவரு
மென்கொலோ தவமிழப் பதுவே. 82

தன்அருகுறு சேய் சிரத்து ஓர் அங்குலியால்
தான் புடைத்து ஒருவன் மீது ஒருவன்
சொன்ன மாத்திரத்தின் அவனை அச்சேயும்
துணிவு கொடெழுந்து அறைகுதல் போல்

*முன்னவன் விளையாட்டாய் ஐந்தொழிற்கு*
*முன்னிலை யாயசீவரைப் பார்த்(து)*
*இன்னல் செய் சாபம் இட்டு மாதவரும்*
*என்கொலொ தவம் இழப் பதுவே.*

*எ.து. : ஒருவன் தனது அருகே இருக்கின்ற சிறுபிள்ளையினது சிரத்தில் தான் ஒரு விரலால் தெறித்துப் பிறன் ஒருவனைக் காட்டி அவன் மீதே சொன்ன மாத்திரத்தில் அதனை அறியாமையினால் மெய்யென்று கருதிக் கொண்டு அவனை அந்தச் சிறுபிள்ளையும் எழுந்திருந்து அறைகுதல்போல், கடவுளது திருவிளையாட்டாகிய பஞ்ச கிருத்தியத்தில் சீவர்கள் முன்னிலையாகத் தான் செய்த தீவினைகளுக்கு ஈடாகத் துன்பஞ் செய்தலை மறந்து சீவர்கள் தஞ்செயலாகச் செய்தார் என்று கருதி அவரை நோக்கித் துன்பஞ் செய்யா நின்ற சாபமிட்டு மாதவத்தினை உடைய முனிவோரும் என்ன அறியாமையோதாம் அருமையாகச் செய்த தவங்களை இழந்து போவது என்றவாறு.*

*மாதவரும் என்ற சிறப்பும்மையால் சீவச்செயலை நோக்காது சிவச்செயலை நோக்குதல் யாவர்க்கும் அரிதென்பதும், சிவச்செயலை நோக்குவார்க்கு இம்மையில் தவம் இழவாமையின் மறுமையிற் பிறவித் துன்பம் இன்றென்பதும் காண்க.*

*சாபமிட்டு மாதவரும் என்கொலோ தவம் இழப்பது என்றதற்கு*

*உதாரணம் : அஞ்ஞவதைப்பரணி*

**"கோபமிக்க போதேவர் ஆறுவார் குறுகுவோர்**
**தம்மைக் கொடிய நோய்புகுஞ்**
**சாபமிட்டுமா தவர்கள் ஆயினார் தலைமை**
**மிக்கதம் தவம் இழப்பரே"**

*(கோபமானது மிகுந்து உண்டான காலத்து யாராக இருப்பினும் சாந்தம் வராது. கோபமானது கொடும் வியாதிகளைக் கொடுக்கும். கோபத்தால் சாபமிட்டு சிறந்த தவம் உடையோர்கள் தங்களது தவங்களை இழப்பார்.)*
*என வரும் மற்றும் வருவனவற்றால் காண்க.*

**பெண்ணைவிட் டகலா வொருவிடன் றன்னைப்**
**பிறர்வழக் கினிற்கொடு போகக்**
**கண்ணைவிட் டகலா தவள்வரல் போலுங்**
**கண்டுகொண் டேகியாங் கஃதெவ்**

வண்ணமா யினுஞ்சீக் கிரத்தினின் முடித்தவ்
வனிதைபான் மறிதரன் மானப்
பண்ணிய சமாதி விடுத்தறி ஞருந்தம்
பசிதணித் ததையுறும் பரிசே. 83

பெண்ணை விட்டகலா ஒருவிடன் தன்னைப்
பிறர் வழக்கினில் கொடு போகக்
கண்ணை விட்டு அகலாதவள் வரல் போலுங்
கண்டு கொண்டு ஏகியாங்கு அஃதுஎவ்
வண்ணமாயினுஞ் சீக்கிரத்தினின் முடித்துஅவ்
வனிதைபால் மறிதரல் மானப்
பண்ணிய சமாதி விடுத்து அறிஞருந்தம்
பசிதணித்து அதையுறும் பரிசே.

எ.து. : அழகினால் மிகுந்துள்ள ஒரு பெண்ணைக் கணப்போதாயினும் விட்டு நீங்காத ஒரு காமியை அவனுக்குக் கடன் கொடுக்க வேண்டிய பிறர் வந்து வழக்கினிடை அழைத்துக் கொண்டு செல்ல அவன் தனது கண்ணை விட்டு நீங்காது அந்தப் பெண் வருதல்போலும் பார்த்துக் கொண்டு சென்று அவ்விடத்து அந்த வழக்கினை எப்படியாயினும் சீக்கிரத்தில் தீர்த்துக் கொண்டு அந்தப் பெண்ணிடத்தில் மீண்டும் வந்து கூடியிருத்தல்போல், அறிஞரும் கணமாயினும் இடைவிடாது தாம் பண்ணிய ஞான சமாதியை விட்டு நீங்கிக் காடி கூழேதாயினும் சீக்கிரத்தில் வாங்கிப் புசித்துத் தமது பசியை மாற்றிக் கொண்டு மீண்டும் வந்த அந்த ஞான சமாதியைக் கூடும் முறைமை என்றவாறு.

அறிஞர் மிகவும் விரும்பி ஒரு கணமாயினும் விட்டு நீங்காது ஞான சமாதியைக் கூடியிருத்தலின் "பெண்ணை விட்டு அகலா வொருவிடன்" என்றும் பசியினாற் பிச்சையைக் குறித்துப் பிராரத்த வசத்தனாய்ச் செல்லுகின்றபோது மனத்தின்கண் அந்நிட்டை நீங்காது செல்லுதலின் "கண்ணைவிட்டு அகலாதவன் வரல் போலுங் கண்டு கொண்டேகி" என்றும் நாச்சுவை விரும்பாது காடி கூழேதாயினும் வந்ததைச் சீக்கிரத்தில் வாங்கி உண்டு பசியை மாற்றி மீண்டும் வந்து சமாதியைக் கூடி இருத்தலின் ஆங்கு அஃது எவ்வண்ணமாயினுஞ் சீக்கிரத்தனின் முடித்து அவ்வனிதைபால் மறிதரல் மானவென்றும்" உவமை கூறினார்.

நடந்துறங் கொருவன் றனைமல ரமளி
நண்ணுமா புரியின்மற் றவனுங்
கிடந்துறங் குவதைக் குறித்துமுன் னுறக்கம்
விழித்தவா கிளக்குதல் போலுந்

தொடர்ந்தொரு கணமு மிடைவிடா ஞான
நிட்டரைத் தூயதஞ் சமாதி
அடைந்தனர் விடுத்தனர் என்பரே காந்த
மவர்க்கனு கூலமா தலினே. 84

நடந்து உறங்கு ஒருவன் தனை மலர் அமளி
நண்ணுமர புரியின் மற் றவனுங்
கிடந்து உறங்குவதைக் குறித்து முன் உறக்கம்
விழித்தவா கிளக்குதல் போலும்
தொடர்ந்து ஒரு கணமும் இடைவிடா ஞான
நிட்டரைத் தூயதஞ் சமாதி
அடைந்தனர் விடுத்தனர் என்பர் ஏகாந்தம்
அவர்க்கு அனுகூலம் ஆதலினே.

எ.து. : நடந்து செல்போது நித்திரை பண்ணும் ஒருவனைப் புட்பசயனத்திலே இருக்கும்படி செய்யில் மற்றவனும் பின்பு படுத்துக்கொண்டு நித்திரை பண்ணுவதைப் பார்த்து முன்பு நடந்தபோது பண்ணிய நித்திரையை விழித்துச் சென்றவாறாகச் செல்லுதல் போலுரும் மனத்தால் தொடர்ந்து பற்றி ஒரு கணமாயினும் இடைவிடாத ஞானநிட்டாபரை நின்மலமாகிய தமது சமாதியை அடைந்தனரென்றும், விடுத்தனரென்றும் சொல்லுவர். ஏகாந்தம் அவர்களுக்கு அனுகூலம் ஆகலின் என்றவாறு.

நடந்துறங்குவோனுக்கு மலரமளி அவ்வுறக்கத்தில் அனுகூலமாவதுபோல் நிற்றல் நடத்தல் ஓடல் முதலிய காலத்தும் இடைவிடாத ஞான நிட்டருக்கு இருந்து நிட்டைகூடல் அனுகூலம் என்பதும், நடந்து உறங்குவோனுக்கு இடையிலே ஓரோர் நினைவு தோன்றுதல் போல் நிற்றல் முதலிய காலத்தும் ஞானநிட்டை விடாதோர்க்கு இடையிடையே ஓரசைவு மனத்தின்கண் தோன்றுமென்பதும் காண்க.

தொடர்ந்து ஒரு கணமும் இடைவிடா ஞானநிட்டர் என்பதற்கு உதாரணம் : திருமந்திரம்.

"நிற்றல் இருத்தல் கிடத்தல் நடையோடல்
பெற்ற அக்காலுந் திருவருள் பேராமற்
சற்றியன் ஞானந் தந்து ஆனந்தந் தங்கவே
உற்ற பிறப்பற்று ஒளிர் ஞானநிட்டையே"

(நிற்றலும் இருத்தலும், கிடத்தலும், நடத்தலும் ஓடலும்

*செய்யும்பொழுது திருவருள் நினைவு நீங்காதிருத்தல் வேண்டும்.. சாற்றப்படும் இயற்கை மெய்யுணர்வு அங்ஙனம் நீங்காதர்க்குத் தந்தருளினான். அங்ஙனம் தந்தருளிய பேரொடுக்கப் பெருமான் "அந்தம்" என்று அழைக்கப்படுவன். அவ்வுயிர் அந்தமாகிய தன்பால் தங்கவே பிறப்பற்று விளக்கமிக்க ஞான நிட்டையினை எய்தும். சாற்றியல் என்பது சற்றியல் எனக் குறைந்து நின்றது.)*

என்றும், மெய்ஞ்ஞான விளக்கம்.

**"உறங்கிடிற் பிணமேயென்ன உணர்வு மாய்தலினாற் துன்பம்**
**பிறங்கும் அக்கனவால் தோன்றும் பீருவான் மிகவுந் துன்பம்**
**அறங்கண் மற்றோச்சி முன்னாம் அனைத்தும் ஆய்ந்து இருளேமூடும்**
**உறங்கலிற் கொடிய துன்பம் ஓர்ந்திடின் இல்லையன்றே"**

*(உறங்கும்போது பிணம் போன்ற உணர்வு வருதலினால் துன்பம். உறங்கும்போது வரும் கனவினால் துன்பம். அறங்கள் அனைத்தும் மாய்ந்து இருளே மூடுவதால் உறங்குவது போல் கொடிய துன்பம் எதுவுமில்லை.)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

**நித்திரை தடைமீ றிடிற்கைகால் போர்த்து**
**நிசியிடைப் பூவணை துயில்வா**
**ரொத்துறா விடையிற் கிடையுமப் பயிக்க**
**வூணுமெங் ஙனமித மென்னி**
**லித்தரை யோர்நித் திரைமிகற் பாயு**
**மெரிகொடும் பசிமிகிற் கறியுஞ்**
**சித்தமே வேண்டா வென்றசொல் லன்றோ**
**தெரியுமோ வவர்க்கவை மிகலான்.** 85

**நித்திரை தடை மீறிடில் கைகால் போர்த்து**
**நிசியிடைப் பூவணை துயில்வார்**
***ஒத்துறா இவையில் கிடையும் அப்பயிக்க***
***ஊணும் எங்ஙனம் இதமென்னில்***
**இத்தரையோர் நித்திரைமிகில் பாயும்**
***எரிகொடும் பசிமிகில் கறியும்***
**சித்தமே வேண்டா என்ற சொல் அன்றோ**
**தெரியுமோ அவர்க்கவை மிகலான்.**

*எ.து. : ஞானசமாதியில் இருக்குமிடத்து நித்திரை வந்து அடுக்கும்போது அதனை விவேகத்தால் தடுக்குமிடத்து நில்லாது தடைமீறி வருமாயின் இரவுக் காலத்திலே கையும் காலும் ஆகிய போர்வையைப் போர்த்துக்*

*கொண்டு பூமியாகிய பஞ்சணையில் நித்திரை பண்ணுவார்கள். ஒவ்வாத பூமிக்கண்ணே சயனமும் அந்தப் பிச்சையூணும் அவருக்கு எப்படி இதமாய் இருக்கும் என்னில் இவ்வுலகத்தார் நித்திரை மிகுந்தால் பாயும் வேண்டாம் என்றும், எரியா நின்ற கொடிய பசி மிகுந்தால் கறியும் வேண்டாம் என்றும், சொன்ன சொல் உண்மையே அல்லவோ அவர்களுக்கு அந்த நித்திரையும் பசியும் மிகுதலால் இதமன்று என்று தெரியுமோ? தெரியாது என்றவாறு.*

*மிகுந்த நித்திரை வந்தவிடத்து நித்திரை பண்ண வேண்டும் என்பதும், மிகுந்த பசி வந்த இடத்து புசிக்க வேண்டும் என்பதும், பகற்காலம் நித்திரை பண்ணல் ஆகாது என்பதும் காண்க.*

தென்பர வையினுட் கழிவட பரவை
சேர்நுகத் துளையினிற் செலல்போ
லொன்பதிற் றொன்ப தோடுமூ விலக்க
முளவியோ னியும்பிழைத் தேறிப்
பின்பிறப் பிதுபெற் றதனினும் பாதி
பிறப்புறா நாளதாக் குநரி
னின்பமீ தெனிமிக் குறங்கலர் பிறவிக்
கறவெரீஇ யுளந்துளங் கிடுவோர். 86

*தென் பரவையினுள் கழி வட பரவை*
*சேர் நுகத் துளையினில் செலல்போல்*
*ஒன்பதிற்று ஒன்பதோடு மூ விலக்கம்*
*உளவியோனியும் பிழைத் தேறிப்*
*பின் பிறப்பிது பெற்று அதனினும் பாதி*
*பிறப்புறா நாள் தாக்குநரில்*
*இன்ப மீதென மிக்கு உறங்கவர் பிறவிக்கு*
*அறவெரீஇ உளம் துளங் கிடுவோர்.*

*எ.து. : யுகாந்த காலம் வந்து ஏழ்கடலும் ஒன்றாகித் தென்கடலும் கிடக்கின்ற அகழி வடகடலுட் கிடக்கின்ற நுகத் துளையின் வழியே தெய்வ கதியாகச் செல்வதுபோல, எண்பத்து நான்கு நூறாயிரம் பேதமாய் உள்ள கருப்பங்கள் தோறும் அளவு இறந்த காலம் பிறந்து பிறந்து சுழன்று அவையெல்லாம் தப்பிக்கிடந்து பின்பு இந்த மானுடப் பிறவியை அரிதாகப் பெற்று இப்பிறப்பு அடைந்த நாள்களுள்ளும் பாதிநாள் பிறப்படையாத நாளாக நித்திரை பண்ணிப் போக்குவார் போல் இந்த நித்திரையை இன்பமென்று கருதி மிகுந்த நித்திரை பண்ணார்கள் பிறவித் துன்பத்திற்கு மிகவும் பயந்து உள்ளம்*

நடுக்குறுவோர். என்றவாறு,

பெறுதற்கரிய மானுடப்பிறவி பெற்றும் ஞானசமாதி கூடுதல் மிகவுந் துல்லபம் ஆகலின் இப்பிறப்பு அடைந்த நாள்களைச் சமாதி கூடிக் கழித்தலே அன்றி வீண் நாள்களாகக் கழித்தல் ஆகாது என்பது காண்க.

அறவுநித் திரையைத் துறந்திடி னுடற்க
ணடைதரும் பிணிகண்மற் றதனாற்
குறைதலு மிகலு மின்றியோர் சமமாக்
கொண்டுகண் டுயின்றுபின் விழிக்கி
லுறுசுகா தனத்தி லெழுதுசித் திரமொத்
துறைகுவ ரிறைதலை கழுத்தூன்
செறியுடல் வாங்கா தோங்கநே ரவற்பாற்
சேருமோ காமநோய் சிறிதும். 87

அறவு நித்திரையைத் துறந்திடின் உடல்கண்
அடைதரும் பிணிகள் மற்றதனால்
குறைதலும் மிகலும் இன்றி ஓர் சமமாக
கொண்டு கண்துயின்று பின் விழிக்கில்
உறுசுகா தனத்தில் எழுது சித்திரம் ஒத்து
உறைகுவர் இறைதலை கழுத்தூன்
செறியுடல் வாங்காது ஓங்க நேர் அவர்பால்
சேருமோ காமநோய் சிறிதும்.

எ.து. : மிகவும் நித்திரையைத் துறந்தால் தேகத்தின்கண் வியாதிகள் வந்து பொருந்தும்; அதனால் குறைதலுமின்றி மிகுதலும் இன்றி ஒரு சமமாகக் கொண்டு நித்திரை பண்ணிப் பின்னர் விழிக்கும் இடத்துப் பொருந்திய சுகாதனத்திலே இறையளவு ஆயினும் தலையும், கழுத்தும், ஊன்செறிந்த உடலும் வளையாது நேரே ஓங்க எழுதிய சித்திரம்போல் இருப்பார். அவரிடத்து வந்தடையுமோ காம வியாதி சிறிதாயினும் என்றவாறு.

சுகாதனமென்றது தமக்குக் கைவந்த பத்மாதனம் முதலிய ஆதனங்களை இதனுட்கூறிய இலக்கணத்தோடும் ஆதனம் காட்டிச் சமாதியில் இருப்போர்க்குக் காமம் வந்தடையாது என்பது காண்க.

குறைதலும் மிகுதலும் இன்றி ஓர் சமமாகக் கொண்டு கண்டுயின் என்றதற்கு உதாரணம் : பரமார்த்த தரிசனம்.

எண்டிகழும் யோகத்தை இப்பரிசின் எப்பொழுதுங்
கொண்டு பயில் வார்கடைக்கால் என்னையே கூடுவரால்
உண்டியினின் மிகுவார் ஊண்துறப்பார் மிக்குறங்குவார்
கண்துயிலை அறத்துறப்பார் அவர்க்கிதுகை வாராதால்.

*(மிகுந்த உணவினை உண்பார். ஊண் உடலைத் துறப்பர். மிக்கு உறங்குவார். கண்மூடி உறங்குவதைத் துறப்பார். இவர்களுக்கு யோகநிலை கைவராது இந்த நெறியில் நின்றவர்கள் இறுதியில் என்னைக் கூடுவார்கள்.)*

*என்றும், தத்துவராயர் அமிர்தசாரம்.*

"செவ்வேய் உடலுஞ் சிரமும் கழுத்தும் உற
எவ்வா தனத்தில் இருந்தவர்க்குங்கைவந்தால்
வாத முதனோய் நலியா மதியுடையோர்
ஆதனம் என்பது அது",

*(உடல், சிரம், கழுத்து இவை நேராக இருந்து எந்தவகை (எவ்வா-தனத்தில்) யான ஆசனத்தில் இருந்தாலும் சரி வாதம் முதலான நோய்கள் வராது. அதுவே மதியுடையார் சொல்லும் ஆசனம்.)*
*(ஆதனம் - ஆசனம்)*

*என்றும் வரும் மற்றம் வருவனவற்றால் காண்க.*

உறக்கமும் பசியு மிகுந்திடிற் காம
முற்றிடா தற்றபோழ் துள்ள
மிறக்குமொண் சமாதி யடைதலி னடையா
ரிடையிலு மடுபவத் துயரை
மறக்கலா மையினா லச்சமும் வீட்டை
மதித்தலா லிச்சையு முடலை
வெறுக்குநிக் கிரகத் தாற்களிப் பறலு
மேவலான் மேவிடா ததுவே. 88

*உறக்கமும் பசியுமிகுந்திடில் காமம்*
*உற்றிடாது அற்ற போழ்து உள்ளம்*
*இறக்கும் ஒள் சமாதி அடைதலின் அடையா*
*இடையிலும் அடுபவத் துயரை*
*மறக்கலா மையினால் அச்சமும் வீட்டை*
*மதித்தலால் இச்சையும் உடலை*
*வெறுக்கு நிக்கிரகத்தால் களிப்பறலும்*
*ஏவலான் மேவிடாது அதுவே.*

எ.து. : நித்திரை மிகுந்த காலத்தும் பசி மிகுந்த காலத்தும் காமம் வந்து பொருந்தாது. அந்த நித்திரை பசி இல்லாத காலத்தும் ஒள்ளிய ஞான சமாதி கூடுதலின் உள்ளம் இறந்துபோம் ஆகலின் அஃது அடையாது. அந்நித்திரை பசி சமாதிகளுக்கு இடையிடையே காமம் தோன்றாதோ என்னின் அவ்விடையிலும் வருந்தா நின்ற பிறவித் துன்பத்தை மறவாமையால் பயமும் வீட்டின்பத்தை என்றைக்கு அடைவோமோ என்று அதனைக் கருதுதலால் ஆசையும் அன்னபான் ஆதிகளை ஒறுத்தல் முதலியவற்றால் உடலை வெறுக்கும் நிக்கிரகத்தால் மனச் செருக்கின்ற இருத்தலும் பொருந்துதலால் காமநோய் பொருந்தாது என்றவாறு.

நித்திரை மிகுந்தவிடத்தும், சமாதி கூடுமிடத்தும், மனம் இறத்தலினாலும், பசி மிகுந்த இடத்தும், உடலை நிக்கிரகிக்கும் இடத்தும் மனக்களிப்பு அறுதலினாலும், பிறவித்துன்பத்தை நினைக்கும் இடத்தும், வீட்டின்பத்தை நினைக்குமிடத்தும் பயமும் ஆசையும் தோன்றலாலும், காமம் மேவுதற்கு இடம் இன்மையால் மேவிடாததுவே என்றார். இவை இரண்டு பாட்டாலும் காமம் அடையாது இருத்தற்கு உபாயங் கூறினார்.

அடுபவத் துயரை மறக்கலாமையினான் என்றதற்கு உதாரணம் : காசி காண்டம்

கருவிடை யெய்தும் துன்பமும் நிலத்தின்
　　கண்ணுறிற் கொடிய வெந்நோயான்
மருவு வெந்துயரு நரைதிரை எய்தி
　　வருந்திடுந் துன்பமுங் கூற்றால்
உருவினை ஒருவுந் துன்பமும் ஈட்டுங்
　　கருக்குழி ஒன்றுறு துயரும்
வெருவர எண்ணி இன்பவீடு அதனின்
　　மேவநன் குணர்தலே வேண்டும்.

கருப்பத்தில் இருக்கையில் அடையும்துயரையும், பூமியில் பிறந்தால் கொடியவெவ்விய நோயால் பொருந்திய துயரையும் நரைதிரைகளை அடைந்து வருந்துகிற துயரையும் இயமனால் சரீரத்தை ஒழியுந் துயரையும் திரும்பவும் கருக்குழியில் பொருந்துகின்ற துயரையும் நினைத்து மோட்ச வீட்டினை அடைதற்குரிய வழியை நன்றாகத் தெரிதல் வேண்டும்.

என்றும், சிவதருமோத்தரம்,

பொற்கடத்தின் மலம் பொருந்திற்
புல்லியரும் பொருணசையால
அக்கடத்தைப் பற்றியிடார்
அங்கையினால் அவனிதனின்
மக்கள்தமது உடலினைத்தாம்
மலபாண்டம் என அறிந்தும்
எக்கணக்கால் இகழாதே
அருவருப்பற்று இருக்கின்றார்.

*(பொன்னாலாகிய குடத்தில் மலத்தை இட்டு வைத்தால் கீழ்மக்களும் அக்குடத்தைக் கையால் தொடுதலை விரும்பார். மக்கள் தமது உடல் மலபாண்டம் என அறிந்தும் எந்தச் சூழலிலும் இகழாமல் அருவருப்பு அற்று இருக்கின்றார்.)*

*என்றும் வரும் - மற்றும் வருவனவற்றால் காண்க*

எங்குள புனன்மற் றிதுகழீஇ யிடுதற்
கென்றுகா லிடைப்படு மசுத்தக்
கங்குடல் குலையு மொருமகன் மலம்புக்
காடவு நாடுமே யதுபோற்
பொங்குபுன் மலவூன் பொதியிதென் றொழிப்ப
லெனவரு வருத்துடல் பொறுக்குந்
துங்கமா தவற்கு மெங்ஙன மடவார்த்
தோயவு நேயமுட் டோன்றும். 89

*எங்குள புனன் மற்றிகழிஇ இடுதற்கு*
*என்று காலிடைப்படும் அசுத்தம்*
*அங்குடல் குலையும் ஒருமகன் மலம்புக்கு*
*ஆடவு நாடுமே அதுபோல்*
*பொங்குபுன் மலவூன் பொதியிது என்று ஒழிப்பல்*
*எனஅரு வருத்துடல் பொறுக்கும்*
*துங்க மாதவற்கு எங்ஙன மடவார்த்*
*தோயவும் நேயம் உள் தோன்றும்.*

*எ.து. : எவ்விடத்தில் உள்ளது நீர் இதனைக் கழுவுதற்கு என்று காலின் இடத்துப்பட்ட அசுத்தத்திற்கு அவ் அசுத்தம்பட்ட அவ் இடத்திலே தானே மனம் பொறாது உடல் நடுக்குறும் ஒரு சுத்த புருடன் ஆனவன். மலங்களே நிறைந்துள்ள தடாகம் புகுந்து மூழ்கவும் நினைப்பனோ அவன்போல் உள்ளே நிறைந்த புல்லிய மலங்கள் புறத்திலே நவத்து*

வாரங்களிலும் கசிந்து ஒழுகா நின்ற மாமிசச் சுமையாகிய இதனை என்றைக்கு நீக்குவேன் என்று உள்ளத்தில் அருவருப்புடனே உடலைத் தாங்கா நின்ற உயர்ச்சி பொருந்திய மாதவத்தினை உடையவனுக்கும் எப்படி மடவாரைக் கூடவும் அன்பு மனத்தின்கண் தோன்றும் என்றவாறு.

காலில்படும் அசுத்தத்திற்கு உடல் குலைந்து நீர்தேடும் ஒரு மகன். மலதடாகத்தில் மூழ்க நினையாமைபோல் உடலை மலப்பொதி என்று அறிந்து இதனை என்றைக்கு நீக்கிக் கொள்வேன் என்று மனத்தில் அருவருப்புற்று இதனை நீக்குதற்கு ஏதுவாகிய வீட்டினைக் கருதும் மாதவன். அசுத்த மீது அசுத்தமாய் வரும் மாதர் கூட்டுறவினை நினையாது என்பது காண்க.

அருந்தவம் புரிவோ ரெதிருரு வசிதா
ணாதிய மாதவர்வந் துள்ளம்
வருந்திநின் றியாது புரியினு நோக்கார்
மற்றிவ ணுற்றமா தரையும்
பொருந்துமோர் வெளின்மீ தேறவிட் டுளநாய்
போனனி நோக்குமென் போல்வா. 90
ரிருந்துள விடத்தாங் கவர்வரின் விழியோ
டென்படு மோபதைத் திதயம்.

அருந்தவம் புரிவோர் எதிர் உருவசிதான்
ஆதிய மாதவர் வந்து உள்ளம்
வருந்தி நின்று யாது புரியினும் நோக்கார்
மற்று இவண் உற்ற மாதரையும்
பொருந்தும்ஓர் வெளின் மீது ஏற விட்டுளநாய்
போல் நனி நோக்கும் என் போல்வார்
இருந்துள இடத்து ஆங்கவர் வரின் விழியோடு
என்படுமோ பதைத்து இதயம்.

எ.து. : அரிய தவத்தினைப் பண்ணாநின்ற பெரியோர் முன்னர் ஊர்வசி முதலிய அரம்பை மாதர் வந்து எங்கள் உபச்சார பணிவிடைகளைக் கைக்கொண்டு அருளித் தேவரீர் எங்கள் மீது காருணியம் வைக்க வேண்டும் என்று கூறி உள்ளம் வருந்தி நின்று யாது செய்தார் ஆயினும் அவ்வுபசாரப் பணிவிடைகளைக் குறித்தாயினும் அவரைப் பாரார். அவர் நீங்கலாகிய இந்நிலத்துள்ள மாதரையும் பொருந்தாநின்ற ஓரணிலை மரத்தின் மீதே ஏற விட்டுள்ள நாய் அதனைப்

*பார்த்தலினாலே தனக்குப் பயன் இன்றாயிருந்தும் பார்த்தல்போல் அவரைப் பார்த்தலினாலே தமக்குப் பயினின்றா இரு. மிகவும் பாரா நின்ற என்போல்வார் இருந்த விடத்தில் அந்த அரம்பை மாதர் வந்தாராயின் கண்ணுடனே மனமும் பதைபதைத்து என்ன பாடுபடுமோ யாம் அறியோம் என்றவாறு.*

*வெளின் மீது ஏற விட்டு உள நாய் போல் நனி நோக்கும் என்றார் "அணில் ஏற விட்ட நாய்போல் ஏன் பார்க்கின்றாய்" என்பது ஓர் உலக வழக்கச் சொல்லாகலின் விழி பதைத்தல் - காம விருப்பினாலே பிறழ்ந்து நோக்குதல்.*

**பெற்றதாய் முதலோர்ப் புரையமா தரையெண்**
**பெருந்துற வடைந்துளோன் தவழுஞ்**
**சிற்றொரு மினைத்தன் மனையென வினோதத்**
**திறத்துரைப் பினுமுனங் கிரகத்**
**துற்றநா டனது மகடனை யவண**
**முரைத் திடா மையிற்பழு தென்றாற்**
**பொற்றொடி யவர்தோ டழுவவும் விழைதல்**
**புரியினென் னாங்கொலவ் வறமே.** 91

*பெற்றதாய் முதலோர்ப் புரைய மாதரை எண்*
*பொருந்துற அடைந்துளோன் தவழும்*
*சிற்றொரு மினைத்தன் மனையென வினோதத்*
*திறத்து உரைப்பினும் முனங் கிரகத்(து)*
*உற்றநாள் தனது மகள்தனை யவணம்*
*உரைத் திடாமையில் பழுது என்றால்*
*பொற்றொடியவர் தோள் தழுவவும் விழைதல்*
*புரியின் என்னாங் கொல் அவ்வறமே.*

*எ.து. : தன்னைப் பெற்றதாய் முதலானோரைப் போல மாதர்களை எல்லாம் கருதா நின்ற பெரிய துறவினை அடைந்தவன் தவழ்கின்ற சிறிய ஒரு பெண்ணினைத் தனது மனைவி என்று வினோத முறைமையால் சொல்லினும் முன்னம் இல்வாழ்க்கையிலிருந்த காலத்துத் தனது மகளை அங்ஙனம் சொல்லாமையினால் அங்ஙனம் சொல்லுவதும் குற்றமா என்றால், பொன்னாலாகிய தொடியினை உடையராது தோளினை அணையவும் மனத்தின்கண் விரும்புதல் செய்யின் அத்துவறத்தினை எதனோடு சேர்த்தலாகும். என்றவாறு,*

*துறவறத்திற்கு மகளிரை விழைதல் மிகவும் ஆகாமையால்*

அத்துறவறம் போயதாய் வைத்தும் அதனைப் பிரமசரியம். இல்வாழ்க்கை, வானப்பிரத்தம் என்னும் இவைகளோடும் சேர்த்தல் ஆகாமையால் என்னாங்கொல் அவ்அறமே என்றார்.

சிறந்தகற் புடைய மாதரும் பரத்தை
யருமலாத் தெரிவையர் புவிமேற்
பிறந்தநாட் பிறந்தான் போலுநெஞ் சகத்தைப்
பிரிநடை யுரியனா மொருவ
னிறந்ததன் னிச்சை யெவணமவ் வண்ண
மிகத்திலுஞ் செயப்படா துடலைத்
துறந்தகா லையிலு நரகில்வீழ்த் தியம
தூதுவர் வருத்தலி னன்றே. 92

சிறந்த கற்புடைய மாதரும் பரத்தை
யரும்அலாத் தெரிவையர் புவிமேல்
பிறந்தநாள் பிறந்தான் போலு நெஞ்சகத்தைப்
பிரிநடை உரியனாம் ஒருவன்
இறந்த த்ன்னிச்சை எவ்வணம் அவ்வண்ணம்
இகத்திலும் செயப்படாது உடலைத்
துறந்த காலையிலும் நரகில் வீழ்த்தியது இயம
தூதுவர் வருத்தலின் நன்றே.

எ.க. : மகளிர் இலக்கணம் எல்லாம் சிறந்துள்ள கற்புடைய மாதரும் வேசை மாதரும் அல்லாத வியபிசாரமாதர் புவியின் கண்ணே பிறந்த நாளிலே பிறந்தவன் போலும், நெஞ்சகத்திலே வஞ்சகத்தை வைத்துக் கொண்டு தவத்தோர் நடைபோல் வாக்குக் காயங்களில் நெஞ்சகத்தைப் பிரித்துப் பிறர்க்குக் காட்டும் நடைக்கு உரியனாகி ஒருவன் தனது மிகுந்த ஆசை எப்படியோ அப்படி இம்மையிலும் செய்யக்கூடாத படியினாலும், உடம்பினை நீங்கிய மறுமைக் காலத்திலும் அமதூதுவர் நரகத்தில் வீழ்த்தி வருத்தலினாலும் என்றவாறு.

கற்புடைய மகளிருக்கு இம்மை மறுமைகளிலும் இன்பம் : பரத்தையருக்கு இம்மையில் இன்பம்; வியபிசார மாதருக்கு இம்மை மறுமைகளிலுந் துன்பம். அவர் போலச் சுத்த தவத்தினருக்கு நிராசை முதலியவற்றால் இம்மையிலும் தபோபலத்தால் மறுமையிலும் இன்பம் என்பதும் இல்வாழ்வானுக்கு இம்மையில் இன்பம் என்பதும் கூடா ஒழுக்கம் உடையோனுக்கு இம்மை மறுமைகளிலும் துன்பம் என்பதும் காண்க. வி்யபிசார மாதர் தன்மைபோல் நெஞ்சகத்தைப்

பிரிநடையுடையோன் தன்மையும் இருத்தலின் பரத்தை அருமலாத் தெரிவையர் புவிமேல் பிறந்தநாள் பிறந்தான் போலும் என்றார். எங்குளபுனன்மற்று என்பது முதல் இந்நான்கு பாட்டாலும் தவத்தோர்கள் மனம், விழி, மெய்களினால் மகளிரை நினைக்கலாகாதென்றும், பார்க்கல் ஆகாதென்றும், கூடலாகாதென்றும் கூறியவாறு காண்க.

மைப்படு விழியா ரின்பமோர் முள்ளி
மலரின்வாய்த் தேனையொப் பெனக்கண்
டொப்பில்பே ரின்பம் வேண்டினோன் வேண்டி
யுலகர்வே றெவைகொடுத் திடினுந்
துய்ப்பமற் றுடுப்ப விரண்டுமே யன்றித்
தொடுவனோ பிறிதிவற் றினுக்கூர்
குப்பைசா ரிடம்புக் கிடுதலி னவற்றைக்
குறித்தொரோ ரிடம்புகா மையினே. 93

மைப்படு விழியார் இன்பம் ஓர் முள்ளி
மலரின்வாய்த் தேனை ஒப்பு எனக் கண்டு
ஒப்பில் பேரின்பம் வேண்டினோன் வேண்டி
உலகர் வேறு எவை கொடுத் திடினும்
துய்ப்ப மற்று உடுப்ப இரண்டுமே அன்றித்
தொடுவனோ பிறிது இவற்றினுக்கு ஊர்
குப்பைசார் இடம் புக்கிடுதலின் அவற்றைக்
குறித்தோர் இடம்புகா மையினே.

எ.து. : மை பொருந்திய கண்ணினை உடைய மாதரால் வரும் இன்பம் ஒரு முள்ளி மலரின் கணுள்ள தேனுக்குச் சமானம் என்று கண்டு துறந்து ஒப்பற்ற பேரின்பத்தை அடைய விரும்பினோன் உலகத்தார் தன்னை வேண்டிக் கொண்டு வேறே எவற்றினைக் கொடுத்தார் ஆயினும் உண்பனவும் உடுப்பனவுமாகிய இரண்டுமே அன்றிப் பிறிது ஒன்றினையும் கையினாலும் தீண்டுவனோ? ஆனால் இவை இரண்டையும் வாங்கலாமோ? என்னில், இவற்றினைக் குறித்து ஊரினிடத்தும் குப்பைசாரி இடத்தும், செல்லுகையால் இவை வாங்கிக் கொள்ளலாகும்; மற்றை அவற்றினைக் குறித்து ஓரிடத்திலே செல்லாமையால் அவற்றினை வாங்கலாகாது என்றவாறு.

இல்வாழ்க்கையின் இன்பத்தை அற்பம் எனத் துறந்து பேரானந்தத்தை அடையத் தொடங்கினோன் தன்னைப் பிறர் வந்து பின் சென்று எவற்றினைக் கொடுப்பினும் உண்பனவும், உடுப்பனவும்

அன்றிப் பிறிது ஒன்றனையும் அங்கீகரிக்கலாகாதென்பது கண்டு கொள்க.

மைப்படுவிழியாரின் இன்பமோர் முள்ளி மலரின் வாய்த் தேனை ஒப்பெனக் கண்டு என்றதற்கு உதாரணம் : அனந்த போதம்.

"கள்ளக் கோலக் கருங்குழன் மாதர்பான்
முள்ளித் தேனை முனிந்துயர் முத்தியாம்
வெள்ளத் தேனை விரும்பும் விடாயினான்
எள்ளிற்போதும் இராது உடன் ஏகினான்"

(கரிய கூந்தலை உடைய மாதர்பால் தோன்றும் இன்பம் முள்ளிப்பூவில் தோன்றும் தேனளவு இன்பம். அதை முனிந்து முத்தியாகிய வெள்ளம் போன்ற தேனை விரும்பினான், எள்ளளவு நேரம் கூட இராது செல்குவான்.)

எனவரும் மற்றும் வருவனவற்றால் காண்க.

தனைநனி யிரந்து வருந்திமற் றொருவன்
சந்தன மாதிய பூசி
யினமலர் மாலை புனையினு முனியா
விழுத்துவை தடித்துதைத் துடலிற்
பினைமல மாதி பூசினு மன்னோன்
பிரியமப் பிரியமொன் றின்றி
வினைவழி முனைவ னைந்தொழில் புரியும்
விதத்தையே நோக்கியுண் மகிழும் 94

தனைநனி இரந்து வருந்தி மற்றுஒருவன்
சந்தனம் ஆதிய பூசி
இனமலர் மாலை புனையினும்
இழுத்து வைத்து அடித்து உதைத்து உடலிற்
பினை மலம் ஆதி பூசினும் அன்னோன்
பிரியம் அப்பிரியம் ஒன்று இன்றி
வினைவழி முனைவன் ஐந்தொழில் புரியும்
விதத்தையே நோக்கி உள் மகிழும்.

எ.து. : பிறன் ஒருவன் வந்து தன்னை மிகவும் வருத்தி வேண்டிக் கொண்டு சந்தனம் முதலிய பூசி நானாவாயுள்ள மலர்களினால் இயற்றப்பட்ட மாலைகளைத் தரித்தான் ஆயினும், அவை அன்றிக் கோபித்து இழுத்து வைத்து அடித்து உதைத்து உடம்பின் கண்ணே

பின்னர் மல முதலியற்றைப் பூசினான் ஆயினும் அந்தத் தவத்தினோன் நன்று செய்தான் என்றும் தீது செய்தான் என்றும் கருதி, விருப்பும் வெறுப்பும் சிறிதாயினும் இல்லாமல் தனது நல்வினை தீவினைகளுக்கு ஈடாக அவன் அவள் அது முன்னிலையாகச் சுகதுக்கங்களை ஊட்டுதற்கு இறைவன் செய்யும் பஞ்சகிருத்தியம் என்று அறிந்து, அப்பஞ்சகிருத்தியம் செய்யும் விதத்தையே பார்த்து, உள்ளே மகிழ்ந்து இருப்பான் என்றவாறு.

ஒருவன் சந்தனமாதிய பூசி இனமலர் மாலைகளைப் புனையினுமுனியா இழுத்து வைது அடித்து உதைத்தது உடலிற் பினை மலமாதி பூசினும் என்றதற்கு உதாரணம் :

"வையினு வாழ்த்தினு மலர்கொடு ஏத்தினும்
வெய்யவர் ஆவிடை வீழ நூக்கினும்
எய்யினும் எறியினும் இயாது செய்யினும்
நைவொடு மகிழ்வில் ஞானி சீலமே"

(வைதாலும், வாழ்த்தினாலும், மலர்கொண்டு ஏத்தினாலும், உயர்த்தினாலும், கொடிய பாம்பினிடை விழும்படி வீசினும் விட்டுவிடினும், யாது செய்யினும் துன்பமும் இன்பமும் இல்லாது இருத்தலே ஞானியின் ஒழுக்கம்.)

என வரும், மற்றும் வருவனவற்றால் காண்க.

தந்தைதாய் பலமா தியகொடுத் திடவுந்
தக்கைபுண் செவியினுக் கிடவு
மைந்தவா வெனலுங் குதித்தெழுந் தோடி
வருதல்போ குதல்செயு மகவி
னைந்தொழில் புரிய மெந்தையூழ் வழியீந்
தருள்சுக மாதிய வருங்காற்
சிந்தையுள் விழைந்து முற்செலா ரப்ழிந்து
பிற்செலார் மாசறத் தெளிந்தோர். 95

தந்தைதாய் பலம் ஆதிய கொடுத்திடவும்
தக்கை புண் செவியினுக்கு இடவு
மைந்த வா எனலும் குதித்து எழுந்து ஓடி
வருதல் போகுதல் செயு மகவின்
ஐந்தொழில் புரியும் எந்தை ஊழ் வழியீந்(து)
அருள்சுகம் ஆதிய வருங்கால்

சிந்தையுள் விழைந்து முற்செலார் அழிந்து
பிற்செலார் மாசு அறத் தெளிந்தோர்.

எ.து. : தந்தையும் தாயும் முப்பழ முதலிய பழங்களைக் கொடுக்கவும், புண் பொருந்திய செவிக்குத் தக்கை இடவும், மைந்தா வா என்று அழைத்தவுடனே குதித்தெழுந்தோடி வருதலும், குதித்து எழுந்து ஓடிப் போகுதலும், செய்யும் பிள்ளை போலப் பஞ்ச கிருத்தியங்களையும் பண்ணாநின்ற எமது தந்தை ஆகிய இறைவன் ஊழ்வினைப்படியே கொடுத்து அருளிய சுகதுக்கங்கள் வருமிடத்துச் சுகம் என்று மனத்தின்கண் விரும்பி முன் சென்று பற்றார்; துன்பம் என்று மனத்து ஈடழிந்து பின் சென்றடையார்; முக்குற்றங்களும் அற வேத ஆகமங்களைத் தெளிந்த பெரியோர் என்றவாறு.

இவை இரண்டு பாட்டாலும் தவத்தினர் சீவர்கண் முன்னிலையாகச் சுகதுக்கங்கள் வந்தவிடத்து அச்சீவச் செயலாக நாடாது சிவச் செயலாக நாடி விருப்பு வெறுப்பின்றிச் சமபாவனையோடு இருக்க வேண்டும் என்று கூறியவாறு காண்க.

இத்தரை யிடைப்பா ழாயவா லயமற்
றிஇருண்மிகு முடுக்கரா திகளிற்
சுத்தமெய்த் தவரெப் பொழுதடைந் துறினுந்
தோன்றுறா தச்சமங் கவர்பா
லத்தனிவ் வுடலைப் புரக்குஞான் றழிப்பா
ரிலையவ னேபினு மழிக்கின்
வைத்திவண் புரப்பா ரிலையெனுந் துணிவு
மனத்தினு ளிருத்தலி னன்றே. 96

இத்தரை இடைப்பாழ் ஆய ஆலய மற்(று)
இருள்மிகு முடுக்கர் ஆதிகளில்
சுத்தமெய்த தவர் எப்பொழுது அடைந்துறினும்
தோன்றுறா அச்சம் அங்கு அவர்பால்
அத்தன் இவ்வுடலைப் புரக்கு ஞான்று அழிப்பார்
இலையவனே ஏபினும் அழிக்கின்
வைத்திவண் புரப்பார் இலை எனும் துணிவு
மனத்தினுள் இருத்தலின் நன்றே.

எ.து. : இந்தப் பூமியின்கண்ணே பாழ்ங்கோயில் இருள் மிகுந்த மலைக்கெவி முதலிய இடங்களிலே பரிசுத்தமாகிய சத்திய தவத்தோர் எக்காலத்திலே சென்றிருந்தார் ஆயினும், அவ்விடத்திலே பாம்பு

முதலியவற்றால் துன்பம் வரும் என்று அவரது மனத்தின் கண்ணே பயம் தோன்றாது; இறைவன் தான் படைத்த இவ்உடலைக் காக்கும் நாளில் அழிப்பார் ஒருவரும் இல்லை. படைத்துக் காக்கும் அவனே பின்னரும் அழிக்கும் இடத்தில் இந்நிலத்தின்கண் வைத்துக் காப்பார் ஒருவரும் இல்லை என்னும் நிச்சயம் அவரது மனத்தின்கண்ணே இருத்தலினால் என்றவாறு.

இதன் உள்ளே பாழ்ங்கோயில் முதலிய இடங்களிலே ஏகாந்தமாய் இருக்கும்போது இராக்காலங்களிலும் சிவச்செயலை நாடிப் பயப்படாது இருக்க வேண்டும் என்று கூறியவாறு காண்க.

**ஊனையோம் புதல்கை விடுத்துனை யுவப்பா**
**ருணர்ரென் றாளுடை நம்பி**
**தானுரைத் தமையா னுடல்விழைந் திடினத்**
**தத்துவ நிலையுங்கை தவறி**
**யீனமார் பிறப்புற் றிடுவனைந் தொழிற்கு**
**மிறையதி காரியென் றெண்ணா**
**ஞானமொன் றனையே தொடருமோர் புருட**
**னண்ணுவன் பரகதி திண்ணம்.** 97

*ஊனை ஓம்புதல் கைவிடுத்து உனை உவப்பார்*
*உணர்வர் என்று ஆளுடை நம்பி*
*தானுரைத்த மையால் உடல் விழைந்திடின்அத்*
*தத்துவ நிலையும் கைதவறி*
*ஈனமார் பிறப்புற்றிடுவன் ஐந்தொழிற்கும்*
*இறை அதிகாரி என்று எண்ணா*
*ஞானம் ஒன்றனையே தொடருமோர் புருடன்*
*நண்ணுவன் பரகதி திண்ணம்*

எ.து. : ஊன் பொருந்திய உடம்பினைப் பாதுகாத்தல் கைவிட்டு உனது திருவடியை விரும்புவார் அதனை அறிவார் என்று என்னை ஆளாக உடைய சுந்தரப் பெருமான் நாயனார் ஓதினமையால் தான் உடலைப் பாதுகாத்தற்கு விரும்பிடின் அந்தப் பரதத்துவ நிலைமையை அறியும் அறிவும் தன்னை விட்டு நீங்கித் தன்னால் உடலைப் பாதுகாக்கக் கூடாமையால் அவ்வுடலும் நீங்கி மறுமைக்கண் இழிவு பொருந்திய பிறப்பினையும் அடைவன் ஆதலின் பஞ்சகிருத்தியத்துக்கும் இறைவனே அதிகாரி என்று அறிந்து இவ்உடலை அவ்விறைவன் வசமா ஒப்பித்து, ஞானம் ஒன்றனையுமே விடாது பற்றும் ஒரு புருடன் பரகதியினை

அடைவான்; இது உண்மையாம் என்றவாறு.

ஊனை ஓம்புதல் கைவிடுத்துனை உவப்பாரும் உணர்வர் என்றதற்கு உதாரணம் : தேவாரம்.

**"தேனைக்காவல் கொண்டுவிண்ட கொன்றைச் செழுந்தாராய்**
**வானைக்காவல் கொண்டு நின்றார் அறியா நெறியானே**
**ஆனைக்காவில் அரனே பரனே அண்ணாமலை யானே**
**ஊனைக் காவல் கைவிட்டு உன்னை உகப்பாரும் உணர்வாறே".**

(கொன்றை மலர்களால் கட்டப்பட்ட மாலையை உடையவனே! வானைக் காவல் கொள்ளும் விண்ணவரும் அறியாப் பரம்பொருளே! திரு வானைக்கா அரனே! பரனே! திருவண்ணாமலையானே! உடலோம்பலை நீக்கி உன்னை விரும்பித் தொழுவாரே உன்னை அறிவார்கள்.)

என வரும் மற்றும் வருவனவற்றால் காண்க.

**உள்ளதுண் டாமற் றில்லதின் றெனவெண்**
**காடரோ திடுதலி னுறுமூழ்**
**தள்ளொணா மையினெவ் விதத்தினு நுழைந்து**
**தவம்புரி காலையூ னுயிரை**
**விள்ளல்செய் திடினு ஞானசாதகனுண்**
**மேவுமவ் வாதனை யொடும்போய்த்**
**தெள்ளியபோக முண்டுமீண் டடைவன்**
**சிவமதுற் பவமதொன் றிரண்டில். 98**

உள்ளது உண்டாம் மற்று இல்லது இன்றுஎன வெண்
காடர் ஓதிடுதலின் உறுமூழ்
தள்ளொணா மையின் எவ்விதத்தினு நுழைந்து
தவம்புரி காலை ஊன்உயிரை
விள்ளல் செய்திடினு ஞானசாதகன்உள்
மேவும் அவ்வாதனையொடும் போய்த்
தெள்ளியபோகம் உண்டு மீண்டு அடைவன்
சிவமது உற்பவமது ஒன்று இரண்டில்.

எ.து. : உள்ளது ஒளிப்பினும் உண்டாம் இல்லது ஒரு காலத்தும் இல்லை என்று திருவெண்காட நாயனார் ஓதுதலினாலே பொருந்தாநின்ற ஊழ்வினையை யாவராலும் தள்ளக் கூடாமையால் தான் தவத்தினைப் பண்ணுங்காலத்தில் அந்த ஊழ்வினை எந்த விதத்தால் ஆயினும் வந்து

பொருந்தித் தன் உடம்பினையும் உயிரினையும் வேறாக்குதல் செய்தாலும் ஞானசாதகனானவன் தன் உள்ளத்தின் கண் மேவிய அந்தச் சுத்தவாதனை உடனே ஊர்த்தலோகங்களிலே சென்றிருந்து சுத்தபோகங்களை அனுபவித்துப் பின்னர் மீண்டும் பூமியின்கண் வந்து ஒரு சனனம் இரண்டு சனனத்திலே பரிபூரண ஞானத்தினைப் பெற்று சிவத்தினை அடைவான் என்றவாறு.

அருந்தவ விலக்கிவ் வுடற்பரிப் பதுதா
 ணச்சமா திகடரு மூலர்
திருந்துநஞ் சிந்தை சிவன்கணே யாவர்
 வரினுமென் றமையிற்பே திப்பான்
பொருந்தினும் வானோ ரெதிர்முதிர் கொலைவெம்
 பூதமா தியவளைந் திடினு
மிருந்ததஞ் சமாதி நிலைகுலை யாதோ
 ரெண்ணிய வெண்ணியாங் கடைவர். 99

*அருந்தவ விலக்கி இவ்வுடல் பரிப்பதுதான்*
 *அச்சம் ஆதிகள் திருமூலர்*
*திருந்துநம் சிந்தை சிவன்கணே யாவர்*
 *வரினும் என்றமையில் பேதிப்பான்*
*பொருந்தினும் வானோர் எதிர்முதிர் கொலை வெம்*
 *பூதம் ஆதிய வளைந்திடினும்*
*இருந்ததம் சமாதி நிலைகுலை யாதோர்*
 *எண்ணிய எண்ணியாங்கு அடைவர்.*

*எ.து. : அரிதாகிய தவத்தினுக்கு மாறுபாடு இவ்வுடம்பினைத் தாம் பாதுகாக்குதல்; அதனால் பயம் ஆசை அபிமானம் முதலியன மனத்தின்கண் உண்டாம். ஆதலில் தவத்தினுக்கு இடையூறு செய்தற்கு யாவர் வந்தார். ஆயினும் நமது சிந்தை சிவனது திருவடியின்கண்ணே திருந்தா நிற்கும் என்று திருமூல நாயனார் கூறினமையால், மனத்தினைப் பேதிக்கும் பொருட்டுத் தமது எதிரே தேவர்கள் வந்தார் ஆயினும், முதிர்ந்த கொலையினைச் செய்கின்ற வெவ்விய பூதங்கள் முதலியவை வளைந்து கொண்டன ஆயினும், தாமிருந்த சமாதி நிலைமை வழுவாதிருந்தோர் தாம் எண்ணிய வீட்டு இன்பத்தினை எண்ணியவாறே அடைகுவார் என்றவாறு.*

*இத்தரை என்னும் பாட்டு முதல் இந்நான்கு பாட்டாலும் தவத்தினோர்கள் தாம் உடம்பினைப் பாதுகாத்தல் கைவிட்டு இவ்வுடம்பினைப் படைத்த இறைவனே காத்தலும் அழித்தலும்*

செய்வான்; அவனை அன்றிப் பிறர் ஒருவராலும் காத்தல் அழித்தல் செய்யக் கூடாது என்று அறிந்து அவ்இறைவன் செயலை நாடிப் பயம் ஆதிகள் இன்றி ஞான சமாதி கூட வேண்டும் என்று கூறியவாறு காண்க.

அருந்தவ விலக்கு இவ்வுடல் பரிப்பதுதான் என்றதற்கு உதாரணம் : தேவாரம்.

"நம் கடம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்கடம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்கடன் அடியேனையும் தாங்குதல்
என் கடன் பணி செய்து கிடப்பதே"

(கடம்பமாலைகளை அணிந்த முருகப்பெருமானை ஈன்றெடுத்த உமையம்மையைத் தனதொருபாகமாகக் கொண்டு திருக்கரக்கோயிலில் எழுந்தருளியுள்ள பெருமானின் கடன் அடியாரைத் தாங்குவது, என் போன்றோரின் கடன் அந்த இறைவனுக்கு என்றும் பணிசெய்து கிடப்பது.)

என்றும், திருந்து நம்சிந்தை சிவன் கணே யாவர் வரினும், என்றதற்கு உதாரணம் : திருமந்திரம்.

"இருந்து வருந்தி எழில்தவம் செய்யும்
பெருந்தன்மை ஆளரைப் பேதிக்க என்றே
இருந்து இந்திரனே எவரே வரினுந்
திருந்துநம் சிந்தை சிவனவன் பாலே"

(தனித்திருந்து சிவப்பேற்றை அடைய அரிதின் முயன்று அழகிய தவத்தினை இயற்றும் மன உறுதி பூண்டோரின் மனதை மாற்ற வேண்டும் என்று இந்திரனோ பிறதேவரோ யார் வந்தாலும் மயங்காது தம்முடைய மனதைச் சிவத்தின்பால் நிறுத்தியிருப்பார்கள்.)

என்றும், சமாதிநிலை குலையாதோர் எண்ணிய எண்ணியாங்கு அடைவர் என்றதற்கு உதாரணம். ஞானவாசிட்டம்

"எனக்கீதுஎன்னும் உணர்வுடைமை
    இடர்விட்டு அகலாத உணர்வு இன்மை
அனர்த்தம் இல்லா வீடளிக்கு
    ஆசையேது இங்கு அது செய்வாய்
சனிப்பில் சிவம் எங்கணும் உளது
    சாந்தம் சுபம் சித்து உருவு என்னும்

**கனத்து அவிந்த ஒரு நினைவே**
**கருமத்தியாகம் இராகவனே"**

*(இது எனக்கு உரியது என்னும் உணர்வு துன்பத்தைத் தரும். உணர்வின்மை குற்றமில்லாத வீடளிக்கும். இதில் உனது பிரியம் யாது துன்பத்தை அனுபவிப்பது வீட்டுலகை அடைவது. அதனைச் செய். பிறப்பல்லாச் சிவம் எவ்விடத்திலும் இருக்கின்றது. அமைதி, நலம், அறிவு, தோற்றம் என்னும் வலிமை மிக்க நினைவு கொண்டிருந்தால் வினைகளிலுருந்து விட்டு நீங்குவாய்.)*
*என வரும் மற்றும் வருவனவற்றால் காண்க.*

**தேவர்மா முனிவ ரசுரர்வா ளரக்கர்**
**சித்தவித் தியாரர் முதலோர்**
**யாவரும் விரும்பிச் சித்தபுத் திகளு**
**மெட்டுணை யச்சமா தியவுண்**
**மேவுறா தகற்றித் தவம்புரிந் தடைந்தான்**
**மேலதா மூலபண் டார**
**மோவற வவையே குடிகொளென் போனெஞ்**
**சுடையரா லடையவும் படுமே. 100**

*தேவர் மாமுனிவர் அசுரர் வாள் அரக்கர்*
*சித்த வித்தியா தரர் முதலோர்*
*யாவரும் விரும்பிச் சித்தி புத்திகளும்*
*எட்டுணை அச்சம் ஆதிய உள்*
*மேவுறாது அகற்றித் தவம்புரிந்து அடைந்தான்*
*மேலதாம் மூல பண்டாரம்*
*ஓவற அவையே குடிகொள் என்போல் நெஞ்*
*சுடையராம் அடையவும் படுமே.*

*எ.து. :* தேவர்களும் மகத்தாகிய முனிவர்களும் அசுரர்களும் இராக்கதர்களும் சித்தர்களும் வித்தியா தரம் என்று சொல்லா நின்ற இவர்கள் முதலியவர்களும் அட்டமாசித்திகளையும் மேலாகிய ஊர்த்த போகங்களையும் விரும்பும் காலைப் பயம் ஆசை கோபம் அபிமானம் முதலியவை எண்மாத்திரம் ஆயினும் மனத்தின்கட் பொருந்தாது மாற்றித் தவத்தினைப் பண்ணி அவற்றினை அடைந்தார் ஆனால், அந்தச் சித்தி புத்திகளுக்கு மேலாய் உள்ள வீட்டு இன்பமாகிய மூலபண்டாரத்தினை அந்தப்பய முதலியவை தாமே விட்டு நீங்காது

குடி கொண்டு இருக்கின்ற என்போலும் மனத்தினை உடையவரால் அடையவும் கூடுமோ என்றவாறு.

ஒருவனுக் கிருளற் றுரியசிற் சொரூப
முள்ளவா விளங்கினன் றறுமிப்
பருவர லுருவப் பற்றுமற் றதுநேர்
படுமள விறைபுரி தருமைங்
கருமமெவ் விடத்துங் கண்டுதற் செயலைக்
கைவிடுத் தச்சமா தியவுண்
மருவுறா தகற்றித் தவஞ்செயல் வழக்கால்
வாழியெங் குரவனீ டூழி. 101

ஒருவனுக்கு இருள்அற்று உரிய சிற் சொரூபம்
உள்ளவா விளங்கின் அன்று அறும்இப்
பருவரல் உருவப் பற்று மற்றது நேர்
படுமள வுஇறைபுரி தரும் ஐங்
கருமம் எவ்விடத்தும் கண்டுதற்செயலைக்
கைவிடுத்து அச்சம் ஆதியஉள்
மருவுறாது அகற்றித் தவம்செயல் வழக்கால்
வாழிஎங் குரவன் நீடூழி.

எ.து. : ஒரு புருடனுக்கு அஞ்ஞான இருட்டு நீங்கித் தனக்கு உரிய ஞானசொரூபம் உள்ளபடியே விளங்கும் ஆயின் இந்தத் துன்பம் செய்யாநின்ற தேகப்பற்று அன்றைக்கு நீங்கும். அந்த ஞானசொரூபம் தனக்கு நேராய் வந்து லபிக்கும் அளவும் இறைவன் செய்யா நின்ற பஞ்சகிருத்தியங்களை எவ்விடத்திலும் பார்த்துச் சீவச்செயலை விட்டு நீங்கிப் பய முதலிய துர்க்குணங்கள் மனத்தின் கண்ணே பொருந்தாது மாற்றித் தவத்தினைச் செய்வதே முறைமையாம். எமது ஞானாச்சாரியன் நீடூழி காலமும் வாழக்கடவன் என்றவாறு.

வைராக்கிய தீபவுரை முற்றுப்பெற்றது.

உ

# வைராக்கிய தீபம்

## செய்யுள் அகர நிரல்

உ

# வைராக்கிய தீபம்

## உதாரணச் செய்யுள் முதற் குறிப்பு அகர வரிசை

# வைராக்கிய தீபம்

## வடமொழிச்சொற்களும் – பொருளும்

பா.எண் : 1

1. சிருட்டிக்கப்பட்ட - படைக்கப்பட்ட
2. பிருதிவி - நிலம்
3. சன்னதி - முன்னிலை
4. அபின்னாசத்தி - பிரிவில் ஆற்றல்
5. பின்னாசத்தி - பங்கப்படத்தக்கது
6. துவிதபுத்தி - இரண்டென்னும் உணர்வு

பா.எண் : 2

1. அநாதியே - தொன்மை
2. பிரம்மம் - முதல் கடவுள்
3. பிரம்ம வேலை - பிரமமாகிய கடல்

பா.எண் : 3

1. சாமானாதிகம் - ஒப்பயர்வு
2. நிட்சேபம் - புதையற்பொருள்
3. அனுக்கிரகம் - அருள்
4. அசாத்திரப்பிரபஞ்சம் - பெருவழக்கற்றது
5. மோட்சம் - வீடு
6. அபிமானித்து - பற்றுக்கொண்டு

பா.எண் : 4

1. சாரம் - இனிமை
2. கிருபாநோக்கம் - அருள்பார்வை
3. தோத்திரம் - வாழ்த்து
4. மார்க்கம் - வழி

பா.எண் : 5

1. கிருபை - அருள்
2. நிட்காமிய தவம் - பயன்கருதாமை
3. சேதித்து - அழித்து
4. திலயம் - காத்தல், ஒடுக்கம், அழித்தல்
5. சிற்பரனருள் - அறிவுருவாகிய கடவுள்
6. உற்பவம் - தோன்றுதல்
7. சனனம் - பிறப்பு

பா.எண் : 6

1. கீண்டு - பிளந்து
2. அனுஞ்ஞை - இசைவு

பா.எண் : 7

1. போகம் - இன்பம்
2. துக்கா நித்தியம் - துன்பம் எப்பொழுதும்

பா.எண் : 8

1. மமகாரம் - எனது என்னும் பற்று
2. சகசீவபரம் - உலகு, உயிர், கடவுள்
3. நேத்திரம் - கண்

பா.எண் : 10

1. அஞ்ஞானம் - அறியாமை

பா.எண் : 11

1. சிலேத்துமங்கள் - சளி, கோழை

பா.எண் : 12

1. இராச்சியபாரம் - அரசியற் பொறுப்பு
2. மனுசானந்தம் - மனிதனுடைய மகிழ்ச்சி
3. நிரயம் - நரகம்
4. விவேகம் - பகுத்தறிவு
5. விசாரணை - ஆராய்ச்சி

பா.எண் : 14

1. ஞானானந்தமாய் - பேரின்பமாய்
2. அசுத்தம் - அழுக்கு
3. துக்கம் - துன்பம்
4. அநித்தியம் - நிலையின்மை
5. அநன்னியம் - பிரிவில்லலாமை

பா.எண் : 16

1. விடயபோகம் - பொருளின்பம்
2. தீபகம் - ஒருவகையான செய்யுள் அலங்காரம்

பா.எண் : 17

| | | |
|---|---|---|
| 1. விவேகி | - | அறிவுடையவன் |
| 2. விடயசுகம் | - | புலன் இன்பம் |

பா.எண் : 18

| | | |
|---|---|---|
| 1. விசாலம் | - | விரிவு |

பா.எண் : 19

| | | |
|---|---|---|
| 1. ரூபம் | - | வடிவு |

பா.எண் : 20

| | | |
|---|---|---|
| 1. சாத்திரமுகம் | - | நூலின் தொடக்கம் |

பா.எண் : 21

| | | |
|---|---|---|
| 1. வஸ்திரம் | - | ஆடை |

பா.எண் : 22

| | | |
|---|---|---|
| 1. நித்தியம் | - | அழிவின்மை |
| 2. சோணிதசுக்கிலம் | - | செந்நீர், வெந்நீர் |

பா.எண் : 24

| | | |
|---|---|---|
| 1. வார்த்திகன் | - | கிழவன் |

பா.எண் : 25

| | | |
|---|---|---|
| 1. தேகநாசம் | - | உடல் இழப்பு |
| 2. வத்திராபரணம் | - | ஆடை, அணிகலன் |
| 3. கந்தபுட்பம் | - | மணம் நிறைந்த மலர் |
| 4. ஆபற்சன்னியாசம் | - | ஆபத்துக் காலத்தில் பெருந்துறவு |

பா.எண் : 26

| | | |
|---|---|---|
| 1. அநித்திய விவேகம் | - | நிலையற்ற பகுத்தறிவு |

பா.எண் : 28

| | | |
|---|---|---|
| 1. சுகர்பிண்டம் | - | உட்துளை உடல் |

பா.எண் : 29

| | | |
|---|---|---|
| 1. சுருதிவிசாரணை | - | மறை ஆராய்ச்சி |
| 2. மித்தை | - | பொய் |
| 3. நிச்சய ஞானம் | - | உண்மையறிவு |

பா.எண் : 30

1. பிரமசாதகர் - இறைநெறி முயல்வோர்
2. பிரமவித்தை - ஆன்மீக ஞானம்

பா.எண் : 31

1. பரஞானம் - உண்மை மேலறிவு
2. அபரஞானம் - நூல் அறிவு
3. முக்கரணம் - மனம், மொழி, மெய்

பா.எண் : 32

1. லபித்தது - அடைந்தது (கை கூடியது போல்)

பா.எண் : 33

1. ஆசௌசமில் - அசுத்தம்
2. பிரம்மபீசன் - பிரமத்தை உணர்ந்தவன்

பா.எண் : 34

1. ஐக்கம் - ஒற்றுமை
2. அவ்வைக்கியம் - ஒன்றுபடாமை

பா.எண் : 35

1. அபாவம் - இன்மை

பா.எண் : 37

1. இந்திர நிக்கிரகம் - புலனடக்கம்
2. கரணவாதனை - கருவிகளினால் ஏற்படக்கூடிய துன்பம்
3. நிவிருத்தி - நீக்குதல்

பா.எண் : 41

1. திருட்டாந்தம் - எடுத்துக்காட்டு

பா.எண் : 42

1. நின்மல சித்தர் - குற்றமற்றவர்
2. மலின சித்தர் - கள்ளமனமுடையவர்

பா.எண் : 44

1. நிக்கிரகம் - அழிக்கை

பா.எண் : 45

1. பிரமானந்தம் - பேரின்பம்
2. சாத்தியம் - நிறைவேற்றக்கூடியது

பா.எண் : 46

1. சுத்தவிரதன் - பற்றற்ற தூயோன்

பா.எண் : 47

1. ஏகாந்தத்தானம் - தனியிடம்
2. இராசரீகம் - அரசாட்சி

பா.எண் : 50

1. பூரண கிருபை - நிறைவான அருள்
2. அநுக்கிரகம் - அருள்
3. காலதேசவர்த்தமானம் - காலம், இடம், நிகழ்ச்சிள்
4. மனோலயம் - மனம் ஒடுங்குதல்

பா.எண் : 51

1. பிரவிருத்தி - முயலுதல்

பா.எண் : 54

1. போசனங்கள் - உணவு

பா.எண் : 55

1. சீவகாருண்யம் - உயிர்களிடத்து அன்பு
2. சமபாவனை - பொதுநோக்கு
3. துவேடம் - வெறுப்பு

பா.எண் : 58

1. சத்தசாகரம் - ஏழ்கடல்.

பா.எண் : 61

1. கீர்த்தி - புகழ்
2. தற்பரானந்தம் - கடவுளனுபவம்

பா.எண் : 62

1. மனோவிசாரம் - மன ஆராய்ச்சி
2. சித்தசஞ்சலம் - மனக்கவலை

பா.எண் : 64

1. பரத்துவம் - மேன்மை
2. பராக்கிரமம் - வலிமை

பா.எண் : 65

1. விநோத வித்தை - புதுமையான விளையாட்டு
2. இந்திரசாலம் - கண் கட்டு மாயம்
3. கிருபாமூர்த்தி - அருளுருவினன்
4. வினோதிகள் சாலம் - ஒன்றில் ஈடுபட்டு அதிலேயே பொழுது கழிப்போர் கூட்டம்

பா.எண் : 66

1. திவ்வியாகமம் - தெய்வநூல்

பா.எண் : 67

1. ஈசுரபத்தி - சிவபக்தி
2. பாச வைராக்கியம் - உலகப் பொருள்களில் வெறுப்பு
3. பிரமஞானம் - மெய்யுணர்வு

பா.எண் : 68

1. நிமித்த காரணன் - வினை முதல்வன்
2. கிருபாசமுத்திரம் - அருட்கடல்
3. தூடணம் - வைதல் (திட்டுதல்)
4. பூடணம் - அணிகலன்

பா.எண் : 69

1. சாமார்த்தியம் - வல்லமை

பா.எண் : 71

1. அனந்த சொரூபம் - இன்ப வடிவம்

பா.எண் : 73

1. அட்டாங்கம் - எட்டு உறுப்பு
2. பஞ்சாங்கம் - ஐந்து உறுப்பு
3. சிட்டாங்கம் - மூன்று உறுப்பு
4. சிராங்கம் - தலையால் வணங்குதல்

பா.எண் : 74

1. கடாட்சம் - கடைக்கண்
2. மகாவாக்கியம் - மறைமுடிவின் பொருள்

பா.எண் : 75

1. ஞானசாரம் - அறிவு, ஒழுக்கம்

பா.எண் : 76

1. நித்திய கருமம் - நாட்கடமை
2. சகமுகம் - புறநோக்கு
3. அகமுகம் - உள்நோக்கு

பா.எண் : 78

1. சுக்கில வர்த்தனை - விந்து வளர்ச்சி

பா.எண் : 79

1. உதாரக்கினி - வயிற்றுத்தீ

பா.எண் : 82

1. கிருத்தியம் - தொழில்

பா.எண் : 84

1. புட்பசயனம் - பூப்பள்ளி
2. ஞானநிட்டை - இறைவனோடு ஆன்மா ஒன்றி நிற்கும் அனுபவ நிலை

பா.எண் : 91

1. பிரமசரியம் - ஓதுநிலை
2. வானப்பிரத்தம் - காடுறைதவம்

பா.எண் : 92

1. வியபிசாரமாதர் - ஒழுக்கமிலாள்

பா.எண் : 96

1. மலைக்கெவி - மலைக்குகை

பா.எண் : 99

1. அபிமானம் - பற்று

பா.எண் : 100

1. மூலபண்டாரம் - சேமவைப்பு

பா.எண் : 101

1. அஞ்ஞானம் - அறியாமை
2. ஞான சொரூபம் - அறிவுரு

